# ஹோமர்

# ஒடிஸி

7

உலக இலக்கிய வரிசை



சிவன்

# ஒடிஸி

## ஹோமர்

தமிழில்
சிவன்

**மின்னூலாக்கம் : செல்லா**

கலா நிலையம்
244, ராமகிருஷ்ணா மடம் சாலை
மயிலாப்பூர், சென்னை – 600 004

# ஓர் அறிமுகம்

இந்தியாவின் மகத்தான இரண்டு இதிகாசங்களான ராமாயணம், மகாபாரதம் போன்ற உன்னத இதிகாசங்களைக் கொண்ட மற்றொரு நாடு உலகில் உண்டென்றால், அது கிரேக்கம்தான்! இலியட், ஒடிஸி என்பவைதாம் அந்த இதிகாசங்கள். இலியட்டின் தொடர்ச்சிதான் ஒடிஸி.

இலியட், டிராய் நகரில் நடைபெற்ற கடுமையான நீண்டகாலப் போரை விவரிக்கிறது. இலியோஸ் எனப்படும் டிராய் நகரின் கதை என்பதுதான் இலியட்டின் பொருள்.

இந்த இதிகாசங்களைப் படைத்தவர் ஹோமர் என்ற கிரேக்கக் கவிஞர். கண்பார்வையற்றவரான இவர், இதில் இடம் பெற்றுள்ள சம்பவங்களையெல்லாம் ராகத்துடன் தெருவில் பாடிக் கொண்டே சென்றதாக வரலாற்றுக் குறிப்பு ஒன்று தெரிவிக்கிறது. இவர் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று நம்பப்படுகிறது. இப்படி ஒரு கவிஞரே பிறக்கவில்லை, இது அவரால் இயற்றப்படவுமில்லை என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது. ஆனால், பெரும்பான்மையானவர்களின் நம்பிக்கை, ஹோமர் இயற்றியவை இவை என்பதுதான்.

இன்றைய காலகட்டடத்தைப் போல் அச்சிடும் இயந்திரங்கள் எதுவும் இல்லாத காலத்தில், கவிதைகளைப் படைத்து உடனுக்குடனே சபைகளில் அரங்கேற்றும் கவிஞர்களுக்கு கிரேக்கத்தில் அந்த நாளில் உயரிய மதிப்பு இருந்தது. மக்களை மகிழ்ச்சிப்படுத்தும் பாடல்களைப் பாடித் திரிந்த அப்படிப்பட்ட ஒரு கவிஞராக ஹோமர் இருந்திருக்கலாம்.

ஹோமர் பாடிய இந்தக் கவிதைகளை, பிற்காலத்தில் தலைநகரான அலெக்ஸாண்ட்ரா நகரில் வாழ்ந்த புலவர்கள் தொகுத்து வரைமுறைப்படுத்தினர். அவர்கள்தான் இதற்கு இதிகாசங்களின் வடிவத்தை வழங்கியவர்கள். பிற்காலத்தில் உருவான வீரசாகசச்

கதைகளுக்கெல்லாம் இந்த இரண்டுமே முன்னோடியாக விளங்கின. மேலைநாட்டுக் கதைகளில் இவற்றின் தாக்கம் தெளிவாகவே புலப்படுகிறது. கிரேக்கத் தத்துவ ஞானியான பிளாட்டோ, ஹோமரைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்: "எனது குழந்தைப் பருவத்தில் இருந்தே எனக்கு அவர் மீது மிகுந்த மதிப்பும், மரியாதையும் இருந்தது. அதுதான் எனது வார்த்தைகளுக்கு ஒரு கட்டுக்கோப்பையும், தொடர்ச்சியையும் அளிக்கிறது. அவர் மகத்தான ஒரு தலைவரும், ஆசார்யனும் கூட!"

பிரயாம் என்ற மன்னரின் பிள்ளைகளில் ஒருவனான பாரிஸ் மிகவும் அழகானவன். அவன் அதீனிதேவியின் அன்புக்குப் பாத்திரமானவனும்கூட. அவன் பேரழகியான ஹெலனைப் பற்றிக் கேள்விப்பட்டான். தந்திரமாக அவளை, அவளது கணவரிடமிருந்து கடத்திச் சென்றான். கிரேக்கர்கள் இதை ஒரு மானப் பிரச்சினையாகக் கருதி, டிராய் வீரர்களுடன் போரிட்டு ஹெலனைக் கைப்பற்ற முயன்றனர். அதற்காக ஒன்பது வருட காலம் கடுமையாகப் போராடினர். இதில் தேவர் கூட்டத்தைச் சேர்ந்தவர், இரண்டு பக்கத்திலுள்ளவர்களையும் அணி பிரிந்து ஆதரித்தனர். அந்தக் கால யவனர்களின் அதிர்ஷ்டம் மற்றும் துரதிர்ஷ்டங்களின் தொகுப்புதான் ஹோமரின் இலியட்.

ஆங்கில மொழிபெயர்ப்பில் ஏறத்தாழ இரண்டாயிரத்து ஐந்நூறு பக்கங்கள் கொண்ட இலியட்—ஒடிஸியின் பிற்பகுதி இது. டிராய் நகரப் போருக்குப் பிறகு, அந்தப் போரில் கலந்து கொண்ட ஒடிஸியஸ் தனது தாய்நாட்டுக்குத் திரும்புவதை விவரிக்கும் பகுதி. இதில் கடற்பயணத்தின் இன்னல்கள் மற்றும் தேவகோபங்களும் இடம்பெறுகின்றன. கிரேக்கர்கள் வீரத்துக்கும் மானத்துக்கும் அந்தக் காலத்தில் அளித்த மதிப்பை விளக்கும் சம்பவங்களை உள்ளடக்கியது.

தோழமையுடன்
சிவன்

சென்னை-600 0078.
தொலைபேசி 4837681

# ஒடிஸி

# I

இதிகாசமாகப் புகழப்பட்ட டிரோஜன் போர் முடிவடைந்தது. வெற்றிப்பெருமிதத்தில் திளைத்து மதிமறந்த ஒடிஸியஸும், அவனது வீரர்களும் தங்களது சொந்த நாடான இதாக்காவுக்குப் புறப்பட்டனர். பயணத்தின்போது அவர்கள் வழியிலுள்ள ஏராளமான இடங்களைக் கடந்தனர். அவற்றையெல்லாம் பார்த்து ரசித்தனர். ஒடிஸியஸின் ஆதரவாளர்கள் பணத்தின் மீது பேராசை கொண்டவர்களாக இருந்தனர். அதனால், பாதை நெடுகிலும் அவர்கள் பல விதமான ஆக்கிரமிப்புகளில் ஈடுபட்டனர். சூரியதேவனான ஹைப்பீரியோனின் கால்நடைகளைக் கொன்றதால், ‘ஒரு போதும் சொந்த நாட்டுக்குப் போக மாட்டீர்கள்!’ என்ற அந்தத் தேவனது சாபத்தையும் அவர்கள் பெற நேர்ந்தது. அவர்களைக் காப்பாற்றுவதற்காக ஒடிஸியஸ் அதிகமான அளவுக்குத் தியாகங்களையும், கஷ்டங்களையும் அனுபவிக்க நேர்ந்தாலும், அவர்களில் ஒருவரைக்கூட உயிருடன் திரும்பவும் தாய்நாட்டுக்கு அழைத்துவர அவனால் முடியவில்லை.

கப்பல் சிதைந்து ஒருவாறாகக் கரைக்கு வந்த ஒடிஸியஸை, தேவ இனத்தைச் சேர்ந்த *காலிப்ஸோ* என்ற பெண் மந்திரவாதி தன்னுடைய குகையில் சிறை வைத்தாள். அழகானவனும், வீர இளைஞனுமான ஒடிஸியஸைக் கணவனாக அடைய வேண்டும் என்று அவள் மனமார விரும்பினாள். காலம் கடந்தது. ஒடிஸியஸ் தனது மனைவி மற்றும் குழந்தைகளை நினைத்து மனம் நொந்தபடி காலத்தைக் கடத்தினான். தேவர்கள் எல்லோரும் ஒடிஸியஸின் துரதிர்ஷ்டத்தை நினைத்து மனம் வருந்தினர்.

ஆனால், பொஸடோன் என்ற கடல்தேவன் மட்டும் அதில் குரூரமான மகிழ்ச்சி அடைந்தான்.

அந்தச் சந்தர்ப்பத்தில் ஒருநாள் பொஸடோன், எத்தியோப்பிய இனத்தார் வசிக்கும் பகுதிக்கு ஒரு நீண்டகாலப் பயணத்தை மேற்கொண்டான். மற்ற தேவர்கள் ஸியூஸின் அரண்மனையில் ஒன்றாகக் குழுமினர், அப்போது அங்கு அதீனிதேவி, ஒடிஸியஸின் துயரக் கதையை வெளியிட்டு, ஸியூஸிடம் கருணை காட்டுமாறு கேட்டுக் கொண்டாள். தேவர்களின் பெயரில் அடிக்கடி யாகம் நடத்துவதில் ஆர்வம் மிகுந்தவனும், நல்லவனுமான ஒடிஸியஸை அவர்கள் எல்லோரும் ஒட்டுமொத்தமாக நேசித்தனர். ஆனால், பொஸடோனிடம் ஏற்பட்டிருந்த பழைய பகை, ஒடிஸியஸின் துயரத்தை அதிகமாக்கவே செய்தது. ஒடிஸியஸ் ஒருமுறை பொஸடோனின் மகனான *போலிஃபீமஸின்* கண்ணைக் குத்தி விட்டதுதான் பகைக்கான காரணம். இருப்பினும் அதீனிதேவியின் பிரத்தியேகமான வேண்டுதலையேற்று ஒடிஸியஸைச் சொந்த நாட்டுக்கு அனுப்பி வைக்க உதவுவதாக ஸியூஸ் ஒப்புக் கொண்டார். அவரது இந்தத் தீர்மானத்தைப் பெண் மந்திரவாதி யான காலிப்ஸோவிடம் தெரிவிப்பதற்காக, *ஆர்ஜிஃபோண்டஸை ஒஜிஜியா* தீவுக்கு அனுப்பி வைத்தார் ஹெர்மிஸ். பிறகு அதீனி தேவி இதாக்கா நகருக்குப் புறப்பட்டாள். ஒடிஸியஸைக் கண்டுபிடிப்பதற்காக அவனது மகனை *ஸ்பார்ட்டா, பைலோஸ்* போன்ற இடங்களுக்கு அனுப்பி வை..பதுதான் அவளது நோக்கம். குடும்ப நண்பரான மென்டிஸின் உருவத்தில் அவள் கோட்டை வாசலுக்கு வந்தாள். அங்கு மதுவருந்தியும், சதுரங்கம் விளையாடியும் பொழுதுபோக்கும் காமாந்தகர்களின் கூட்டத்தைத் தான் அவளால் காண முடிந்தது. அங்கிருந்தவர்கள் அனைவரும் ஒடிஸியஸின் மனைவி பெனிலோப்பியாவைத் திருமணம் புரியும் நோக்கத்துடன் வந்திருக்கும் மன்னர்களும் பிரபுக்களும்தான். அவர்களுக்கு இடையில் துயரத்துடனிருந்த ஒடிஸியஸின் ஒரே மகன் *டெலமாக்கஸை* அவள் உடனே அடையாளம் தெரிந்து கொண்டாள். ஒடிஸியஸின் பளபளப்பான கண்களும், தலையின் அமைப்பும், முகஜாடையும், உடல்வனப்பும் அவனிடமும் தென்பட்டன.

புதிய விருந்தாளியைக் கண்டதும் டெலமாக்கஸ் உட்கார்ந் திருந்த இடத்திலிருந்து எழுந்து வந்தான். அவளை இதயபூர்வமாக வரவேற்றான். எல்லாவிதமான மாமிசங்களுடன், பல்வேறு வகையான மதுவகைகளும் அடங்கிய உயர்தரமான விருந்தை அவளுக்காகத் தயார் செய்தான். பிறகு பரஸ்பரம் ஒருவரை ஒருவர் அறிமுகப்படுத்திக் கொண்டனர். பேச்சுக்கு நடுவே தனது அப்பாவைப் பற்றி எந்த ஒரு தகவலும் தெரியவில்லை என்றும் ஆனால், அதைவிட மோசமான மற்றொரு துயரம் தன்னை அலைக்கழித்துக் கொண்டிருப்பதையும் டெலமாக்கஸ் தெரிவித்தான். தனது தாயைத் திருமணம் செய்வதற்காக *டுலிஷ்யம், ஸாமி, ஸாஸின்தஸ்* போன்ற தீவுகளை ஆள்கின்ற புகழ்பெற்ற மன்னர்களும், இதாக்காவைச் சேர்ந்த பிரபுக்கள் சிலரும் இந்த அரண்மனையில் வந்து தங்கி ஓடிஸியஸின் சொத்துக்கள் முழுவதையும் ஊதாரித்தனமாக அழித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும், அவர்களை விரட்டியடிக்கும் தைரியம் தன் அம்மாவுக்கு இல்லை என்பதையும் மிகவும் வருத்தத்துடன் தெரிவித்தான்.

அவர்களைத் தனியொரு மனிதனாக இருந்து எதிர்க்கும் தைரியம் தனக்கும் இல்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் தன் தந்தை மட்டும் இங்கு வந்து சேர்ந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்றும் ஆற்றாமையுடன் அவன் நினைத்துப் பார்த்தான்.

ஒடிஸியஸ் உயிருடன் இருப்பதாகவும்; அவரை காலிப்ஸோ என்ற தேவ மந்திரவாதினி சிறை வைத்திருப்பதாகவும் விரைவிலேயே அவர் இதாக்கா நகருக்குத் திரும்பி வருவார் என்றும் மென்டிஸ் தேவதை, டெலமாக்கஸிடம் கூறியது: "தேவர்களின் விருப்பமும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அவரை இங்கு கொண்டு வருவதுதான். அதனால் நல்ல ஒரு கப்பலை அமர்த்திக் கொண்டு, இருபது துடுப்புக்காரர்களுடன் நீ உடனே பயணம் புறப்படு. பைலோஸ், ஸ்பார்ட்டா, போன்ற இடங்களுக்குச் சென்று ஒடிஸியஸைப் பற்றி முழுமையாக விசாரி." என்றவள், அப்படிப் பயணம் புறப்படுவதற்கு முன்பாக அந்த ஊரிலுள்ள முக்கியப்

பிரமுகர்களையெல்லாம் ஒன்றாக வரவழைக்க வேண்டும் என்றும், அவர்களை வைத்துக்கொண்டு அந்த அரண்மனையில் அழையாத விருந்தாளிகளாக வந்து தங்கியிருப்பவர்களை, உடனடியாக அவர்களது சொந்த ஊருக்கு அனுப்புவதற்கு உதவி செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள் என்றும் மென்டிஸ் யோசனை தெரிவித்தாள். அவனது அப்பாவைப் போலவே அவனும் ஒரு மாபெரும் வீரனாகத் திகழ வாழ்த்திய பிறகு மென்டிஸ் அங்கிருந்து கிளம்பினாள்.

அதனால் டெலமாக்கஸின் மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் நிறைந்தன. தனக்கு முன்பாக வந்திருந்தது மென்டிஸ் அல்ல; வேறு யாரோ ஒரு தேவதை என்பதும் அவனுக்கு உறுதியாகத் தெரிந்தது. அதனால் அங்கு வெகுநாட்களாகத் தங்கிக் கொண்டிருக்கும் விருந்தாளிகளிடம் தைரியமாகப் பேசவும், அவர்களுடன் சவால் விடவும் அவனால் முடிந்தது. அவனது பேச்சுத் திறமையைக் கண்டு விருந்தாளிகள் மட்டுமல்ல, பெனிலோப்பியாகூட அசந்து போனாள்.

அத்துடன் அங்கு நடைபெற்றுக் கொண்டிருந்த ஆட்டம், பாட்டம், உபசரிப்பு எல்லாம் ஒரு முடிவுக்கு வந்தன. காத்திருந்தவர்கள் படிப்படியாகத் தங்களது சொந்த வீடுகளுக்குத் திரும்பத் தொடங்கினர். தனது படுக்கையறைக்குள் நுழைந்த டெலமாக்கஸ், மென்டிஸ் சொன்ன வார்த்தைகளை நினைவு கூர்ந்தான். அப்பாவைத் தேடிக் கண்டுபிடிக்க அவன் மனம் தவியாகத் தவித்தது. ஆனால், அப்படியொரு நீண்ட பயணம் புறப்படுவது எப்படி என்பது குறித்து யோசித்த டெலமாக்கஸ், அப்படியே உறங்கிப் போனான்.

# II

டெலமாக்கஸ் விடியற்காலையிலேயே கண் விழித்தான். அழகாக உடை மற்றும் செருப்புகள் அணிந்து, கூர்மையான வாள் ஒன்றையும் உறையுடன் இடுப்பில் செருகிக் கொண்டான்.

தனது அறையிலிருந்து வெளியேறினான். தனது ஊழியர்களை அழைத்து, ஊரிலுள்ள முக்கியமானவர்களை வரவழைத்துக் கூட்டம் போட ஏற்பாடு செய்யச் சொன்னான். விரைவிலேயே ஊர்ப்பிரமுகர்கள் ஒவ்வொருவராக வந்து சேர்ந்தனர். அவனை மரியாதையுடன் வணங்கிய அவர்களின் ஊடாக நடந்து, அவனது அப்பாவின் சிம்மாசனத்தில் அமர்ந்தான். மரியாதைக்கு உரியவரும், புத்திசாலியுமான *எஜிபட்டஸ்*தான் முதலில் பேசினார்: “நம்மை இங்கு வரவழைத்திருப்பது அவருடைய சொந்த விஷயத்துக்காகவா, எதிரிகள் தாக்க வருவதாலோ அல்லது பொதுக்காரியத்துக்காகவா என்று தெரியவில்லை. எப்படி இருந்தாலும் அவர் இப்படியொரு கூட்டம் நடத்த விரும்பியதே நல்லதுதான். ஸியூஸ் தேவன் அவரை ஆசீர்வதிப்பாராக!”

அதற்குப் பதிலளிக்கும் பொருட்டு டெலமாக்கஸ் ஒரு நீண்ட உரை நிகழ்த்தினான். தனது வீட்டில் தங்கியிருப்பவர் களில் பெரும்பாலானவர்கள் வெளியேறிவிட்டாலும் இன்னும் சிலர் விடாப்பிடியாகத் தங்கியுள்ளனர். அவர்களை அங்கிருந்து வெளியேற்ற என்ன செய்யலாம் என்பது குறித்து ஆலோசிப்பதற் காகத்தான் இந்தக் கூட்டம். அதற்கு டெலமாக்கஸ் அங்கிருந் தவர்களின் உதவியைக் கோரினான்.

அந்த அரண்மனையில் விருந்தாளியாகத் தங்கியிருப் பவர்களில் ஒருவனும் *யூப்பிதெஸின்* மகனுமான *ஆன்டினூஸ்* உடனே விளக்கம் அளித்தான்: “நாங்கள் இதாக்காவில் தங்கியிருப்பதற்குக் காரணம் பெனிலோப்பியாதான். அவர் நான்கு வருடங்களாக எங்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறார். மிகவும் புனிதமான ஓர் உடையை நெய்து கொண்டிருப்பதாகவும், தனது பிரபுவான *லெயர்ட்டீஸ்* மரணமடையும்போது, அவரது உடலில் அணிவதற்கான உடை அது என்றும் சொல்லியிருக்கிறார். துணியை நெய்து முடித்ததும் எங்களில் யாராவது ஒருவரை ஏற்றுக் கொள்வதாகவும் சொல்லியிருக்கிறார். ஆனால், பகல் முழுவதும் அவர் நெய்து கொண்டிருக்கும் துணியை, இரவு நேரமானால் விளக்குக்கு அருகில் உட்கார்ந்து பிரித்துப் பழையபடி

நூலாக மாற்றுகிறார் என்பதை நாங்கள் கண்டுபிடித்து விட்டோம். எனவே நாங்கள் மேற்கொண்டும் அவருக்காகக் காத்திருக்க முடியாது. எங்களில் ஒருவரைத் தன்னுடைய துணைவராக அவர் உடனடியாகத் தேர்ந்தெடுத்தே தீரவேண்டும்!"

ஆன்டினூஸஸிடமும் அவனது நண்பர்களிடமும் தனக்கு ஒரு வருடகாலத் தவணை தரவேண்டுமென்று டெலமாக்கஸ் கேட்டுக் கொண்டான்: "நான் ஒரு நீண்ட பயணம் புறப்படுகிறேன். அது என் அப்பாவான ஒடிஸியஸைத் தேடித்தான். அதற்குள் அவரைப் பற்றி ஏதாவது தகவல் கிடைக்கிறதா என்று பார்ப்போம். இந்த ஒரு வருட காலத்துக்குள் அவர் ஒருவேளை திரும்பி வராவிட்டால், அவரது மேன்மைக்கு ஏற்றபடி அழகான நினைவு மண்டபம் ஒன்றைக் கட்டவேண்டும். அதற்குப் பிறகு எனது அம்மாவை வேறு யாருக்கு வேண்டுமானாலும் திருமணம் செய்து கொடுக்கலாம். இதுதான் என்னுடைய தீர்மானம்!"

இதாக்கா நகரப் பிரமுகர்கள் இதற்கு எந்த விதமான பதிலையும் சொல்லவில்லை. அப்போது ஒடிஸியஸின் நெருங்கிய நண்பரான *மென்டார்* எழுந்து, அவனை ஆதரித்துப் பேசினார்.

"டெலமாக்கஸுக்குத் தேவையான உதவிகளை மென்டார் செய்யட்டும், மேற்கொண்டு அந்தக் குடும்பத்தின் மற்றொரு நெடுநாள் நண்பரான *ஹாலித்தெர்ஸியும்* உள்ளார்!" என்று கூறி நகரப் பிரமுகர்கள் அங்கிருந்து வெளியேறினர்.

இதனால் மிகவும் வருத்தமடைந்த டெலமாக்கஸ், தன்னந் தனியனாகக் கடற்கரைக்கு வந்தான். அங்கிருந்தவாறே அவன் அதீனிதேவியைப் பிரார்த்தனை செய்தான். தேவி மீண்டும் மென்டாரின் வடிவில் அவனிடம் வந்தாள்.

'அதிகப்படியான தைரியமும், அறிவும் ஏற்படட்டும்!' என்று அவனை ஆசீர்வதித்தாள். பின்பு விரைவாகப் பயணம் செல்லக் கூடிய கப்பல் ஒன்றைக் கட்டித் தருவதாகவும், மட்டுமின்றி, டெலமாக்கஸுக்குத் துணையாகத் தானும் அவனுடன் பயணம் செய்வதாகவும் மென்டாரின் உருவத்திலிருந்த அதீனிதேவி கூறினாள்.

டெலமாக்கஸ் தனது அரண்மனைக்குத் திரும்பி வந்தபோது, எஞ்சியிருந்த மன்னர்களும், பிரபுக்களும் பிரம்மாண்டமான விருந்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். இதைக் கவனித்த டெலமாக்கஸின் கோபம் அதிகரித்தது. தனது சொத்துக்களை இப்படிக் கொள்ளையடித்து ஊதாரித்தனமாகச் செலவு செய்யும் அவர்களைப் பழிவாங்கப் போவதாக உரத்த குரலில் சொன்னான். இதைக் கேட்டதும் செருக்கு மிகுந்த அவர்கள், டெலமாக்கஸைக் கேலி செய்தனர். பயணம் புறப்படும் டெலமாக்கஸும் அவனது அப்பாவைப் போலவே எங்கேயாவது போய் அகப்பட்டுக் கொண்டு மரணமடைவான் என்றுதான் அவர்களில் பெரும்பாலானவர்கள் நம்பினர்.

டெலமாக்கஸ் நேராகத் தனது தந்தையின் கருவூலத்துக்குச் சென்றான். அங்கு தங்கம், வெள்ளி, பட்டாடைகள், வாசனைத் தைலங்கள், மது நிறைக்கப்பட்ட ஜாடிகள் போன்றவை ஏராளமாகச் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. *யூரிக்லியா* என்ற நம்பிக்கைக்கு உரிய ஓர் ஊழியனை அழைத்துப் பன்னிரண்டு ஜாடிகளில் மதுவையும், தோல்பைகளில் பார்லிமாவையும் ரகசியமாக நிறைத்து வைக்குமாறு சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பினான். அன்று இரவே ஸ்பார்ட்டா மற்றும் பைலோஸ் பாலைவனத்தை நோக்கிப் பயணம் புறப்படும் தகவலை, நம்பிக்கைக்கு உகந்த ஊழியர்களிடம் மட்டும் அவன் கூறினான்.

அதற்குள் டெலமாக்கஸின் வடிவத்துக்கு மாறிய அதீனிதேவி, நகரின் ஒவ்வொரு பகுதிக்கும் சென்று அவனது பயணத்துக்குத் தேவையான கப்பல் மற்றும் உணவுப் பொருள்களைச் சேகரித்து வைத்தாள். பிறகு மெண்டாரின் வடிவத்துக்கு மாறி டெலமாக்கஸிடம் வந்து 'பயணத்துக்குத் தேவையான எல்லாம் தயாராக இருக்கிறது உடனே புறப்படலாம்!' என்பதைத் தெரிவித்தாள். இரவில் எல்லோரும் உறங்கிய பிறகு மதுஜாடிகள் மற்றும் பார்லிமாவு நிறைத்த தோல் பைகளுடன் அவர்கள் அரண்மனையிலிருந்து புறப்பட்டனர். கப்பல், கடலில் இறக்கப்பட்டதும் மது நிறைந்த

ஜாடிகளை வரிசையாக வைத்து டெலமாக்கஸ் தேவதைகளுக்கு அவற்றைப் படையலிட்டான். குறிப்பாக அதீனிதேவிக்கு. பயணத் துவக்கத்தில் காற்று அனுகூலமாக வீசியது. மென்டாரின் வடிவில் வந்துள்ள அதீனிதேவியுடன் டெலமாக்கஸ் கப்பலின் மேல்தளத்தில் வந்து அமர்ந்தான். கப்பல், காற்றைக் கிழித்துக் கொண்டு கடலில் முன்னேறியது.

# III

பொழுது விடிந்தபோது கப்பல் பைலோஸ் துறைமுகத்தை அடைந்தது. அந்த ஊரில் இருந்தவர்கள் கடற்கரையில் ஒன்றாகக்கூடி பொஸடோன் தேவனுக்கு கருமையான பெரிய காளைமாடுகளைப் பலியிட்டுக் கொண்டிருந்தனர். மென்டாரைத் தொடர்ந்து டெலமாக்கஸும் அவர்களை நோக்கி நடந்தான். அங்கு நெஸ்தர் தன்னுடைய மகன்களுடன் உட்கார்ந்திருந்தார். புதியவர்களைக் கண்டதும், அவர்கள் எல்லோருமாக விருந்துக்கு வந்த இருவரையும் வரவேற்றனர். நெஸ்தரின் மகனான *பிஸிஸ்ட்ராட்டஸ்*, இருவரின் கையையும் பிடித்து முக்கியமான இருக்கைகளில் அமர வைத்தான். சற்று நேரத்துக்குள் சுவையான இறைச்சிகள் நிரம்பிய தட்டுகள் அவர்களுக்கு முன்னால் கொண்டு வந்து வைக்கப்பட்டன. தங்கக்கோப்பையில் மதுவை நிரப்பி மென்டாரிடம் கொடுத்த பிறகு, அந்த விருந்தை யாருக்காக நடத்திக் கொண்டிருந்தனரோ, அந்தத் தேவனைப் பிரார்த்தனை செய்யுமாறு கேட்டுக் கொண்டனர். அவர்களது பண்பான நடவடிக்கைகள் மென்டாரின் வடிவத்திலிருந்த அதீனி தேவிக்கு மிகவும் மகிழ்ச்சி அளித்தது. அவர்கள் இருவரும் நெஸ்தரும், அவரது மகன்களும் மேலும் புகழ் பெறுவதற்கும், பைலோஸ் நகரமக்கள் சிறப்புடன் வாழவும், தங்களது பயணம் வசதியானதாக அமைவதற்காகவும் பொஸடோன் தேவனிடம் மனமாரப் பிரார்த்தனை செய்தனர்.

நெஸ்தரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லவும், பயணத்தின் நோக்கத்தைத் தெளிவாக எடுத்துரைக்கவும் அதீனிதேவி, டெலமாக்கஸை உற்சாகப்படுத்தினாள். டிரோஜன் போரில் ஒடிஸியஸ் செய்த சாகசங்கள் குறித்தும், அதன் பிறகு அவன் மேற்கொண்ட பயணத்தைக் குறித்தும் நெஸ்தர் அப்போது விவரமாக எடுத்துரைத்தார். மேற்கொண்டும் நெஸ்தர் தொடர்ந்தார்: "பனிமூட்டமும் புயல்காற்றும் நிறைந்த கடலில், அக்கிலஸ் தேவன் எங்களை எங்கெல்லாம் அழைத்துச் சென்றாரோ, அங்கெல்லாம் நாங்கள் வீரசாகசங்கள் செய்தோம். பிரயாம் மன்னரின் டிராய் நகரில் நடைபெற்ற போரில் சூரர்களான அயாஸ், அக்கிலஸ், பெட்ரோக்லிஸ், என் மகனான ஆன்டிலோகஸ் போன்றவர்கள் மரணமடைந்தனர். இவர்களை எல்லாம் இழந்ததால் ஏற்பட்ட துயரம் மட்டுமல்ல, மேற்கொண்டும் எவ்வளவு துயரங்களை நாங்கள் அனுபவித்தோம் தெரியுமா?

நீண்ட ஒன்பது வருடங்கள் ஆலோசனைகள் நடத்தியும் போருக்கான ஏற்பாடுகளைச் செய்வதிலும் ஈடுபட்டிருந்தோம். அத்தகைய சந்தர்ப்பத்தில் எல்லாம் புத்திசாதுரியம் மற்றும் ஈடுபாடு கொண்ட ஒடிஸியஸை வெல்லக்கூடிய எவருமே எங்கள் கூட்டத்தில் இல்லை! காரணம் என்னவென்றால் போருக்கான திட்டமிடல், சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு புதுப்புது உபாயங்களைக் கையாளுதல் போன்றவற்றில் ஒடிஸியஸ் மிகவும் கெட்டிக்காரராக இருந்தார். அரசவையிலோ, போர்க்குழுவிலோகூட எனக்கும் ஒடிஸியஸுக்கும் ஒருபோதும் கருத்து வேற்றுமை ஏற்பட்ட தில்லை. நாங்கள் ஒரே மனநிலை கொண்டவர்களாக இருந்தோம். புத்திசாலித்தனத்துடன், இடனறிந்து செயல்படுவது குறித்தும் நாங்கள் எல்லோரிடமும் எடுத்துரைத்திருக்கிறோம். இப்படியாக அந்த மகத்தான போரில் டிராய் நகரைத் தரைமட்டமாக்கிவிட்டு நாங்கள் கப்பலில் புறப்பட்டோம். ஆனால், ஸியூஸ் தேவன் மிகவும் தொல்லைகள் நிறைந்த ஒரு திரும்பு பயணத்தைத்தான் எங்களுக்கு வழங்கினார். பயணத்தின்போது மெனலாஸும், அகமென்மனும் என்ன காரணத்தாலோ பரமவிரோதிகளாக மாறினர். ஒடிஸியஸுக்கு அகமென்மனுடன்

இணைந்திருக்கத்தான் விருப்பம். அதனால், நானும் மற்ற நண்பர்களும் அவர்களிடமிருந்து விலகியிருக்க வேண்டியதாயிற்று.

கடவுளின் கோபத்துக்கு ஆளான அவர்கள் மேற்கொண்டும் பல ஆபத்துகளுக்கு உள்ளாவார்கள் என்று எனக்குத் தோன்றியது. அதனால், அவர்களைக் குறித்து மேற்கொண்டு எந்தவிதத் தகவலும் தெரியாமல் நான் பைலோஸ் நகரை வந்தடைந்தேன்.

இங்கு வந்து சேர்ந்த பிறகு நான் ஒரு சில செய்திகளைக் கேள்விப்பட்டேன். அக்கிலஸின் தலைமையிலான *மிர்மிடோன்* வேல் படைவீரர்கள் திரும்பி வந்தனர். போயியாஸின் புகழ்பெற்ற மகன் *ஃபிலோக்டரிஸும்* திரும்பி வந்தார். ஐடோமினியூஸின் படையில், போரில் இறந்தவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் கிரீட்டுக்குத் திரும்பி வந்தார்கள். அகமெம்னோனை, *அஜிஸ்தோஸ்* கொலை செய்தான். ஆனால், அஜிஸ்தோஸை அகமெம்னோனின் மகனான *ஒடஸ்டிஸ்* இளவரசன் சரியான சந்தர்ப்பத்தில் கொன்று பழி வாங்கினான். ஆனால், ஒடிஸியஸைப் பற்றி எனக்கு எந்த விதமான தகவலும் கிடைக்கவில்லை. எப்படி இருந்தாலும் நான் ஒன்று சொல்ல முடியும். டிரோஜன் போரில் மற்றவர்கள் அதிகமான துயரங்களை அனுபவித்தபோதிலும் அதீனிதேவி, ஒடிஸியஸை மிகவும் அன்புடன் பாதுகாத்திருக்கிறார். அந்தத் தேவி நிச்சயம் உங்களுக்கும் உதவாமல் இருக்க மாட்டார்." என்று கூறினார் நெஸ்தர்.

உடனேயே பயணத்துக்குத் தயாரான டெலமாக்கஸிடம் ஒரே ஒரு நாளாவது தனது விருந்தாளியாகத் தங்கியிருக்குமாறு நெஸ்தர் விண்ணப்பித்தார். அதனால், டெலமாக்கஸை அங்கேயே தங்கியிருக்கச் செய்த அதீனிதேவி, ஒரு கடற்பறவையின் உருவத்தில் அங்கிருந்து பறந்து மறைந்தாள். அன்பு நிறைந்த ஒரு விருந்துக்குப் பிறகு நெஸ்தர் தன்னுடைய மகனுடன் டெலமாக்கஸை, மெனலாஸின் அரண்மனைக்கு அனுப்பி வைத்தார்.

மெனலாஸ் மன்னனின் அரண்மனைக்கு அவர்கள் வந்து சேர்ந்தனர். அப்போது அங்கு ஒரு பிரம்மாண்டமான விருந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. உலகப் புகழ்பெற்ற அழகியான ஹெலனுக்கு, மெனலாஸ் மூலம் *ஹெர்மியோன்* என்ற மகள் பிறந்திருந்தாள். மெனலாஸுக்கு ஓர் அடிமை மூலம் *மெகாபெந்திஸ்* என்ற மகனும் பிறந்தான். மிகவும் புகழ் பெற்றவரான அக்கிலஸின் மகனும், *மிர்மீடியா* நாட்டின் மன்னனுமான இளம் வீரனுக்கு அஃப்ரொடயற்றி தேவியைப் போன்று அழகான ஹெர்மியோனைத் திருமணம் செய்துவைக்க விரும்பினர். மகன் மெகாபெந்திஸுக்கு ஸ்பார்ட்டாவின் அல்க்டோர் மன்னனின் மகளைத் திருமணம் செய்துவைப்ப தென்றும் மெனலாஸ் தீர்மானித்திருந்தார். இந்தத் திருமணங்கள் தொடர்பான விருந்து தான் அங்கு நடந்து கொண்டிருந்தது. இசைக்கருவிகளிலிருந்து இனிமையான பாடல் உயர்ந்து கொண்டிருந்தது. அதையொட்டி அந்த இசைக்கு ஏற்றவாறு நடனம் ஒன்றும் நடந்து கொண்டிருந்தது.

மெனலாஸ் மன்னனின் மெய்க்காப்பாளர்களில் ஒருவரான *ஈட்டோனியஸ்,* மன்னனின் கட்டளைப்படி டெலமாக்கஸையும் அவனுடன் வந்தவர்களையும் வரவேற்று விருந்தினர் மாளிகைக்கு அழைத்துச் சென்றார். மிடுக்கான உடையணிந்திருந்த ஊழியர்கள் வந்தவர்களைக் குளிக்கச் செய்து, வாசனைத் தைலங்கள் பூசச் செய்து, உயர்ந்த வகை ஆடைகைளைக் கொடுத்து அணியச் செய்தனர். அதன் பிறகு அவர்களை மெனலாஸிடம் அழைத்து வந்தனர். உடனே யவன அழகி ஒருத்தி தங்கப்பாத்திரத்தில் வாசனையான நீரைக் கொண்டுவந்து அவர்களது கைகளைக் கழுவச் செய்தாள். அதன் பிறகு சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தங்கமேஜை மீது உயர்ந்த வகையான உணவுப்

பொருள்களும், மதுவகைகளும் பரிமாறப்பட்டன. வந்திருப்பவர்களிடம் தனது விருந்தை ஏற்றுக் கொள்ளுமாறு மன்னன் மிகவும் பணிவுடன் கேட்டுக் கொண்டதுடன், தன் அருகில் இருந்த பாத்திரத்திலிருந்து இறைச்சியைத் தனது கையாலேயே அவர்களுக்குப் பரிமாறவும் செய்தான். எல்லோரும் திருப்தியான அளவுக்கு உணவு உண்டனர். அதைத் தொடர்ந்து நடைபெற்ற பேச்சின்போது மெனலாஸ் ஏழு வருட காலம் தான் அனுபவித்த அளவற்ற வேதனைகள் குறித்தும், அப்போது சம்பாதித்த ஏராளமான செல்வத்தைக் குறித்தும் பேசினான். தன் பொருட்டுச் செல்வச் செழிப்புடன் அழகாக விளங்கிய டிராய் நகரம் அழிய நேர்ந்ததற்காக மிகவும் வருத்தப்பட்டான். ஆனால், தன்னை மிக அதிகமாக வேதனைக்கு உள்ளாக்கியது ஒடிஸியஸின் பிரிவுதான் என்பதையும் வெளிப்படையாக ஒப்புக் கொண்டான்: "ஒடிஸியஸைப் போல் சொந்த நாட்டுக்குச் சேவைபுரிந்தவர் வேறு யாரும் இல்லை என்ற உண்மை எல்லோருக்கும் தெரியும்!

இருப்பினும், ஒருபோதும் தீராத அளவுக்கு விபத்துகளைத்தான் கடவுள் அவருக்குப் பரிசாகத் தந்துள்ளார். இவ்வளவு காலமான பிறகும் அவரால் ஏன் தனது சொந்த நாட்டுக்குத் திரும்பி வரமுடியவில்லை என்பதும் தெளிவாகத் தெரியவில்லை. அவர் உயிருடன் இருக்கிறாரா, இல்லையா என்பதும் தெரியவில்லை. அவரைப் பற்றி நினைக்க நினைக்க உறக்கம் கூட வரமாட்டேன் என்கிறது. எனக்கே இந்த அளவுக்கு வருத்தம் இருக்கும்போது, அவரது வீட்டார் எந்த அளவுக்கு வேதனைப் படுவார்கள் என்பதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை."

மெனலாஸின் வார்த்தைகள், டெலமாக்கஸின் மனத்தை வெகுவாகப் பாதித்தது. அதனால் அவனால், அவனையே கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் போனது. அங்கிருந்தவாறே உரத்த குரலில் அழத்தொடங்கினான். இதையெல்லாம் கவனித்த அங்கிருந்த மற்றவர்களுக்கு, அறிமுகப்படுத்தாமலேயே டெலமாக்கஸ் யார் என்பது விளங்கியது.

அப்போது அங்கு வந்த ராணி ஹெலன், டெலமாக்கஸுக்கும், ஒடிஸியஸுக்கும் இருந்த ஆச்சரியத்துக்குரிய உருவ ஒற்றுமையைப் பற்றி தன் கணவனிடம் எடுத்துரைத்தாள். அதே மாதிரியான கண்கள்... அதே போன்ற கைகள்... அதே தலைமுடியும், தலையின் அமைப்பும்... மெனலாஸின் கருத்தும் அதுவாகவே இருந்தது. இதற்குப் பிறகும் காத்திருக்காமல் டெலமாக்கஸுடன் வந்த பிஸிஸ்ட்ராட்டஸ் இளவரசன் எழுந்து நின்று அங்கிருந்தவர்களின் சந்தேகங்களுக்கு விளக்கம் அளித்தான்: "இவர் ஒடிஸியஸின் மகன் டெலமாக்கஸ். ஆனால், மிகவும் கூச்ச இயல்பு கொண்டவராதலால் அவரால் அதையெல்லாம் பேசமுடியவில்லை." என்று குறிப்பிட்டவன், அதைத் தொடர்ந்து ஒடியஸிஸின் அரண்மனையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் தெரிவித்தான். கூடவே அவர்கள் எதற்காக அங்கு வந்துள்ளனர் என்பதையும் தெரிவித்தான். அங்குள்ள சிக்கல்களைத் தீர்ப்பதற்காகத் தாங்கள் பயணம் புறப்பட்டுள்ளதையும் அவர்களுக்கு உணர்த்தினான்.

தனது உயிர் நண்பனான ஒடிஸியஸின் மகனுக்கு எந்த விதமான உதவியைச் செய்யவும் மெனலாஸ் மன்னன் தயாராக இருந்தான். ஆனால், தன் தந்தையைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்வது என்பதற்கு மேல் அப்போது டெலமாக்கஸிடம் வேறு எந்தவிதமான திட்டமும் கிடையாது. மெனலாஸுக்கோ அது தொடர்பான எந்தத் தகவலும் தெரியாது. இருப்பினும் பொஸடோனின் பக்தனும், கடல் வாழ்க்கையில் தேர்ந்த முதியவர் என்ற முத்திரையுடன் அறியப்படுபவருமான எகிப்திய நாட்டைச் சேர்ந்த *புரோட்டியஸ்* என்பவர் சொன்ன கதையை, அவன் டெலமாக்கஸிடம் கூறினான். டிரோஜன் போரில் பங்கு கொண்ட ஒவ்வொருவரைப் பற்றியும் அவன் தெரிந்து கொண்ட உண்மையான தகவல்களைக் கூறினான். ஒடிஸியஸ் ஒரு தீவில் அமர்ந்து கண்ணீர் சிந்துவதைத் தானே பார்த்ததாகவும், அழகியான காலிப்ஸோ அவரைப் பலவந்தமாகச் சிறைவைத்திருப்பதையும் புரோட்டியஸ் அவனிடம் தெரிவித்தாராம். அதனால் ஒடிஸியஸ் உயிருடன் இருப்பதாகவும்,

என்றாவது ஒருநாள் நிச்சயமாகத் திரும்பி வருவார் என்று நம்புவதாகவும் மெனலாஸ், டெலமாக்கஸிடம் தெரிவித்தான். ஒடிஸியஸ் தனக்காக அனுபவித்த துன்பங்களை நினைவு கூர்ந்த மெனலாஸ், இந்தச் சூழ்நிலையில் அவருக்கு உதவ முடியாமல் போனதற்காக மிகவும் வருந்தினான். ஒடிஸியஸின் போர் முறைகள் பற்றியும், புத்திசாலித்தனத்தைப் பற்றியும் பல கதைகளை மெனலாஸ் நினைவு கூர்ந்தான். அதே மாதிரி ஹெலன் ராணியும் பல சம்பவங்களை நினைவு கூர்ந்தாள்.

இவற்றையெல்லாம் செவிமடுத்த டெலமாக்கஸ், வியப்பு அடைந்ததுடன் பெருமிதமும் கொண்டான். சிற்ப வேலைகள் நிறைந்த அழகான ஒரு தங்கப் பாத்திரத்தைப் பரிசாகப் பெற்றுக்கொண்டு டெலமாக்கஸ், அங்கிருந்து விடைபெற்றான்.

அதே நேரம் ஒடிஸியஸின் சொந்த அரண்மனையில் விருந்தினர்களாகத் தங்கியிருந்த கூட்டத்தினர் ஒரு சில வீரப் போட்டிகளை நடத்தினர். இந்தப் போட்டிகளில் எல்லாம் கலந்து கொண்டு ஆன்டினூகஸும் யூரிமாக்கஸும் வெற்றி பெற்றனர். திடுமென்று அங்கு வந்த *நியோமான்,* ஆன்டினூகஸிடம் கேட்டான்: "ஆன்டினூகஸ், டெலமாக்கஸ் பைலோஸிருந்து என்றைக்குத் திரும்பி வரப்போகிறான் என்று உனக்குத் தெரியுமா? அவன் என்னுடைய கப்பலில்தான் பயணம் செய்து கொண்டிருக்கிறான். நான் அவசரமாக *எலிஸிக்குப்* போக வேண்டி இருப்பதால், கப்பல் இப்போது எனக்குத் தேவைப்படுகிறது!"

டெலமாக்கஸ் பைலோஸுக்குச் சென்றிருக்கிறான் என்ற தகவலே, அப்போதுதான் அவர்களுக்குத் தெரிந்தது. அந்தச் செய்தி அவர்களையெல்லாம் ஒட்டுமொத்தமாகத் திகைப்பில் ஆழ்த்தியது. டெலமாக்கஸ் அருகில் எங்காவது ஆட்டு மந்தைகளுடனோ, பன்றிக் கூட்டங்களுடனோ பொழுதைக் கழித்துக் கொண்டிருப்பான் என்றுதான் அவர்கள் அதுவரை நினைத்திருந்தனர். எனவே ஆன்டினூகஸ், நியோமானிடம் கேட்டான்: "உண்மையைச் சொல், அவன் எப்போது இங்கிருந்து கிளம்பினான்? யாரெல்லாம் அவனுடன் போயிருக்கிறார்கள்?

இதாக்காலின் பிரமுகர்களா, அடிமைகளா அல்லது வேலைக்காரர்களா? உங்களது கப்பலைத் திருடிக் கொண்டு போயிருக்கிறானா? அல்லது கெஞ்சிக் கேட்டதால் விட்டுக் கொடுத்தீர்களா? உடனே எல்லா விவரங்களையும் எனக்குச் சொல்லுங்கள்!”

நியோமான் இதற்குப் பதில் அளித்தான்:“என்னிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால்தான் நான் என்னுடைய கப்பலை அவனிடம் கொடுத்தனுப்பினேன். நகரின் முக்கியமான பிரமுகர்கள் சிலரும் அவனுடன் பயணம் சென்றிருக்கிறார்கள். அநேகமாக அவர்களது தலைவன் மென்டாராகத்தான் இருக்க வேண்டும். அல்லது ஏதோ ஒரு தேவனாக இருக்க வேண்டும். மென்டாரின் கம்பீரமும், உரத்த குரலும் அந்த முகத்தில் எனக்குத் தட்டுப்பட்டது. ஆனால், பைலோஸை நோக்கிக் கப்பல் புறப்பட்டதற்கு மறுநாளே நான் மென்டாரை இங்கு சந்தித்தேன். அதுதான் எனக்கு ஆச்சரியம் அளிக்கிறது.”

இவ்வளவு தகவல்களைச் சொன்ன நியோமான், தனது அப்பாவின் வீட்டை நோக்கிச் சென்றான். ஆன்டினூகஸ் போட்டி களில் ஈடுபட்டுக் கொண்டிருந்த தனது நண்பர்களை யெல்லாம் அருகில் வருமாறு அழைத்தான். அவன் மனத்தில் கோபம் எல்லை கடந்து விட்டிருந்தது. எனவே மிகுந்த வெறுப்புடனும், ஆணவத்துடனும் பேசத் தொடங்கினான்:

“என்ன ஒரு ஆணவம்? டெலமாக்கஸின் இந்தப் பயணத்தை நாம் ஒரு சவாலாக எடுத்துக் கொள்ள வேண்டும். அவன் இப்படி நடந்து கொள்வான் என்று நாம் யாராவது எதிர்பார்த்தோமா என்ன? ஊருக்குள் உள்ள தைரியசாலிகள் சிலரைத் துணைக்குச் சேர்த்துக் கொள்ளவும், கப்பலில் துணையாக அழைத்துச் செல்லவும் அந்தச் சிறுவனால் எப்படி முடிந்தது? அவன் சென்றுள்ள காரியம் மட்டும் வெற்றிகரமாக நிறைவேறி விட்டால், அதற்குப் பிறகு இங்கு ஒரு பெரிய கலகமே நடக்கும் என்பதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் இல்லை. அதனால் அவன் உயிருடன் திரும்பி வரக்கூடாது. அவனை அழித்துவிட

வேண்டும். அதற்காக நீங்கள் உடனே ஒரு கப்பலை ஏற்பாடு செய்ய வேண்டும். இருபது துடுப்புக்காரர்களை அமர்த்துங்கள். இதாக்காவுக்கும், *சாமோஸ்* மலைக்கும் இடையில் மறைந்திருக்கும் அவனை நான் அழித்து விடுகிறேன். இதுவே அவனது வாழ்க்கையின் கடைசிப் பயணமாக இருக்க வேண்டும்!"

இந்தச் சதியாலோசனையை மறைந்திருந்து கவனித்த *மெடோன்,* இந்தத் தகவலை பெனிலோப்பியாவிடம் தெரிவித்தான். அவள் மிகவும் வருத்தமடைந்தாள். உடனே அதீனிதேவியை நோக்கிச் தன் மகனைக் காப்பாற்றுமாறு தாழ்மையுடன் பிரார்த்தித்தாள். *யூரிக்லியா,* உண்மையில் அதுவரை அங்கு நடந்திருப்பதையெல்லாம் ராணியிடம் தெரிவித்தாள். அவனது பயணத்துக்குத் தேவையான ஏற்பாடுகளையெல்லாம் செய்து கொடுத்தது, தான்தான் என்றும், ஆனால் இதையெல்லாம் அம்மாவிடம் சொல்லக்கூடாது என்று சத்தியம் செய்து கொடுத்திருப்பதால்தான் இதுவரை இதையெல்லாம் அவளிடம் சொல்லவில்லை என்றும் கூறி, அதற்காக மன்னிக்குமாறும் கேட்டுக் கொண்டாள் அந்த மூதாட்டி.

டெலமாக்கஸைக் கொல்வதற்காக ஆன்டினூகஸ் உடனே பயணம் புறப்பட்டான். இந்தச் செய்தியை அறிந்து துயருற்ற பெனிலோப்பியா விடாமல் அழுத சோர்வில் அப்படியே உறங்கிப் போனாள். அவள் மீது இரக்கம் கொண்ட அதீனிதேவி, *காமிலோஸின்* மனைவியான *இஃப்திமீயின்* வேடத்தில் ராணியை அவளது அரண்மனைக்கு அனுப்பிவைத்தாள். பிறகு அவளது படுக்கை அறையை அடைந்தாள். பெனிலோப்பியாவுக்கு ஆறுதல் கூறினாள்: "தேவர்கள் உன் மீது கருணை கொண்டுள்ளார்கள். உன் மகன் எல்லா இடர்ப்பாடுகளையும் கடந்து வெற்றிகரமாகத் திரும்பி வருவான். அவனுடன் அதீனிதேவி எப்போதும் துணையாக இருக்கிறாள். அவள்தான் என்னையும் இப்போது இங்கு சொல்லியனுப்பியிருக்கிறாள். அதனால், நீ கொஞ்சமும் வருத்தப்பட வேண்டியதில்லை." என்று சொல்லிவிட்டு உடனே மறைந்தாள்.

பெனிலோப்பியா இதைக் கேட்டதும் மிகுந்த நிம்மதியும் மகிழ்ச்சியும் அடைந்தாள்.

ஆன்டினூகஸும், அவனது குழுவினரும் கடலில் பயணம் செய்து இதாக்கா, சாமோஸ் மலைக்கு நடுவிலுள்ள பாறைகள் நிறைந்த ஆஸ்டரிஸ் என்ற சிறு தீவை அடைந்து நங்கூரம் பாய்ச்சி, டெலமாக்கஸை எதிர்பார்த்துக் காத்திருந்தனர்.

# V

ஒலிம்பஸ் மலையில் தேவர்கள் விடியற்காலைக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக வந்து குழுமினர், வல்லமைகள் நிறைந்த ஸியூஸ் தேவன், மிகவும் உயர்ந்த இருக்கையில் அமர்ந்தார். உடனேயே அதீனிதேவி எழுந்து, ஒடிஸியஸைப் பற்றியும், அவன் அனுபவிக்கும் இன்னல்கள் பற்றியும் விரிவாக எடுத்துரைத்தாள். டெலமாக்கஸைக் கொல்வதற்காக, எதிரிகள் திட்டமிட்டுக் காத்திருப்பதையும் மறக்காமல் குறிப்பிட்டாள்.

இதையெல்லாம் கவனித்துக் கேட்ட ஸியூஸ் தேவன், தன் மகன் ஹெர்மிஸை அருகில் அழைத்து, உடனே ஒடிஸியஸை அவனது நாட்டுக்கு அனுப்புவதற்கான தேவர்களின் செய்தியை காலிப்ஸோவிடம் தெரிவிக்குமாறு சொல்லியனுப்பினார். டெலமாக்கஸைப் பத்திரமாக ஊரில் கொண்டுபோய்ச் சேர்ப்பதாக ஸியூஸ் தேவன் ஒப்புக் கொண்டார். ஸியூஸ் தேவனின் கட்டளையை காலிப்ஸோவிடம் தெரிவிப்பதற்காக நியமிக்கப்பட்ட ஹெர்மிஸ் பயணத்துக்குத் தயாரானான். எப்படிப்பட்ட பருவகாலத்திலும், பூமியில் எந்த இடத்திலும் காற்றின் வேகத்தில் பயணம் செய்து குறிப்பிட்ட இடத்தை அடைய உதவும் மந்திர சக்தியுள்ள தங்கச் செருப்புகளை அவன் அணிந்து கொண்டான். அவனது விருப்பப்படி உறங்கிக் கொண்டிருப்பவர்களை எழுப்பவும், விழித்திருப்பவர்களை சுயநினைவற்றுப் போகச் செய்யவும் உதவும் மாந்திரீகப் பிரம்பையும் அவன் கையில்

எடுத்துக் கொண்டான். பிறகு ஒரு கழுகைப் போல் கடலை நோக்கிப் பாய்ந்தான். ஒரு கடல்பறவையைப் போல, அனாயாசமாக அவன் அலைகளின் ஊடாகப் பயணம் செய்தான். அவனது கடற்பயணம் எப்படிப்பட்டவரும் வியப்பு அடையக்கூடியதாகவே இருந்தது.

விரைவிலேயே ஹெர்மிஸ், காலிப்ஸோவின் தீவை அடைந்தான். அவள், அவனை மனமார்ந்த அன்புடன் வரவேற்றாள். தேவாமிர்தத்துடன் தேனும், உயர்தரமான உணவு களையும் வழங்கி உபசரித்தாள். அதற்குப் பிறகு ஹெர்மிஸ், தேவர்கள் சொல்லியனுப்பிய தகவலை காலிப்ஸோவிடம் தெரிவித்தான்: "ஸியூஸ் தேவன்தான் என்னை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார். அப்படி இல்லாவிட்டால் இவ்வளவு சிரமப்பட்டு இங்கு வருவதில் எனக்கு என்ன பயன்? கரையே கண்ணுக்குத் தென்படாத பாதாளம் வரை ஆழமுள்ள கடலில் பயணம் செய்து, எந்த விதமான நோக்கமும் இல்லாமல் இங்கு யாராவது வருவார்களா? ஒரு தேவனுக்கு யாகமோ விருந்தோ கிடைப்பதற்கு, இது மனிதர்கள் வசிக்கும் நாடுநகரமா என்ன? ஆனால், என்ன செய்ய? எல்லாம் வல்ல ஸியூஸ் தேவன் கட்டளையிடும்போது, அதற்கு அடிபணியத்தான் என்னைப் போன்ற எந்த ஒரு தேவனாலும் முடியும். பிரயாமின் நகரில் ஒன்பது வருடங்கள் போர் செய்த கிரேக்க வீரர்களில் ஒருவர் இந்தத் தீவில் இருப்பதாக ஸியூஸ் சொல்கிறார்.

நீண்ட காலப் போரினால் அந்த நகரைக் கீழடக்கிய பிறகு சொந்த ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்த வீரர்கள் சிலர், அதீனிதேவியின் கோபத்துக்கு ஆளானார்கள், எனவே தேவி, அந்த வீரர்களுக்கு எதிராகச் சூறாவளியை ஏற்படுத்தினார். இங்கு கரையேறிய ஒருவரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் அதனால் கடலில் மூழ்கி இறந்து விட்டனர். மரணத்திலிருந்து தப்பித்தாலும், துரதிர்ஷ்டம் அவரைப் பின்தொடர்ந்திருக்கிறது. அலைகளால் அடித்து வரப்பட்டுக் குற்றுயிரும் குலையுயிருமாக இந்தத் தீவில் அவர் ஒதுக்கப்பட்டார்.

அவரை உடனடியாக அவரது சொந்த நாட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டும் என்பதுதான் ஸியூஸ் தேவனின் கட்டளை.

தனது உறவினர்களைப் பிரிந்து எங்கேயோ வெகு தொலைவில் உள்ள இந்தத் தீவில் கிடந்து உயிர் விடுவதற்கு உரியதல்ல அவரது தலைவிதி. அவர் தன்னுடைய சொந்த நாட்டுக்குத் திரும்பி, குடும்பத்தாரையும், நண்பர்கள் மற்றும் உற்றார் உறவினர்களையும் சந்திக்க வேண்டும் என்பதுதான் தேவர்களின் ஆசை!"

ஒடிஸியஸை உடனே அனுப்பி வைக்க வேண்டும் என்ற ஸியூஸின் கட்டளையைக் கேள்விப்பட்டதும் காலிப்ஸோவுக்கு அளவுக்கு அதிகமான கோபமும், ஏமாற்றமும் ஏற்பட்டது. கப்பல் சிதைந்து ஏறத்தாழ மரணத் தறுவாயிலிருந்த ஒடிஸியஸைத் தான் காப்பாற்றியதையும், அதற்குப் பிறகு நன்றாக உபசரித்துப் பராமரிப்பதையும், என்றுமே அழியாத தேவகணத்துக்கு உட்பட்டவராக அவரை மாற்ற முயற்சி செய்வதையும் காலிப்ஸோ, ஹெர்மிஸிடம் விவரித்தாள். எனினும் ஸியூஸின் கட்டளையை மீற எந்தத் தேவனாலோ, தேவதையாலோ முடியாது என்பதால் மட்டும் அவள் ஒடிஸியஸைத் திருப்பி அனுப்ப ஒப்புக்கொண்டாள். ஆனால், அவருக்குக் கொடுத்து உதவுவதற்குத் தன்னிடம் கப்பலோ, மாலுமிகளோ இல்லை என்பதையும் அவள் தெரிவித்தாள்.

அதற்குப் பதிலாக, "ஸியூஸின் கடுமையான கோபம் உங்கள் மீது பாயாதிருப்பதாக!" என்று மட்டும் சொல்லிவிட்டு ஹெர்மிஸ் அங்கிருந்து மறைந்தான்.

காலிப்ஸோவின் தீர்மானம் ஒடிஸியஸை மிகவும் மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. எனவே அவன் உடனே தெப்பம் ஒன்றை வடிவமைப்பதில் ஈடுபட்டான். நான்கு நாட்களுக்குள் தெப்பம் தயாரானது. ஐந்தாவது நாளன்று காலிப்ஸோ, அவனைப் பன்னீரில் குளிக்கச் செய்து, உயர்ந்த ரக ஆடைகளை அணிவிக்கச் செய்தாள். சுவையானதும், உடல் நலத்துக்கு உகந்ததுமான உணவுப் பொருள்களை ஒரு சாக்குமூட்டை கொள்ளும் அளவுக்கு நிரப்பினாள். அதேபோல் பசியையும், தாகத்தையும் ஒரே மாதிரித் தணிக்கவல்ல சிவப்பு நிறத் தேனையும் ஜாடிகளில் நிரப்பிக்

கொடுத்தாள். அவன் குடிப்பதற்காகவென்றே பிரத்தியேகமாகக் காய்ச்சியெடுத்து வடிகட்டிய தண்ணீரையும் ஏராளமான தோல் பைகளில் நிரப்பினாள். பின்பு ஒடிஸியஸின் பயணத்துக்கு உதவும் நல்ல காற்று வீசும்போது அவனை அனுப்பி வைத்தாள். தெப்பத்தின் பாய்களை அவிழ்த்து விட்டபோது காற்று, தனக்குச் சாதகமான திசையிலேயே வீசுகிறது என்பதை அறிந்த ஒடிஸியஸ் மிகவும் மகிழ்ந்தான். தேர்ந்த ஒரு மாலுமியைப் போல், தெப்பத்தின் முன்பகுதியில் அமர்ந்து கொண்டு, அதைச் செலுத்தத் தொடங்கினான். கடலில் பயணம் செய்யும்போது துருவ நட்சத்திரத்தின் வலது புறமாகவே பயணம் செய்ய வேண்டுமென்று காலிப்ஸோ, அவனிடம் பிரத்தியேகமாகக் குறிப்பிட்டிருந்தாள். எனவே வெகு எச்சரிக்கையுடன் தூக்கத்தைத் துறந்து வெகு தொலைவில் தென்படும் அடிவானப் பரப்பையும், ஆகாயத்தின் மையத்திலுள்ள நட்சத்திரங்களையும், துருவ நட்சத்திரத்தையும் பார்த்தவாறே அவன் எல்லையற்ற தனது நீண்ட பயணத்தைத் தொடர்ந்தான்.

பதினேழு நாட்கள் சுகமாகக் கடந்தன. பதினெட்டாவது நாளன்று தெப்பம், மரக்கூட்டம் நிறைந்த *ஃபீஷியன்* நாட்டின் எல்லையை நெருங்கியது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பொஸடோன் தேவன் தனது எத்தியோப்பியப் பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பி வந்து கொண்டிருந்தார். அப்படி வரும்போது *ஸாலிமான்* மலையுச்சியை அடைந்தபோது அவர் இந்தக் காட்சியைக் கண்டார். பொஸடோனின் மனத்தில் ஏற்பட்ட கோபத்துக்கு அளவு இல்லாமல் போனது.

ஃபீஷ்யாவை அடைந்து விட்டால் ஒடிஸியஸின் துன்பங்கள் அனைத்தும் நீங்கிவிடும் என்றுதான் தேவதைகள் குறிப்பிட்டிருந்தனர். 'ஆனால், இவனை அப்படியெல்லாம் சும்மா விட்டு விடக்கூடாது! மேலும் மேலும் இவனுக்குத் தொல்லைகள் தரவேண்டும்' என்று நினைத்த பொஸடோன் உடனே மேகங்களையெல்லாம் ஒன்று திரட்டி, தனது சூலத்தால் ஆழமான கடலைப் புரட்டிப் போட்டார். கரைப்பகுதியும் கடலும்

கருமையான மேகங்களால் சூழ்ந்து கொள்ளப்பட்டன. மலை போன்ற உருவத்துடன் பிரம்மாண்டமான அலைகள் உயர்ந்தன. ஒடிஸியஸின் கண்ணுக்கு முன்னால் மரணம் தட்டுப்பட்டது. தனது உடல் நடுங்குவதாகவும், இதயம் நொறுங்குவதாகவும் அவனுக்குத் தோன்றியது. டிராய் நகரில் நடைபெற்ற போரில் மரணமடைந்திருந்தால், தன்னுடைய நாட்டினர் தன் புகழை ஊர் உலகத்துக்குப் பரப்பியிருப்பார்கள். தன் பொருட்டு உயர்ந்த மரியாதைகளுடன் இறுதிச் சடங்குகளைச் செய்திருப்பார்கள். ஆனால், இப்போது கண்ணுக்குத் தட்டுப்படும் மரணம் எப்படிப்பட்டது? அவமானத்துக்கும், நிந்தனைக்கும் உரிய ஒரு மரணம்! அப்பொழுது கடலின் அடியிலிருந்து எழுந்த பேரலை ஒன்று அவனது தெப்பத்தைப் பம்பரம் போல் சுழற்றியது. சூறைக் காற்றினால் பாய்மரங்கள் கிழிந்து சட்டங்கள் உடைந்தன. தெப்பத்தைப் பிடித்திருந்த அவனது கை நழுவியதால் ஒடிஸியஸ் கடலுக்குள் வீசி எறியப்பட்டான். அவன் வெகு நேரம் தண்ணீருக்குள்ளேயே மூழ்கிக் கிடந்தான்.

கடைசியில் வாய்க்குள் போன உப்பு நீரையெல்லாம் வாந்தியெடுத்தபடி எப்படியோ கடலின் மேல்பரப்புக்கு வந்தான். அப்போதும் பிரம்மாண்டமான கடலலைகள் அவனது தலைக்குமேல் இரைச்சலுடன் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தன. உடல் மிகவும் சோர்வடைந்தும்கூட, பிடிக்கு அகப்பட்ட தெப்பத்தை அவன் கைவிடவில்லை. பின்பு வெகு நேர முயற்சிக்குப் பின் ஒருவாறாகத் தெப்பத்தில் ஏறிக் கொண்டான். பிறகு அதன் மையத்தில் உறுதியாக அமர்ந்து கொண்டான். நான்கு திசைகளிலிருந்தும் அலைகள் சீறிப் பாய்ந்தன. வடக்குத் திசையிலிருந்து வந்த சூறாவளி, அந்தத் தெப்பத்தை அலைகளுக்கு நடுவே போட்டு அலைக்கழித்தது. பின்பு படிப்படியாக எல்லாத் திசைகளிலிருந்தும் இந்தத் தாக்குதல்கள் தொடர்ந்தன. ஒடிஸியஸுக்கு மரணத்திலிருந்து தப்பிக்க முடியாது என்றே தோன்றியது. 'நான் எவ்வளவு பெரிய துரதிர்ஷ்டசாலி!' அவன் மனம் யோசனையில் ஆழ்ந்தது. 'மீண்டும் நான் என் சொந்த நாட்டை அடைவதற்கு முன், இதுவரை அனுபவித்த

துன்பங்களை விடப் பெரிய அளவிலான துன்பங்களை அனுபவிக்க வேண்டுமென்று தேவர்கள் குறிப்பிட்டது எவ்வளவு சரியான வார்த்தைகள்!'

ஒடிஸியஸின் இந்த வாழ்வா, சாவா போராட்டத்தை கியாட்மஸின் அழகான மனைவி ஐனோ கவனித்தாள். ஒரு காலத்தில் மனிதக் குரலில் பேசிக் கொண்டிருந்த ஒரு மனிதப் பெண்ணாக இருந்தாள் அவள். ஆனால், இன்றைக்கு அவள் கடலின் தேவதை என்று மற்ற தேவதைகளால் மதிப்புடன் அழைக்கப்படும் லூக்கோத்தியா ஆகிவிட்டிருந்தாள் லூக்கோத்தியாவுக்கு ஒடிஸியஸின் மீது அனுதாபம் ஏற்பட்டது. எனவே தெப்பத்தின் ஒரு பகுதியில் அவள் பறந்து வந்து அமர்ந்தாள். உடைகளை அவிழ்த்து வைத்துவிட்டுக் கடலில் குதித்து நீந்தி ஃபீஷியன் நகரை அடையுமாறு அவள் ஒடிஸியஸுக்கு யோசனை கூறினாள். அதற்கு உதவும் ஒரு புனிதமான மார்புக் கவசத்தையும் அவள், அவனுக்கு வழங்கினாள். ஆனால், கரையை அடைந்தவுடன், திரும்பிப் பார்க்காமல் அந்தக் கவசத்தைக் கடலில் எறிந்துவிட வேண்டுமென்றும் குறிப்பிட்டாள். அதன்பிறகு உடனே லூக்கோத்தியா ஒரு பறவையின் வடிவில் மீண்டும் கடலுக்குள் மூழ்கி மறைந்தாள். ஒருவேளை இதுவும் தேவதைகளின் சோதனையாக இருக்குமோ என்று நினைத்த ஒடிஸியஸ் சந்தேகப்பட்டான். அப்போது பொஸடோன் மலை மாதிரியான பேரலை ஒன்றை ஏற்படுத்தினார். அதன் விசையான தாக்குதலால் தெப்பம் சுக்கல் சுக்கலாக உடைந்து சிதறியது. அவன் எப்படியோ ஓர் உருட்டுக் கட்டையைக் கைப்பற்றிக் கொண்டான். காலிப்ஸோ கொடுத்த உடைகளையெல்லாம் அவிழ்த்துக் கடலில் எறிந்தான். பிறகு லூக்கோத்தியா கொடுத்த மார்புக் கவசத்தை அணிந்து கொண்டு நீந்துவதற்காகக் கடல் நீரில் மட்டமல்லாக்கக் கிடந்தான். இதைக் கவனித்த பொஸடோன், "நீ எப்படித்தான் மூழ்கியும் மிதந்தும் கரையை அடைந்தாலும் உன்னுடைய துன்பங்கள் குறையாது!" என்று கூறிவிட்டு அங்கிருந்து மறுபடியும் தன் பயணத்தைத்

தொடர்ந்தார். ஐடாமலையில் உள்ள தனது அரண்மனையை அடைந்தார் பொஸடோன்.

ஸியூஸின் மகளான அதீனிதேவி, முதலில் காற்றைக் கட்டுப்படுத்தினாள். ஒடிஸியஸ் இரண்டு பகல்களும், இரண்டு இரவுகளும் கடலின் மேற்பரப்பில் நீந்தினான். மூன்றாவது நாளன்று கரை கண்ணுக்குத் தட்டுப்பட்டது. ஒடிஸியஸின் மனத்தில் மகிழ்ச்சி பிறந்தது. தரையில் கால் பதிக்க வேண்டும் என்ற ஆவேசத்துடன் வேகவேகமாக முன்னோக்கி நகர்ந்தான். ஆனால், கரையின் அந்தப் பகுதியில் கிழக்குத் திசையில் எழும்பி நிற்கும் உயர்ந்த மலைகளும், கடலை நோக்கி நீண்டிருக்கும் பெரிய பாறைத் துண்டுகளும் மட்டுமே கண்களுக்குத் தென்பட்டன. எனவே தன்னம்பிக்கை வடிந்து சோர்வுக்கு உள்ளானான் ஒடிஸியஸ். கடல் நீரிலிருந்து கரையேற எந்த ஒரு வழியுமின்றித் தவித்தான். கிழக்கு நோக்கி நீண்டிருக்கும் பாறைகளுக்கு முன்னால் நான்கு புறத்திலும் ஆழமான கடல். கால்பதித்து நிற்க எந்தவோர் இடமும் தட்டுப்படவில்லை. மேற்கொண்டு ஓர் எட்டு வைத்தால், வீசியடிக்கும் அலைகள் தன்னைப் பாறை மீது மோதி நொறுங்கச் செய்து விடும். ஒவ்வொரு தடவை அலையடிக்கும் போதும் பாறையைப் பிடித்தபடி தொங்கிக் கிடக்க அதீனிதேவி உதவி செய்தாள். ஆனால், அலைகள் பின்புறமாக நகரும்போது ஒவ்வொரு முறையும் பிடி நழுவியது. அங்கும் அதீனிதேவி அவனுக்கு உதவி செய்தாள். எனவே பாறைப் பகுதிகளில் இருந்து விலகி, அவ்வளவாக அலையடிக்காத அமைதியான ஓர் இடத்தை அடையவும் அதீனிதேவி, அவனுக்கு உதவினாள். அது ஒரு நதியின் முகத்துவாரப் பகுதியாக இருந்தது.

'நான் பத்திரமாகக் கரையேற உதவுங்கள்' என்று அவன் நதி தேவியிடம் மனம் உருகிப் பிரார்த்தித்தான். உடனே நதி, சட்டென்று தனது பாய்ச்சலை நிறுத்திக் கொண்டு, அலை களைப் பின்வாங்கிக் கொண்டது. ஆனால், அதுவரை கடலின் பேரலைகளுடன் போராடிப் போராடிச் சோர்வு அடைந்திருந்த

ஒடிஸியஸின் கைகால்கள் துவண்டன. உடல் மொத்தமும் செயலிழந்தது போல் ஆனது. மூச்சிலிருந்தும், வாயிலிருந்தும் உப்புத் தண்ணீர் வெளியேறியது. அதனால் ஒடிஸியஸ் சற்றுநேரம் அப்படியே சுயநினைவற்றுக் கிடந்தான். மறுபடியும் கைகால்களை அசைக்க முடிந்தபோது, நீர்த்தேவதை அளித்த உடையைக் கழற்றிக் கடலை நோக்கி வீசியெறிந்தான். ஊர்ந்தவாறே கரையை அடைந்தான். புற்செடிகளின் மீது சோர்ந்து விழுந்த அவன், தனக்கு அபயமளித்த பூமிதேவியை முத்தமிட்டான். மென்மையானவனும், பணிவுமிக்கவனுமான ஒடிஸியஸ் தனக்குத்தானே பேசிக் கொண்டான்:

"மேற்கொண்டும் எனக்கு என்னவெல்லாம் நடக்கப் போகிறதோ? என்னுடைய முடிவு ஒருவேளை இந்த இடத்தில் தானா? குளிரால் நடுங்கும் உடம்புடன் இந்த இரவு முழுவதும் இங்கேயே படுத்திருந்தால் மரணத்தைத் தவிர வேறு என்ன நிகழும்? இந்தக் குன்றின் மீது ஏறி, காட்டுக்குள் நுழைந்து எங்காவது நிம்மதியாகப் படுக்கலாம் என்று பார்த்தால், காட்டு மிருகங்கள் ஏதாவது வந்து தாக்காது என்பதற்கு என்ன உத்தரவாதமிருக்கிறது? என்ன இருந்தாலும் அந்த ஒரு வழிதான் நல்லதாகத் தோன்றுகிறது." என்று ஆற்றங்கரையை ஒட்டியிருந்த புதருக்குள் நுழைந்தான் ஒடிஸியஸ். அங்கு வசதியான ஒரு சிறிய திறந்தவெளி தென்பட்டது. உலர்ந்த சருகுகளை ஒரு புறமாக வாரிப்போட்டு, அதன் மீது படுத்துக் கொண்டான்.

நான்கு புறமும் மரங்கள் நெருக்கமாக வளர்ந்திருந்ததால், குளிர்காற்றோ, மழையோ பாதிக்காமல் அவனால் அங்கு படுத்துக்கொள்ள முடிந்தது. எண்ணற்ற துயரங்களுக்குப் பிறகு தற்காலிகமாக இப்படியொரு பாதுகாப்பான பகுதியைக் கண்டுபிடிக்க முடிந்ததில் ஒடிஸியஸ் மிகவும் திருப்தியடைந்தான். நிம்மதியும் ஆறுதலும் அடைந்தான். அதுவரையில் நடந்த எல்லாவற்றையும் மறக்கச் செய்யும் தூக்கத்தை அனுப்பி, அவனை ஆழ்ந்த உறக்கத்துள் ஆழ்த்தினாள் அதீனிதேவி.

# VI

ஒடிஸியஸ் அந்தக் காட்டுக்குள் படுத்து உறங்கும்போது, அதீனிதேவி அங்கிருந்து கிளம்பி ஃபீஷியன் நகரை அடைந்தாள். *ஆன்டினூஸ்* மன்னின் அரண்மனையை அடைந்தாள். அந்த நாட்டு இளவரசியான *நாஸிக்கா*வின் படுக்கை அறைக்குள் தந்திரமாக நுழைந்தாள். புகழ்பெற்ற மாலுமியான *டைமாஸின்* மகளும் நாஸிக்காவின் உயிர்த்தோழியுமான இளம்பெண்ணின் வடிவத்தில் அவளுக்கு முன்னால் சென்றாள். உடைகளைத் துவைப்பதற்காக கோவேறு கழுதைகள் பூட்டிய வண்டியுடன் ஆற்றங்கரைக்குச் செல்ல இளவரசியை வற்புறுத்தினாள். நல்ல உறக்கத்தில் ஆழ்ந்திருந்த அவளிடம் அதீனிதேவி கூறினாள்: "என்ன நாஸிக்கா, நீ இப்படித் தயங்கி உட்கார்ந்திருக்கிறாய்? உன்னுடைய உயர்தரமான உடையெல்லாம் அழுக்கடைந்து அலங்கோலமாகக் கிடக்கிறது. நீ கல்யாண வயதை அடைந்து விட்டாயே? உன் திருமணத்துக்கு முன் அழகான துணிமணி களைத் தயாராக வைத்திருக்க வேண்டாமா?

விடிந்தவுடன் நாம் போய் இவற்றையெல்லாம் துவைத்துக் கொண்டு வரவேண்டும். இதற்கு, என்னால் முடிந்த உதவிகளை நானும் உனக்குச் செய்துதருகிறேன்."

இந்தத் தகவலைச் சொல்லிவிட்டு அதீனிதேவி, தேவர்களின் இருப்பிடமான, மிகவும் அழகு வாய்ந்த ஒலிம்பஸ் மலைப் பகுதிக்கு வந்தாள். தூக்கத்திலிருந்து கண் விழித்த நாஸிக்கா தான் கண்ட கனவைப் பற்றியே நினைத்து நினைத்து வியப்பு அடைந்தாள். அவள் உடனே அந்தத் தகவலைத் தனது பெற்றோரிடம் தெரிவித்தாள். அவர்களும் அவளது விருப்பப்படியே ஆற்றுக்குச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து தந்தனர். எனவே, விடியற்காலையிலேயே அவர்களிடம் அனுமதி பெற்றுப்

புறப்பட்டாள். அவள் பயணம் செய்த வண்டிக்குள் உயர்தரமான உணவுவகைகளும், மதுவும், வாசனைத் தைலங்களையும் வைத்திருந்தனர். அவளது ஊழியர்கள் துணிகளையெல்லாம் துவைத்துக் காயப் போட்டனர். பிறகு குளித்துவிட்டு, வாசனைத் தைலங்களைப் பூசிவிட்டு, துணிகள் காய்வதற்குள் உணவு அருந்தினர்.

குளியல், சாப்பாடு எல்லாம் முடிந்ததால் உற்சாகம் அடைந்த இளம்பெண்கள் அனைவரும் பந்து விளையாடத் தொடங்கினர். விளையாட்டின்போது நாஸிக்கா இனிமையான குரலில் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தாள். தோழிகளுக்கு மத்தியில் அவள் *ஆர்டிமிஸைப்* போல் ஒளிர்ந்தாள். பிறகு அவர்கள் உலர்ந்த துணிகளை மடக்கி வண்டியில் வைத்தனர். பயணம் புறப்படத் தொடங்கிய வேளை. அப்போது அதீனிதேவி, ஒடிஸியஸை எழுப்ப முயன்றாள். இளவரசி, தனது தோழியை நோக்கிப் பந்தை எறிந்தபோது. அது தவறுதலாக ஆற்றுக்குள் விழுந்தது. அவர்கள் உடனே உரத்துக் குரல் கொடுத்தனர். இந்தக் கூப்பாடு ஓடிஸியஸைத் தூக்கத்திலிருந்து எழுப்பியது. உடனே அவன் சத்தம் வந்த திசையை நோக்கி மெதுவாக நடக்கத் தொடங்கினான். கடலின் உப்பு உடம்பில் ஒட்டியிருந்ததால் விகாரமான, பயங்கரமான அவனது உருவத்தைப் பார்த்து மற்ற பெண்கள் ஓடியொளிந்தனர். இளவரசியின் இதயத்தில் மட்டும் அதீனிதேவி தைரியத்தை ஊட்டினாள். அதனால் அவள் மட்டும் பயப்படாமல் அங்கேயே நின்றாள்.

என்ன செய்வது என்று தெரியாமல் ஒடிஸியஸ் ஒருகணம் தயங்கி நின்றான். பிறகு இதயத்தைத் தொடும்படியான குரலில் அவளிடம் பேசினான். கடந்த இருபது நாட்களாக நடுக்கடலில், தான் மரணத்துடன் போராடியதையும், அந்த இடத்துக்கு, தான் முற்றிலும் புதியவன் என்பதையும் ஒருவாறாக அவளிடம் சொல்லி முடித்தான். நகரத்துக்குச் செல்லும் வழியைச் சொல்லித் தருமாறும் தாழ்மையுடன் கேட்டுக் கொண்டான். அப்போதுதான் தான் நிர்வாணமாக இருப்பதை உணர்ந்து வெட்கப்பட்டான்.

தனது நிர்வாணத்தை மறைக்கக் கொஞ்சம் துணி தருமாறும் வேண்டினான். தனக்குக் கருணை காட்டினால் தேவதைகள் அவளது எல்லாவிதமான விருப்பங்களையும் நிறைவேற்றித் தருவார்கள் என்றும், மிகவும் அழகான ஓர் ஆண் மகனை அவளுக்குக் கணவனாக அளிப்பார்கள் என்றும் அவன் குறிப்பிட்டான்.

இதையெல்லாம் கேட்ட நாஸிக்காவின் மனம் இரங்கியது. அவள் உடனே தன்னை ஒடிஸியஸுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டாள். அது ஃபீஷியன் இனத்தாருக்குச் சொந்தமான நாடு என்றும், அங்கு உடை மற்றும் உணவுக்கு எந்தவிதமான தட்டுப்பாடும் கிடையாது என்றும் இந்த நாட்டு மன்னரின் மகளான தனக்கு அவருக்கு உதவ எந்த விதமான சிரமமும் இல்லையென்றும் அவள் மகிழ்ச்சியுடன் தெரிவித்தாள். அவன் சாப்பிடுவதற்கும், நன்றாக உடை உடுத்துவதற்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு நாஸிக்கா தனது வண்டியில் ஏறி அரண்மனையை நோக்கிப் புறப்பட்டாள்.

குளித்துவிட்டுப் புதிய ஆடைகளை அணிந்து வந்த ஒடிஸியஸுக்கு, அதீனிதேவி தேவையான அளவுக்கு அழகு வழங்கி அருள் புரிந்தாள். அவளது அந்த அழகில் கிறங்கிய நாஸிக்கா அவனையே தனது எதிர்காலக் கணவனாக அடைய விரும்பினாள். ஆனால், வீண் வதந்திகளைத் தவிர்ப்பதற்காகத் தன் வண்டிக்குப் பின்னால் சற்றுத் தொலைவிலேயே நடந்து வரவேண்டும் என்றும், தானும் தனது தோழிகளும் அரண்மனையை அடையும்வரை அதீனிதேவியின் பூந்தோட்டத்தில் காத்திருக்க வேண்டும் என்றும் அவள் ஒடிஸியஸிடம் கேட்டுக் கொண்டாள். பிறகு நகருக்குள் நுழைந்து ஆன்டினூஸ் மன்னனின் அரண்மனை எங்கே என்று கேட்டால் யார் வேண்டுமானாலும் வழி சொல்வார்கள். அரண்மனைக்கு வந்தால், நேராக வரவேற்பு அறையைக் கடந்து நெருப்புக் குண்டத்துக்கு அருகில், ஒரு பெரிய தூணை ஒட்டி அமர்ந்திருக்கும் தனது அம்மாவின் பாதங்களில் விழுந்து உதவி

செய்யுமாறு கேட்டுக் கொள்ளுங்கள் என்றாள். தனது அம்மா மனம் கனிந்து விட்டால், காரியம் சுலபமாக நடந்துவிடும். அதன் பிறகு விரைவிலேயே ஒடியஸியல் தனது சொந்த நாட்டுக்குச் செல்ல முடியும் என்றும் அவள் நம்பிக்கை ஊட்டினாள்.

நாஸிக்கா சொன்னபடி அவர்கள் அரண்மனையை அடைவது வரையில் ஒடியஸிஸ் அதீனிதேவியின் பூந்தோட்டத்தில் காத்திருந்தான். அங்கிருந்தவாறே, முடிந்த விரைவில் தன்னைத் தாய்நாட்டுக்கு அனுப்பி வைக்கும் நல்ல மனத்தை ஆன்டினூஸ் மன்னனுக்கு வழங்குங்கள் தாயே என்று அதீனிதேவியிடம், மனமுருகிப் பிரார்த்தித்தான் ஒடிஸியஸ்.

# VII

இளவரசி நாஸிக்கா அரண்மனையை அடைந்த பிறகு, ஒடிஸியஸ் நகரத்துக்குள் நுழைந்தான். அந்த நகரில் உள்ளவர்கள் அவனைப் பார்க்காமல் இருப்பதற்காக அதீனிதேவி தற்காலிகமாகப் பனிமூட்டத்தை ஏற்படுத்தி மறைத்தாள். நகர வாசலை அடைந்த போது தண்ணீர்க்குடத்துடன் நின்று கொண்டிருக்கும் ஒரு பெண்ணின் வடிவத்தில் அதீனிதேவி வெளிப்பட்டாள். அரண்மனைஃக்குச் செல்லும் வழியைக் காட்டித் தருமாறு ஒடிஸியஸ் அவளிடம் கேட்டான். தான் அவனை அரண்மனைக்கு அழைத்துச் செல்வதாகவும், ஆனால் அங்கு சென்று சேர்வது வரை யாரிடமும் எதுவும் பேசக்கூடாது-என்று அவள் ஒரு நிபந்தனை விதித்தாள். காரணம், இந்த ஊரிலுள்ளவர்கள் வெளி நாட்டினரை அவ்வளவாக விரும்புவதில்லை என்பதுதான். கப்பல்களின் மீது அன்பு செலுத்த மட்டும்தான் அவர்களுக்குத் தெரியும். தெருவோரக் காட்சிகளை வேடிக்கை பார்த்தபடி, அவன் அந்தப் பெண்ணுடன் விரைவாக நடந்தான். இருப்பினும் அவனை அங்கிருப்பவர்கள் எவரும் பார்த்ததாகவே தெரியவில்லை.

அரண்மனையை நெருங்கியதும் அவள் சொன்னாள்: "அதோ தெரிவதுதான் நீங்கள் கேட்ட அரண்மனை. பயப்படாமல் உள்ளே செல்லுங்கள். முதலில் ராணியைக் கண்டுபிடியுங்கள். *ஆரிட்டே* என்பது அவர்களது பெயர். அவரை அவரது கணவரும் குழந்தைகளும் உயிருக்கு உயிராக நேசிக்கின்றனர்; மதிக்கின்றனர். அதனால், அவர் மனத்தில் உங்களைப் பற்றி நல்ல ஓர் அபிப்பிராயம் ஏற்பட்டால், நீங்கள் விரைவிலேயே உங்கள் சொந்தநாட்டுக்குத் திரும்பலாம்." என்றவள் தொடர்ந்து ராணி தொடர்பான சில தகவல்களையும் ஒடிஸியஸிடம் சொன்னாள்.

"அங்கு முதலில் மன்னர் மரபில் தோன்றியவன் பொஸ டோனின் மகனான *நாஸித்தூஸ்* மற்றும் ராட்சத மன்னனான *யூரிமிடோனின்* அழகு மகளான *பெரீபியா*வும்தான். யூரிமிடோன், மோசமான புத்தி கொண்ட தனது குடிமக்களை அடிக்கடி தொல்லைப்படுத்திக் கடைசியில் அவர்களுடனேயே இறந்து போனான். அதனால் நாஸித்தூஸ் நாளடைவில் ஃபீஷியன் மன்னன் ஆனான். நாஸித்தூஸுக்கு *ரெக்ஸினோர்*, *ஆல்ஸினூஸென்* என்ற இரண்டு மகன்கள் இருந்தனர். ரெக்ஸினோர். அப்போலோ தேவனால் கொல்லப்பட்டான். ரெக்ஸி னோரின் மகள்தான் ஆரிட்டே. இவளைத் திருமணம் புரிந்தவர் ஆல்ஸினூஸ். ஆரிட்டேவுக்குத் தனது கணவர் மற்றும் குழந்தைகளிடமிருந்தும், நாட்டு மக்களிடமிருந்தும் கிடைத்த அன்பு, உலகில் வேறு எவருக்கும் கிடைத்திருக்காது. குடிமக்கள் அவளை தேவர்குலப் பெண்மணி என்றே நினைத்தனர். அந்த அளவுக்குப் புத்திசாலித்தனமும், அறிவும் நிரம்பியவள் அவள்."

அதன் பிறகு நேரத்தை வீணாக்காத ஒடிஸியஸ் அரண்மனைக்குள் நுழைந்தான். பளபளப்பான ராஜகோபுரங்களும், முற்றப் பகுதியைச் சூழ்ந்துள்ள வெண்கலச் சுவர்களும், தங்கவாசல்களும், வெள்ளி நிலைவாசல்களும் பித்தளைப் படிகளும் ஒடிஸியஸை மிகவும் வியப்புக்கு உள்ளாக்கின. சிற்ப வேலைகளில் தேர்ந்தவரான *ஹெஃபெஸ்டோஸ்* உருவாக்கிய

இரண்டு நாய் உருவங்களை வாசலில் வைத்திருந்தனர். ஹாலில் பூவேலைகள் நிறைந்த நாற்காலிகளும், மென்மையான மெத்தை போன்ற தலையணைகளும் இருந்தன. கையில் விளக்குகளை ஏந்திய தங்கத்தாலான சிலைகள் பளிங்குப் பீடங்களில் நிற்க வைக்கப்பட்டிருந்தன. ஆண்கள் கப்பல் ஓட்டுவதில் தேர்ந்தவர்களாக இருந்ததுபோலவே, அந்த நாட்டின் பெண்கள் துணி நெய்வதில் கெட்டிக்காரர்களாக இருந்தனர். வெளியே செழுமையான பழத்தோட்டமும், அதையடுத்து அழகான பூந்தோட்டமும் இருந்தன. அவற்றில் ஒருவிதமான இயந்திரத்தைப் பொருத்தியிருந்தனர். ரோஜா, செண்பகம், மாதுளை, ஆப்பிள் மற்றும் பழமரங்கள் எல்லாப் பருவகாலங்களிலும் இனிமையான பழங்களைத் தந்து கொண்டிருந்தன. ஒரு முறை அறுவடை நடப்பதற்கு முன்பே, அந்தப் பழமரங்களில் மேலைக் காற்றின் உதவியால் அடுத்த அறுவடைக்கான பழங்கள் கனிந்து தொங்கத் தொடங்கும். திராட்சைப் பழங்களின் கனத்தால், திராட்சைக் கொடிகள் பெரும்பாலும் தரையை நோக்கித் தாழ்ந்தே கிடந்தன. எந்த வகையில் பார்த்தாலும் இது போன்றதொரு அழகான தோட்டத்தை உலகில் வேறு எங்கேயும் பார்க்க முடியாது. அங்கிருந்த அருவியில் கொட்டிக் கொண்டிருந்தது, மூலிகையின் குணங்கள் கொண்ட பளிங்கு போன்ற தண்ணீர். நகரவாசிகள் இதையே குடிநீராகப் பயன்படுத்தினர். எண்ணிக்கையில் அடங்காத துயரங்களை அனுபவித்த ஒடிஸியஸுக்கு இந்தக் காட்சிகள் எல்லாம் எவ்வளவு மகிழ்ச்சியை ஏற்படுத்தின என்பதை வார்த்தைகளால் விளக்க முடியாது. அவன் முன்புறத்தைக் கடந்து ஹாலுக்குள் நுழைந்தான்.

அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் உறங்கச் செல்வதற்கு முன்பாக நடத்தும் பிரார்த்தனையில் ஈடுபட்டிருந்தனர், ஆரிட்டேவுக்கு முன்னால் வந்த ஒடிஸியஸ், அவளது பாதங்களில் விழுந்து வணங்கினான். அத்துடன் ஒடிஸியஸுக்கு இருந்த தடைகள் எல்லாம் நீங்கிவிட்டன. அங்கிருந்தவர்கள் எல்லாரும் வியப்பின் வசப்பட்டனர். ஆனால், அதையெல்லாம் பொருட்படுத்தாத ஒடிஸியஸ் ராணியைப் பார்த்துப் பேசத் தொடங்கினான்:

"புனிதமான ரெக்ஸினோரின் மகளான ஆரிட்டாதேவி அவர்களே, தாங்க முடியாத துயர்கள் அனுபவிக்கும் சூழ்நிலையில் நான் உங்களுடைய மற்றும் மதிப்புக்கு உரிய மன்னரின் முன்னால் அடைக்கலம் வேண்டி வணங்குகிறேன். உங்களைக் கடவுள் எல்லா வகையிலும் ஆசீர்வதிப்பாராக. மேற்கொண்டும் காலதாமதமின்றி என்னை எனது சொந்த நாட்டுக்கு அனுப்பி வைக்க ராணியான நீங்களும், இங்குள்ள மற்றவர்களும் எனக்கு உதவுங்கள். நான் இதுவரை எண்ணற்ற துயரங்களை அனுபவித்து விட்டேன். அதனால், என்மீது கருணை காட்டும்படி இறைஞ்சுகிறேன்." என்று கூறிவிட்டு ஒடிஸியஸ், நெருப்புக் குண்டத்துக்கு அருகில் உட்கார்ந்து கொண்டான்.

உடனேயே மதிப்புக்குரிய வயோதிகரான *எக்கினியோஸ்* எழுந்து நின்று, "நமது புதிய விருந்தாளியை மரியாதைக்கு உரிய இடத்தில் அமரச் செய்து உபசரிக்க வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்" என்று மன்னரைப் பார்த்துக் கூறினார்.

இதைக் கேட்டதும் தனது இருக்கையிலிருந்து எழுந்த மன்னன் ஆல்ஸினூஸ், ஒடிஸியஸுடன் கை குலுக்கிவிட்டு, அவனைத் தன் அன்பு மகன் *லோடமாஸ்* உட்கார்ந்திருக்கும் அளவுக்கு உயரமான நாற்காலி ஒன்றில் உட்கார வைத்தார். பிறகு உயர்ந்த வகை உணவுப் பொருள்களைக் கொடுத்து அவனை உபசரித்தனர். மறுநாள் காலையில் விருந்தாளியைக் கௌரவிக்கும் பொருட்டுக் குடிமக்களின் கூட்டத்தை நடத்தலாம் என்று முடிவு செய்து எல்லோரும் கலைந்து சென்றனர்.

கடைசியில் மன்னனும், ராணியும், ஒடிஸியஸும் மட்டும் மீதமானார்கள். தான் நெய்த உடைகளை அணிந்திருக்கும் ஒடிஸியஸைக் கவனித்த ராணி, 'அவன் யார்? எங்கிருந்து வருகிறான்? இந்த உடைகள் எங்கிருந்து கிடைத்தன?' என்றெல்லாம் விசாரித்தாள். ஒடிஸியஸ் தனது துயரகரமான கதையை அவளிடம் விவரித்தான். போர் முடிந்து வீரர்களுடன் திரும்பும்போது கப்பல் உடைந்து சிதறி, உடன் பயணம் செய்தவர்கள் எல்லோரும் இறந்ததையும், நீண்ட ஏழு வருடங்கள்

காலிப்ஸோவின் தீவில் அடைபட்டுக் கிடந்ததையும், பிறகு அங்கிருந்து கிளம்பி ஃபீஷ்யன் நாட்டை அடைந்து, இளவரசியைச் சந்தித்ததையும் குறிப்பிட்டான். தேவதைகளிடமிருந்து அந்த அளவுக்குத் துன்பங்களை மட்டுமே அவன் அனுபவித்திருந்தான்.

"ஃபீஷ்யன் நாட்டிலிருந்து வெகு தொலைவிலுள்ள ஒஜீஜீயா தீவில் அழகான தலைமுடி உள்ள, பயங்கரப் பெண்மணியான காலிப்ஸோ வசிக்கிறாள். அவள் ஆட்லஸ் தேவனின் மகள் என்று தன்னைச் சொல்லிக் கொள்கிறாள். இருப்பினும் எந்தத் தேவர்களோ, மனிதர்களோ அவளைச் சந்திக்க விரும்புவது இல்லை. துரதிர்ஷ்டவசமாக அப்படிப்பட்ட ஒருத்தியுடன் இவ்வளவு காலமும் நான் தனியாக வசிக்க நேர்ந்தது.

நடுக்கடலில் கப்பல் சிதைந்து உடன் வந்தவர்கள் எல்லோரும் கடலில் மூழ்கி இறந்துபோய் ஒன்பது நாட்கள் மரணத்தை எதிர்பார்த்தபடி நடுக்கடலில் தத்தளித்தேன். பத்தாவது நாளன்று தேவதைகள் என்னை காலிப்ஸோ தங்கியுள்ள தீவுப் பக்கமாகக் கரை சேர்த்தார்கள். அவளும் எனக்குக் கருணையுடன் உதவினாள். அன்பு செலுத்தினாள். தேவையான அளவுக்கு உணவளித்தாள். பிறகு ஒருபோதும் முதுமை தீண்டாதபடி என்றென்றும் இளமையோடிருக்க வைப்பதாகவும் சத்தியம் செய்து தந்தாள். இருப்பினும் என்னால் அவளை நேசிக்க முடியவில்லை. ஏழு வருடங்களையும் அதனால் கண்ணீர் சிந்தியவாறே நான் செலவழிக்க நேர்ந்தது. எட்டாவது வருடத்தில் அவளாக மனம் மாறினாளோ, அல்லது ஸியூஸ் தேவனின் கடுமையான கட்டளையாலோ என்பது தெரியவில்லை. என்னை விடுதலை செய்தாள். தெப்பம் ஒன்றில் பயணம் செய்து ஏராளமான ஆபத்துகளைக் கடந்து பதினெட்டாவது நாளன்று அழகான இந்த ஃபீஷ்யன் தீவை அடைந்தேன். கடற்கரையில் உள்ள காட்டில் மயக்கமுற்றுக் கிடந்த என்னை, உங்களது மகளும், அவரது தோழிகளும்தான் எழுப்பி, உணவும் உடையும் கொடுத்தனர்."

இதையெல்லாம் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த மன்னன் ஆல்ஸினூஸ், ஒடிஸியஸ் பத்திரமாக ஊர் போய்ச்

சேர்வதற்குத் தேவையான எல்லா உதவிகளையும் செய்து தருவதாக உறுதியளித்தார். அன்று இரவு ஒடிஸியஸ் நிம்மதியாகப் படுத்து உறங்கினான்.

# VIII

மறுநாள் விடியற்காலையில் நகரமக்கள் எல்லோரும் அந்த அரண்மனையில் ஒன்றாகக் கூடினர். மேன்மைக்கு உரிய விருந்தாளி ஒருவர் அரண்மனைக்கு வந்திருக்கும் செய்தியை-மன்னரின் செய்தியை நாட்டு மக்களுக்குத் தெரிவிக்கும் முரசறைபவனின் வேடத்தில் சென்ற அதீனிதேவி ஏற்கெனவே நகர மக்களிடம் தெரிவித்திருந்தாள்.

மன்னன், புதிதாக வந்திருக்கும் விருந்தாளியைத் தனது குடிமக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவன் பயணம் செய்வதற்கு உதவியாகச் சிறந்த கப்பல் ஒன்றையும், கப்பலைச் செலுத்துவதற்காக ஐம்பத்திரண்டு மாலுமிகளையும் ஏற்பாடு செய்யுமாறு மன்னர், அவர்களிடம் கட்டளையிட்டார். பிறகு விருந்தாளிக்காக நடத்தப்படும் சிறப்பு விருந்தில் கலந்து கொள்ளுமாறு குடிமக்கள் அனைவரையும் அழைத்தார் மன்னர்.

மன்னனின் கட்டளைப்படியே கப்பல் மற்றும் மாலுமிகளைச் சித்தம் செய்துவிட்டுக் குடிமக்கள் அரண்மனைக்குத் திரும்பி வந்தனர். பிரம்மாண்டமாக நடந்த விருந்துக்குப் பிறகு அரண் மனையின் பாடகரான டெமடோக்கஸின் இன்னிசை விருந்தும் நடைபெற்றது. டிரோஜன் போரைப் பற்றிய அழகான பாடல் ஒன்றை அவர் பாடினார். ஒடிஸியஸ் தன் தோளில் போட்டிருந்த சால்வையால் முகத்தை மூடிக் கொண்டு அழுதான். பாட்டின் இனிமையில் மூழ்கியிருந்த மற்றவர்கள் யாரும் அவனைக் கவனிக்கவில்லை. ஆனால், ஒடிஸியஸின் அருகிலிருந்த மன்னன் மட்டும் இதைக் கவனித்து விட்டதால், பாட்டுக் கச்சேரியை நிறுத்திவிட்டு உடனே மற்ற விளையாட்டுப் போட்டிகளைத்

தொடங்குமாறு கட்டளை இட்டார். ஓட்டப் பந்தயத்தில் *கிளைட்டோனியஸ*ும், மற்போரில் *கலீனஸ*ும், உயரம் தாண்டுவதில் *மெனாஸஸ*ும், குத்துச் சண்டையில் மன்னனின் மகனான லோடமாஸும் வெற்றி பெற்றனர். கடைசியில் அவர்கள் புதிய விருந்தாளியையும் போட்டிகளில் கலந்துகொள்ள அழைத்தனர் துயரகரமான சூழ்நிலையில் இருந்தாலும் ஒடிஸியஸ் அந்தச் சவாலை ஏற்றுக் கொண்டான். உடனே, உட்கார்ந்திருக்கும் இடத்திலிருந்து துள்ளியெழுந்த ஒடிஸியஸ், அருகிலிருந்த கனமான பாறாங்கல் ஒன்றை எடுத்துச் சுழற்றி எறிந்தான். பயங்கரமான சத்தத்துடன் காற்றைக் கிழித்துக் கொண்டு பறந்த அந்தக் கல், பிரம்மாண்டமான வெற்றிவீரர்களைக் கூடத் தரையில் விழ வைத்தது.

இந்த ஒரு போட்டியிலேயே விருந்தாளியின் திறமை வெளிப்பட்டு விட்டதால், மேற்கொண்டு அவனைப் போட்டியில் கலந்து கொள்ள வற்புறுத்திச் சிரமப்படுத்த வேண்டாம் என்று மாறுவேடத்திலிருந்த அதீனிதேவி கேட்டுக் கொண்டாள். எல்லோரும் அதை ஒப்புக்கொள்ளவும் செய்தனர்.

உடனேயே மன்னன் ஆல்ஸினூஸ் எழுந்து அங்கிருக்கும் எல்லோரையும் பார்த்தபடி சொன்னான்: “நீங்கள் திறந்த மனத்துடன் பேசுவது எங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது. நாங்கள் உங்களை வரவேற்கிறோம். விஷயம் தெரிந்தவர்கள் யாரும் மேற்கொண்டும் உங்கள் திறமை மீது சந்தேகப்பட மாட்டார்கள் என்றும் நம்புகிறேன். தயவுசெய்து நான் ஒன்றைச் சொல்லிக் கொள்ள நீங்கள் அனுமதிக்கக் வேண்டும். எங்களது வீரப் போட்டிகளைக் குறித்து உங்கள் மனத்தில் நல்ல எண்ணம் உருவாகியிருப்பது எங்களுக்கும் புரிகிறது. இந்த வல்லமைகள் எல்லாம் ஸியூஸ் தேவனிடமிருந்து பாரம்பரியமாக எங்களுக்குக் கிடைத்துள்ளது. நீங்கள் உங்களது சொந்த நாட்டை அடைந்து மனைவி மற்றும் குழந்தைகளுடன் மகிழ்ச்சியாக இருக்கும்போது எங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். இங்கு நடந்தவற்றையெல்லாம், அவர்களிடம் விளக்கமாகச் சொல்லுங்கள்.

கப்பல் ஓட்டுவதில் எங்களுக்கு இணையானவர்கள் உலகிலேயே வேறு யாருமில்லை என்ற உண்மையையும் இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

நல்ல, சத்தான, செழுமையான உணவுகளைச் சாப்பிடுவதிலும், இசை மற்றும் போர்ப் பயிற்சிகளில் ஈடுபடுவதிலும், உயர்ந்த ரக ஆடைகளை அணிவதிலும், எல்லாக் கவலைகளையும் மறந்து மகிழ்ச்சியாக நடனம் ஆடுவதிலும், மணமிகுந்த சுனைநீரில் குளித்துவிட்டு, வசதியான கட்டிலில் படுத்து உறங்குவதிலும் நாங்கள் இன்பத்தைக் கண்டடைகிறோம். அதனால் இசைக் கலைஞர்கள் வரட்டும், அவர்களது உயர்ந்த பட்ச இசைத் திறமையையும் இவர் தெரிந்து கொள்ளட்டும்!"

அடுத்ததாக நடைபெற்ற நிகழ்ச்சியில் இசை மற்றும் நடனத்தில் ஃபீஷ்யன் நாட்டு மக்களுக்குள்ள ஆர்வமும், மேதமைத்திறனும் புலப்பட்டது. டிரோஜன் போரைக் குறித்துப் பாடப்பட்ட பாடலைக் கேட்டதும் ஒடிஸியஸால், தனது துயரை அடக்க முடியவில்லை. இதனால் திகைப்பு அடைந்த மன்னன் ஆல்ஸினூஸ், ஒடிஸியஸின் முழு வரலாற்றையும் சொல்லுமாறு கேட்டுக் கொண்டார்.

இதுவரை மேற்கொண்டுள்ள பயணத்தில் எந்தெந்த நாடுகளைப் பார்த்தீர்கள், அங்கெல்லாம் உங்களுக்கு நேர்ந்த துயர அனுபவங்கள் என்னென்ன? மட்டுமின்றி டிரோஜன் போரில் உங்களுக்கு உள்ள தொடர்பு போன்றவற்றையும் விளக்குங்கள் என்று ஆல்ஸினூஸ் மன்னன் ஒடிஸியஸிடம் கேட்டுக் கொண்டார்.

# IX

உடனே ஒடிஸியஸ் தன் வரலாறு முழுவதையும் அவர்களிடம் சொல்லத் தொடங்கினான். முதலில் தான் யார் என்ற உண்மையை அப்போதுதான் வெளியிட்டான்:

“எப்படிப்பட்ட சாகசச் செயலுக்கும் எப்போதும் தயாராக உள்ளவன் என்ற முறையில் உலகம் முழுவதற்கும் அறிமுகமான *ஒடிஸியஸ் லெயர்ட்டிமஸ்* என்பதுதான் என் பெயர்.

கொடூரமான காட்டுக்குள் ஆகாயத்தைத் துளைக்குமாறு எழும்பி நிற்கும் *நெரிட்டோன்* மலையைக் கொண்ட இதாக்கா என்பதுதான் என்னுடைய நாடு. டிராய் நகரப் போருக்குப் பின் இலியோன் நகரிலிருந்து கிளம்பிய என்னையும், எனது வீரர்களையும் எங்களுக்கு எதிரான காற்று *சைக்கோத்தியன்* இனத்தார் வசிக்கும் *இஸ்மடோஸ்* துறைமுகத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தது. நாங்கள் அந்த நகரத்தை அழித்து, அங்கிருந்தவர்களையெல்லாம் கொன்றோம். அந்த ஊரின் பெண்களை மட்டும் சுதந்திரமாக உலவ விட்டோம். எங்களுக்குக் கிடைத்த ஏராளமான கால்நடைகளையும் மற்ற செல்வங்களையும் எங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டோம். அதன் பிறகு உடனடியாக அங்கிருந்து கிளம்ப வேண்டும் என்று நான் சொன்னேன். ஆனால், அவர்கள் அதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. திரண்டு வந்த எதிரிகளின் தாக்குதலில் ஒவ்வொரு கப்பலிலும் ஆறுபேர் வீதம் கொல்லப்பட்டனர். மீதமுள்ளவர்கள் ஒருவாறாக உயிருடன் தப்பித்தோம். ஆனால், நாங்கள் சற்றுத் தொலைவு செல்வதற்கு உள்ளாகவே, ஸியூஸ் தேவன் எங்களுடைய கப்பல் கூட்டத்துக்கு எதிராகப் பெரும் புயலை ஏற்படுத்தினார். கூடவே பெருமழையும் சேர்ந்து கொண்டது. ஆகாயத்தைக் கருமேகங்கள் சூழ்ந்து கொண்டன. சுற்றுப்புறமே இருண்டு போனது. எந்தத் திசையில் போகிறது என்று தெரியாமல் எங்களது கப்பல்கள் அலைகளின் கொந்தளிப்பால் வேகமாகக் கண்டபடி இழுத்துச் செல்லப்பட்டன.

பாய்மரங்கள் உடைந்து, பாய்கள் கிழிபட்டன. உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் வேட்கையில் பாய்மரங்களை அறுத்துவிட்டுக் கரையை நோக்கித் துடுப்புப் போட்டோம். பயத்தால் நடுங்கி, உண்பதற்கு உணவு இல்லாத சூழ்நிலையில் இரண்டு இரவுகள், இரண்டு பகல்களைச் செலவழித்தோம்.

கரைக்கு வந்த மூன்றாவது நாள் வெளிச்சம் பரவியதும், புதிய பாய்மரங்களைத் தயாரித்துக் கொண்டு மறுபடி எங்களது பயணத்தைத் தொடர்ந்தோம்.

*மாலியா* முனையைத் தாண்டும்போது மறுபடியும் கடுமையான புயல்காற்று அடித்தது. கப்பல் லட்சியமற்றுப் பாய்ந்தது. பத்தாவது நாளன்று நாங்கள் லோட்டஸ்களின் நாட்டை அடைந்தோம். அங்கிருந்து குடிதண்ணீரைச் சேகரித்துக் கொண்டு, சமையல் செய்து சாப்பிட்டோம். அதற்குப் பிறகு மூன்று பேரைத் தேர்ந்தெடுத்து அந்த நாட்டில், எந்த இனத்தார் வாழ்கிறார்கள் என்று அறிந்து வர அனுப்பி வைத்தோம். அந்த நாட்டினர் கொடுத்த லோட்டஸ் பழங்களை நாங்கள் சாப்பிட்டபோது அவர்கள் எங்களை மட்டுமல்ல, நாட்டையும் வீட்டையும் மறந்தனர். அவர்களது கோபத்தைப் பொருட் படுத்தாமல், எல்லோரது கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டு அங்கிருந்து நாங்கள் மறுபடியும் பயணத்தைத் தொடர்ந்தோம்.

விரைவிலேயே *சைக்ளோப்பியன்* இனத்தார் வசிக்கும் தீவை அடைந்தோம். அங்கு கேழை ஆடுகள் அதிகமிருந்தன. இயற்கை வளம் கொழிக்கும் தீவும்கூட. அந்தத் தீவில் இறங்கிய நாங்கள் அதன் இயற்கை அழகைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கினோம். அப்போது ஏராளமான கேழை ஆடுகள் எங்களது கண்களுக்குத் தட்டுப்பட்டன. உடனே நாங்கள் மூன்று பிரிவாகப் பிரிந்து அவற்றையெல்லாம் வேட்டையாடினோம். எங்களிடம் அப்போது பன்னிரண்டு கப்பல்கள் மட்டுமே இருந்தன. ஒவ்வொரு கப்பலுக்கும் ஒன்பது ஆடுகள் வீதம் கிடைத்தன. அதனால் பகல் முழுவதும் மாமிசம், மது ஆகியவற்றுடன் பொழுதுபோக்கி அங்கேயே தங்கினோம். ராட்சதர்களைப் போன்ற தோற்றத்துடன், நீதி, நேர்மை பற்றிக் கவலைப்படாத வட்டக் கண்களை உடையவர்கள் சைக்ளோப்பியன் இனத்தவர். விதியை மட்டுமே அவர்கள் நம்பினர். அவர்கள் நிலத்தை உழவு செய்வதோ, விதை விதைப்பதோ இல்லை. ஆனால், ஆச்சரியம் என்றுதான் சொல்ல வேண்டும் அப்படியிருந்தும் அவர்களது

நாட்டில் எல்லாவிதமான தானியங்களும் செழித்து வளர்கின்றன. எங்கு பார்த்தாலும் கோதுமை, பார்லி அல்லது திராட்சைக் கொடிகள் பசுமையாகத் தென்படுகின்றன.

அந்த நாட்டில் மன்னரோ, மக்களின் பிரதிநிதிகளோ கிடையாது. சட்ட விதிமுறைகள் என்று எதுவும் இல்லை. மக்கள் உயரமான மலைக் குகைகளில் வசிக்கின்றனர். ஒவ்வொருவரும் தங்கள் குடும்பத்துக்கான சட்டங்களைத் தாங்களே உருவாக்கிக் கொள்கிறார்கள். அண்டை அயலாரைப் பற்றிய விசாரிப்போ, அவர்கள் பற்றி யோசிப்பதோகூட இல்லை. அங்கு எல்லாமே சுதந்திரமாகப் பிறந்து வளர்கின்றன. உலகத்திலுள்ள எந்த விதமான பழமரங்களையும் அங்கு சுலபமாக வளர்க்கலாம். கடலோரத்தில் கண்ணுக்கெட்டிய தொலைவுவரை பசுமையான புற்பரப்பு படர்ந்து கிடக்கிறது. செழிப்பான மண். தாராளமான் தண்ணீர் வசதி. அங்கு விளைவது போல் எனக்குத் தெரிந்து திராட்சை, சமீபப் பகுதிகளில் எங்குமே விளைவது இல்லை. நல்ல ஒரு துறை முகத்தையும் இயற்கையே அவர்களுக்கு வழங்கியுள்ளது. அங்கு செயற்கையான எந்த ஓர் இயந்திரத்துக்கும் வேலை இல்லை. இவை எல்லாவற்றுக்கும் மேலாக, எந்தப் பருவ காலத்திலும் வற்றாத குடிநீர் ஒரு குகைக்குள்ளிருந்து ஊற்றெடுத்து அருவியாகக் கொட்டுகிறது. இந்த ஊற்று அருவியைச் சுற்றிலும் குளிர்ந்த நிழல் பரப்பும் *போல்பார்* மரங்கள் ஏராளமாக வளர்ந்துள்ளன.

மறுநாள் விடியற்காலையில் என் சக மாலுமிகளை அழைத்துக் கொண்டு அந்தத் தீவில் வசிப்பவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகப் புறப்பட்டேன். மற்றவர்கள் எல்லோரும் கடற்கரையில் கப்பலின் அருகிலேயே காவல் இருப்பதாகக் கூறினர். சற்றுத் தொலைவு சென்றபோது கடல் பக்கமாக உந்தி நிற்கும் பாறையில் கையொன்று தட்டுப்பட்டது. அதைப் பசுமையான மரங்கள் சூழ்ந்திருந்தன. அங்குதான் ஆடுகள் மந்தை மந்தையாக இரவைக் கழித்தன. *பாலிஃபீமஸ்* என்ற ஒரு ராட்சதனின் இருப்பிடம் அது. நெற்றியில் ஒரேயொரு கண் மட்டுமே உள்ள பயங்கரமான ராட்சதன் அவன்.

*ராட்சதன் ஆடுகளை மேய்க்கப் போயிருந்தான். அவனது குகைக்குள் பக்குவப்படுத்தப்பட்ட உணவுப் பொருள்கள் கூடை கூடையாக இருந்தன. அருகிலேயே சின்னஞ்சிறு ஆட்டுக் குட்டிகள் கூட்டமாகக் கட்டிப் போடப்பட்டிருந்தன. எங்களுக்குத் தேவையான அளவுக்கு அங்கிருந்த உணவுப் பொருள்களைச் சாப்பிட்டுவிட்டு, ராட்சதனின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். வீடுதேடி வந்தவர்களை உபசரித்து, பரிசுகள் தந்து அனுப்புவான் அந்த ராட்சதன் என்பது எங்கள் நம்பிக்கை.*

*இரவு நேரத்துக்கு வெளிச்சம் தருவதற்காக ராட்சதன் ஒரு விறகுக்கட்டு எடுத்து வந்தான். அந்தக் கட்டை அவன் குகைக்குள் போட்டபோது எழுந்த சத்தத்தால் நாங்கள் திடுக்கிட்டுப் போனோம். பிறகு பெண் ஆடுகளிடமிருந்து பாலைக் கறந்துவிட்டு அவற்றைக் குகைக்குள்ளேயே கட்டிப் போட்டான். ஆண் ஆடுகளை மட்டும் குகைக்கு வெளியே கட்டிப் போட்டான். கடைசியில் குகை வாசலை ஒரு பாறையால் மூடினான். நான்கு சக்கரங்கள் கொண்ட வலுவான இருபது வண்டிகளைக் கட்டி இழுத்தால் கூட, நூலளவு கூட நகராத ஒரு பெரும்பாறையாக இருந்தது அது. ஆடுகளை ஒவ்வொன்றாகக் கறந்து, மீதமுள்ள பாலைக் குடிப்பதற்காக ஆட்டுக்குட்டிகளை அவிழ்த்து விட்டான். பாதிப் பாலை உறைஊற்றி வைத்துவிட்டு மீதமுள்ளதை மண்குடம் ஒன்றில் ஊற்றி வைத்தான். பிறகு அதை அடுப்பில் ஏற்றித் தீ மூட்டினான். அடுப்பு எரிந்த வெளிச்சத்தில்தான் அவன் எங்களைக் கவனித்தான்.*

*'நீங்கள் யார்?' அவனது குரல் ஓங்கி ஒலித்தது: 'எங்கிருந்து வருகிறீர்கள்? கடற்கொள்ளையர்களா அல்லது கப்பல்களை விற்கும் வியாபாரிகளா?' அவனது குரலும் உடலின் பிரம்மாண்டமான தோற்றமும் அப்போதே எங்களது உயிரில் பாதியைப் போக்கடித்திருந்தது. இடிமுழக்கம் போன்ற அந்தக் குரலைக் கேட்டவுடனேயே எங்களது இதயம் தண்ணீராகக் கரைந்து வடியத் தொடங்கியது. ஆனால், தைரியத்தை வரவழைத்துக் கொண்ட நான் பதிலளித்தேன்.*

'நாங்கள் டிராய் நகரிலிருந்து போர் முடிந்து திரும்பி வரும் வீரர்கள். புயற்காற்றில் சிக்கி, எங்களது கப்பல்கள் திசை மாறிவிட்டன. எனவே எங்களால் நேரடியாக எங்களது நாட்டுக்குச் செல்ல முடியவில்லை. அதனால் விருந்தினர்கள் என்ற முறையில் எங்களுக்குப் பரிசுகள் ஏதாவது கொடுத்து, எங்களை வழியனுப்பி வைப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறோம். முன்பின் தெரியாதவர் களுக்கும், அடைக்கலம் கோருபவர்களுக்கும் எப்போதும் கடவுளின் துணை உண்டு. அப்படிப்பட்டவர்களுக்கு எந்தவிதமான ஆபத்தும் வராதபடி பார்த்துக் கொள்ளக் கடவுள் எப்போதும் அவர்களுடனேயே இருப்பார்.'

மிகவும் திமிர் நிறைந்த பதில்தான் அவனிடமிருந்து வந்தது: 'முன்பின் பழக்கமில்லாத மனிதா, நீ ஒரு சரியான முட்டாள். நான் கடவுளுக்கோ, தேவதைகளுக்கோ பயப்பட மாட்டேன். அதெல்லாம் இருக்கட்டும்... உங்களது கப்பல்கள் எங்கே நங்கூர மிறக்கி நின்று கொண்டிருக்கிறது? முதலில் அதைச் சொல்!'

'எங்களது கப்பல்கள் எல்லாவற்றையும் பொஸடோன் புயலால் நொறுக்கி விட்டார். நாங்கள் ஒருவாறாக நீந்தித் தப்பித்து இந்தத் தீவின் கரையிலுள்ள பாறைப் பகுதிகளில் தொற்றிக் கொண்டோம். உண்மையைச் சொன்னால், இது மிகவும் ஆபத்தான செயல் என்று எங்களுக்குத் தெரியும். அதனால்தான் உண்மையைச் சொல்லாமல் இப்படிப் பேசினோம்.'

இதைக் கேட்ட ராட்சதன் பதில் வார்த்தை எதுவும் பேசாமல், சட்டென்று என்னுடைய மாலுமிகளில் இருவரைத் தரையில் அடித்துக் கொன்றான். பிறகு அந்த உடம்பைத் துண்டு துண்டாக நறுக்கி, இரவுச் சாப்பாட்டுடன் சேர்த்துச் சாப்பிட்டான். பிறகு ஆட்டுப்பாலால் கைகழுவிக் கொண்டு ஆடுகளுக்கு மத்தியிலேயே படுத்து உறங்கத் தொடங்கினான்.

நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும் பாலிஃபீமஸைக் கொல்வதற்கு நாங்கள் அதிகமாகச் சிரமப்பட வேண்டியிருக்காது. ஆனால், அவனைக் கொன்றுவிட்டால் குகை வாசலை

மூடியிருக்கும் பாறையை அகற்ற எங்களால் முடியாது. அதனால் அவனைக் கொல்வதில் பயனில்லை என்று தீர்மானித்து, இரவு முழுவதும் அழுதுகொண்டே உட்கார்ந்திருந்தோம்.

பொழுது விடிந்த பிறகு ராட்சதன் கண் விழித்தான். மறுபடியும் ஆடுகளைக் கறந்த பிறகு, குட்டிகளைப் பால் குடிக்க அனுமதித்தான். பிறகு என்னுடைய மாலுமிகளில் இருவரைக் கொன்று காலை நேரப் பலகாரமாகச் சாப்பிட்டான். பின்பு குகையை மூடியிருக்கும் பாறையை அனாயாசமாகத் திறந்து ஆடுகளை வெளியேற்றினான். சரியாக அந்தச் சந்தர்ப்பத்தில் அவனைப் பழிவாங்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. கடைசியில் எனக்கு ஒரு வழி புலப்பட்டது. ஆலிவ் மரத்தின் ஆறடி நீளமுள்ள துண்டு ஒன்றை அறுத்து எடுத்து, அதன் முனையைக் கூர்மையாக்கி, அந்த முனையைத் தீயிலிட்டுக் கருகவைத்து, குகையின் ஒரு மூலையில் பத்திரப்படுத்தினேன். எனக்கு உதவுவதற்காக மேலும் நான்கு பேரைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டேன்.

மாலை நேரத்தில் வழக்கம் போல் ராட்சதன் திரும்பி வந்தான். ஆடுகளைக் கறந்து வழக்கம் போல் மற்ற வேலைகளைச் செய்தான். அப்போதும் எனது வீரர்களில் இருவரைக் கொன்று சாப்பிட்டான். உடனே நான் என்னிட மிருந்த மதுவிலிருந்து மூன்று டம்ளர் மதுவை அவனுக்குக் கொடுத்தேன். உடனே அவன் என்னுடைய பெயரைக் கேட்டான். என் பெயர் *ஹோமான்* என்று சொல்லிவிட்டு, விருந்தினர்களுக்கு உரிய பரிசைக் கொடுத்து எங்களை அனுப்பி வையுங்கள் என்று கேட்டுக் கொண்டேன்.

அதற்கு அவன் சொன்ன பதில், எல்லோரையும் கொன்று சாப்பிட்ட பிறகு கடைசியாக என்னைக் கொன்று தின்பதுதான், அவன் எங்களுக்குத் தரும் பரிசாம்!

பிறகு ராட்சதன் வழக்கம் போல் தரையில் படுத்து உறங்கினான். நான் ஏற்கெனவே தயார் செய்து வைத்திருந்த

ஆலிவ் மரத்தடியை எடுத்து மறுபடி கூர்மையான முனையை நெருப்பில் காட்டி கனியச் செய்தேன். பிறகு நாங்கள் ஐவருமாகச் சேர்ந்து எங்களது மொத்த வலுவையும் பயன்படுத்தி அதன் கூர்மையான முனையை அவனது ஒற்றைக் கண்ணில் விசையுடன் செருகினோம். அந்தக் கண்ணிலிருந்து ரத்தம் நதிபோல் பாய்ந்தது. அதனால் ராட்சதன் தனது வலது கையால் கண்ணில் செருகியிருந்த ஆலிவ்தடியை உருவி எடுத்தான். அதற்குள் குகை வாசலை நெருங்கிவிட்ட நாங்கள் நடுக்கத்துடன் நின்று கொண்டிருந்தோம். குகைவாசலை ஒட்டியுள்ள பாறையைத் தள்ளிவிட்டு, அந்த வழியாகத் தப்பிச் செல்லும் எங்களைப் பிடிப்பதற்காக அவன் தனது கையை குகைவாசல் பகுதியிலேயே வைத்திருந்தான். ஆனால், அவன் படுப்பதற்காகப் பயன்படுத்திய மரக் கிளைகளைப் பயன்படுத்தி, ஆடுகளின் வயிற்றில் தொட்டில் மாதிரி வடிவமைத்து ஒரு வழியாக நாங்கள் அந்தக் குகையிலிருந்து தப்பித்தோம்.

கப்பலில் நாங்கள் எல்லோரும் ஏறிக்கொண்ட பிறகு நான் அவன் இருந்த குகையை நோக்கி உரத்த குரலில் சொன்னேன். 'உன்னுடைய கண்ணைச் சிதைத்தது யார் என்று யாராவது கேட்டால், இதாக்காவின் மன்னனும், டிராய் நகரப் போரின் வெற்றி வீரனுமான ஒடிஸியஸ் லெயர்ட்டீஸ் என்று அவர்களிடம் சொல். அடேய் ஒற்றைக்கண் பாலிஃபீமஸ், இப்போது உனக்கு இருந்த ஒரு கண்ணும் போய்விட்டது. என்னுடைய வீரர்களைக் கொஞ்சம்கூட கருணையில்லாமல் தரையில் அடித்துக் கொன்று அவர்களைச் சாப்பிட்டாயே? என்னை வேடிக்கை பார்க்க முடிந்த வெறும் குழந்தை என்றா நினைத்தாய்? அடேய் மிருகத்தினும் கீழான பதரே... நீ இதுவரை செய்த பாதகங்களுக்கு நீ மேற் கொண்டும் தண்டனை அனுபவிக்க வேண்டியிருக்கும். விருந்தாளியாக வந்தவர்களைத் தனது சொந்த வீட்டுக்குள்ளேயே கொன்று புசித்த சண்டாளன் அல்லவா நீ? அதற்காக சொர்க்கத்திலுள்ள தேவர்கள் உனக்கு அளித்த தண்டனைதான் இது!'

முற்றிலும் எதிர்பாராத என்னுடைய வார்த்தைகளால், அவனால் தனது கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அதனால் தரையிலிருந்து ஒரு பெரிய பாறையைப் பெயர்ந்து எடுத்து, எங்களை நோக்கிச் சுழற்றி எறிந்தான். நல்ல வேளையாக அந்தப் பாறை எங்களது கப்பலுக்கு அருகே வந்து விழுந்தது. அதனால் எழுந்த அலை எங்களது கப்பலை மறுபடி கரையை நோக்கி உந்தித் தள்ளியது. ஆனால், நாங்கள் எல்லோருமாகச் சேர்ந்து விரைவாகத் துடுப்புப் போட்டு ஒரு பெருத்த ஆபத்திலிருந்து தப்பித்தோம்.

அதன் பிறகும் அந்த ராட்சதனோடு எனக்கு இருந்த கோபம் தீரவில்லை. உரத்த குரலில் அவனை மறுபடியும் திட்டத் தொடங்கினேன். ஏகத்துக்குப் பயந்துபோன என்னுடைய வீரர்கள், என்னைத் தடுக்க முயன்றனர். அதற்கு ஒப்புக் கொள்ளாத நான் திரும்பத் திரும்ப அவனை உரத்த குரலில் திட்டினேன். நான்தான் ஒடிஸியஸ் என்பதைத் தெரிந்து கொண்ட அவன் பதிலுக்கு உரத்த குரலில் அலறினான்:

'முன்பு சொன்ன பழைய ஜோதிடம் இப்போது நடந்திருக்கிறது. இங்கு முன் ஒரு காலத்தில் *டெலமோஸ் யூரிமிடீஸ்* என்ற புகழ் பெற்ற ஜோதிடர் ஒருவர் இருந்தார். வியப்புக்குரிய வகையில் பலருக்கும் ஜோதிடம் சொன்ன அவர் வெகுகாலம் உயிருடன் இருந்தார். ஒடிஸியஸின் கையால் என்னுடைய கண்கள் குருடாகும் என்று அவர் ஏற்கெனவே சொல்லியிருந்தார். உடல் நலமுள்ள, திடகாத்திரசாலியான ஒரு மனிதனாகத்தான் அவன் இருப்பான் என்றுதான் நான் எதிர்பார்த்தேன். ஆடம்பரமான உடையில் மிடுக்குடன் தென்படுவான் என்றும் நினைத்தேன். ஆனால், உண்மையில் நடந்திருப்பது என்ன? ஒரு சாதாரண மனிதன், அதிலும் காட்டு மிராண்டித்தனமான ஒருவன், பயந்தாங்குளி ஒருவன் எனக்கு மது கொடுத்து மயக்கி, வஞ்சகமாக எனது கண்ணைக் குருடாக்கியிருக்கிறான். அன்புக்குரிய ஒடிஸியஸ், இப்போது என்னிடம் வாருங்கள். நான் உங்களுக்கு மிக உயர்ந்த பரிசுப் பொருள்களை அளிக்கிறேன். நீங்கள் சௌகரியமாக ஊர்

போய்ச்சேர நான், என் தந்தையாரான பொஸடோன் தேவனிடம் பிரார்த்தனை செய்கிறேன். அவர் மட்டும் மனம் வைத்தால் வேறு எந்தத் தேவர்களின் உதவியுமின்றி மீண்டும் எனக்குப் பழையபடி பார்வை கிடைத்துவிடும்."

உடனே நான் பதிலளித்தேன்: 'உன்னை இப்போதே கொன்றுவிட்டு நரகத்துக்கு அனுப்ப வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். பொஸடோன் அல்ல, வேறு எந்தத் தேவன் மனம் கனிந்தாலும் உனக்குக் கண் பார்வை திரும்பக் கிடைக்காது.'

எனது வார்த்தைகளைக் கேட்ட பாலிஃபீமஸ், ஏமாற்றத்துடனும், துயரத்துடனும், கோபத்துடனும் கைகளை உயர்த்திக் தனது தந்தையாரான பொஸடோனிடம் பிரார்த்தனை செய்தான்: 'அன்பான என் தந்தையே... ஒடிஸியஸ் ஒருபோதும் தனது சொந்த நாட்டுக்குப் போகாதிருப்பதாக. ஒருவேளை அவன் சொந்த நாட்டை அடைவதாக இருந்தால், அவனுடைய சொந்தக் கப்பல் நாசமாகி, வேறொருவரின் இரவல் கப்பலில் பயணம் செய்து, பாதை நெடுக எண்ணற்ற துயரங்களை அனுபவித்து, உதவியாளர்கள் ஒருவர்கூட இல்லாமல் நீண்ட நாட்கள் வாழ்வுக்காகப் போராட்டம் நடத்திய பிறகே அவனது சொந்த வீட்டுக்குச் செல்ல வேண்டும். அங்கும் அவனுக்கு ஏராளமான விபத்துகளும், சிக்கல்களும், அவமானங்களும் ஏற்பட வேண்டும்.'

பொஸடோன், அவனது பிரார்த்தனைகளுக்குச் செவி மடுத்திருக்கிறார் என்பது எனக்கு நேர்ந்த பிந்தைய அனுபவங்கள் மூலம் நிரூபணமாகிறது.

பாலிஃபீமஸின் குகையிலிருந்து நாங்கள் கைப்பற்றிய ஆடுகளைச் சமமாகப் பங்கு போட்டுக் கொண்டோம். பின்பு முறைப்படி ஸியூஸுக்குப் பலி கொடுத்தோம். இருந்தும் அவர் எங்களுக்கு எதிராக மாறி விட்டிருந்தார். அன்று சூரியன் மேற்றிசையில் மறைவது வரை நாங்கள் விருந்திலும், மதுபானத்திலும் மதிமறந்து கிடந்தோம். இரவு நேர ஓய்வுக்குப் பிறகு எண்ணற்ற விபத்துகளைச் சந்திப்பதற்காக நாங்கள் மறுபடியும் பயணத்தைத் தொடர்ந்தோம்."

# X

“அங்கிருந்து பயணம் புறப்பட்ட நாங்கள் *அயோலியா* தீவை அடைந்தோம். அது கடலின் மீது மிதந்து கொண்டிருக்கிற ஒரு தீவு. அங்கு தேவர்களின் நெருங்கிய நண்பரான *அயோலஸ் ஹிப்போட்டிடஸ்* என்பவர் வசித்து வந்தார். பித்தளையால் வடிவமைக்கப்பட்டதும் ஒருபோதும், யாராலும் உடைக்க முடியாததுமான சுவர் ஒன்று அந்தத் தீவைச் சூழ்ந்திருந்தது. அயோலஸுக்கு ஆறு பையன்களும், ஆறு பெண்களும் பிறந்திருந்தனர்.

ஒரு மாத காலம் நாங்கள் அங்கு வசதியாகத் தங்கியிருந்தோம். டிரோஜன் போரைப் பற்றியும், அங்கிருந்து கிளம்பிய எங்கள் திரும்பு பயணத்தைப் பற்றியும் அவர் விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டார். நாங்கள் அவரிடம் விடை பெற்றபோது, எங்கள் பயணத்துக்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார். எங்கள் பயணத்தில் மகிழ்ச்சி அடைந்தவராக, ஒன்பது வயதான காளை மாட்டின் தோலைப் பயன்படுத்தி ஒரு பெரிய பை செய்து, அதற்குள் எங்கள் பயணத்துக்கு ஆதரவான காற்றை நிறைத்துத் தந்தார். எல்லா விதமான காற்றுகளையும் கட்டுப்படுத்தவும், விடுதலை செய்வதற்குமான அதிகாரத்தை *குரோனியன்* அவருக்கு அளித்திருந்தார். பைக்குள் திணிக்கப்பட்ட காற்று கொஞ்சம்கூட வெளியேறாதபடி, தோல் பையின் வாயை வெள்ளிக் கம்பிகளால் பிணைத்திருந்தார். பிறகு அதை எங்களது கப்பலிலும் அதே மாதிரி இணைத்துக் கொடுத்தார். கப்பலைச் சரியான திசையில் செலுத்துவதற்காக மேற்றிசைக் காற்றை மட்டும் சுதந்திரமாக விட்டு வைத்தார்.

ஒன்பது நாட்கள் இரவும் பகலும் பயணம் செய்து பத்தாவது நாளன்று ஏறத்தாழச் சொந்த நாட்டை அடைந்து விட்டோம்.

தொலைவில் கரைப்பகுதிகள் தென்படத் தொடங்கின. அதுவரையில் காற்றுப்பையை யாரும் தொடாதபடி நான் பத்திரமாகக் கண்காணித்தேன். ஒரு தீவு கண்ணுக்குத் தட்டுப்பட்ட போது மிகவும் சோர்வடைந்து போன நான் சற்று நேரம் கண்ணயர்ந்து விட்டேன். அந்த நேரம் பார்த்துக் காற்றுப் பையைத் திறந்து பார்க்க என்னுடைய மாலுமிகள் விரும்பினர். அந்தப் பை நிறையப் பரிசுப் பொருட்களாக விலையுயர்ந்த ரத்தினக் கற்கள், தங்க, வெள்ளி நாணயங்கள் இருக்கும் என்று அவர்கள் தவறாக நினைத்ததுதான் அதற்குக் காரணம்.

அவர்கள் பையைத் திறந்ததும் காற்று அதிலிருந்து விசையுடன் வெளியேறியது. திடும் என்று புயல் ஏற்பட்டு, கப்பல்களை வெகுதூரம் பின்னோக்கி இழுத்துச் சென்றது. அதற்குள் நான் கண் விழித்து விட்டேன். அதற்குள் கப்பல்கள் மனிதர்களின் கட்டுப்பாட்டிலிருந்து விலகிப் புயலின் வசப்பட்டிருந்தது. வருத்தமடைந்த நான் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தேன். பிறகு எதையுமே பார்க்க விரும்பாதவனாக தலைமுடியை இழுத்துக் கட்டிக் கொண்டு கப்பலில் குப்புறப் படுத்துக் கொண்டேன். சூறைக்காற்று கப்பல்களை மீண்டும் அயோலாஸ் தீவுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தன. இரண்டு பேரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு நான் அயோலஸின் அரண்மனைக்கு விரைந்தேன். நடந்ததை யெல்லாம் கேள்விப்பட்ட அவர், அதிகக் கோபத்துடன் எங்களை விரட்டி விட்டார். தேவர்களின் எதிரியாகிவிட்ட நீங்கள் எவ்வளவு சீக்கிரம் இங்கிருந்து வெளியேற முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் புறப்படுங்கள் என்றுக் கடுமையான குரலில் கட்டளையிட்டார்.

பிறகு ஆறு இரவுகளும், ஆறு பகல்களும் கப்பலுக்குத் துடுப்புப் போட்டு நாங்கள் லாமோஸை அடைந்தோம். லாஸ்ட்டரிகானியன் டெலேஃபிலோஸின் தலைநகரம்தான் லாமோஸ். அங்கு இரவு பகல் என்ற வித்தியாசம் இல்லாததால் ஆடுமாடுகளை மேய்த்து இரண்டு மடங்கு பணம் சம்பாதிக்க ஒவ்வொருவராலும் முடிந்தது. துறைமுகத்தில் கப்பலை நங்கூரம்

பாய்ச்சி நிறுத்திய நாங்கள் சற்று ஓய்வெடுத்தோம். அங்குள்ளவர்களைப் பற்றிய தகவல்களைத் தெரிந்து வருவதற்காக மூன்று பேரை நாட்டின் உட்பகுதிக்கு அனுப்பி வைத்தோம். சற்றுத் தொலைவு செல்வதற்குள் ஓர் அருவியிலிருந்து தண்ணீர் பிடித்துக் கொண்டிருந்த லாஸ்டரிகானியன் *ஆன்டிஃபேட்டிஸின்* மகளைச் சந்தித்தனர். மிகவும் சதைப்பிடிப்புடன் அழகாக விளங்கிய அவள் தனது அப்பாவுக்குச் சொந்தமான அரண்மனையைச் சுட்டிக் காட்டினாள்.

அங்கு சென்ற மூவரும் அங்கிருந்த மன்னரின் மனைவியைச் சந்தித்தனர். மகளைவிட இரண்டு பங்கு சதைப்பிடிப்புடன் இருந்தார் அவர். உடனேயே தனது கணவரை அரசவையிலிருந்து அழைத்து வர ஆளனுப்பி வைத்தார் அந்த ராணி. அவர் வந்தவுடனேயே மூவரில் ஒருவரைப் பிடித்து வெட்டி இரவு உணவுக்கான சமையல் செய்தனர். மீதியுள்ள இருவரும் பயந்து நடுங்கி, அங்கிருந்து ஓடினார்கள். ஆனால், ராட்சதனைப்போல் தோற்றம் அளித்த மன்னன் அட்டகாசமாகக் குரல் கொடுத்ததில் அந்த நாடே மொத்தமாக அதிர்ந்தது. உடனேயே, ராட்சத வடிவம் கொண்ட லாஸ்டரிகானியன்கள் கூட்டமாகப் பாய்ந்து வந்தனர். வந்தவர்கள், ஒரு மனிதனால் அசைக்கக்கூட முடியாத பெரிய பெரிய பாறைகளை அனாயாசமாகப் பெயர்த்தெடுத்து விசையுடன் வீசியெறிந்தனர். இருவரைத் துரத்திக் கொண்டு கடற்கரைக்கு வந்தவர்கள், கயிறுடன் கூடிய வேல்களை எறிந்து எங்களது ஆட்களில் சிலரைப் பலகாரம் செய்து சாப்பிடுவதற்காகப் பிடித்துக் கொண்டு போயினர். எங்களது கப்பல்கள் பெரும்பாலும் நொறுங்கிச் சிதைந்து விட்டன. எனினும் பாய்மரங்களையெல்லாம் அறுத்துவிட்டு, முடிந்த விரைவில் துடுப்பு போட்டுத் தப்பிப்போம் என்று மீதமிருந்தவர்களிடம் கூறினேன். பிறகு ஒருவாறாக நாங்கள் *ஏயியா* தீவை அடைந்தோம்.

ஏயியா தீவில்தான் பயங்கர தேவதையான *ஸார்ஸி* வசித்துக் கொண்டிருக்கிறது. கொலை செய்வதை கலைத்தன்மை மிகுந்த ஒரு செயலாக ஏற்றுக்கொண்டிருந்த *எயிட்டாஸின்*

சகோதரிதான் ஸார்ஸி. அவர்களது அப்பா உலகத்துக்கே ஒளி கொடுக்கக்கூடிய ஃபீலியோஸ். அம்மா *ஆஷ்யானஸின்* மகளான *பெர்ஸி*, ஆரவாரமில்லாமல் நாங்கள் கப்பலை துறைமுகத்துக்குக் கொண்டு சென்றோம். எந்தவிதமான உணவும் குடிநீரும் இல்லாமல் இரண்டு பகல், இரண்டு இரவுகள் நாங்கள் அங்கிருந்த துறைமுகத்திலேயே கிடந்தோம்.

மூன்றாவது நாளன்று வாள் மற்றும் வேலை எடுத்துக் கொண்டு நான் கப்பலிலிருந்து வெளியேறினேன். ஒரு பெரிய காட்டுமானைக் கொன்று அதைக் கப்பலுக்கு எடுத்து வந்தேன். அதை வெட்டிப் பக்குவமாகச் சமைத்துச் சாப்பிட்ட பிறகு நாங்கள் கடற்கரையிலேயே படுத்துக் கொண்டோம். மறுநாள் நாங்கள் இரண்டு பிரிவாகப் பிரிந்து, ஒரு பிரிவுக்கு யூரிலோக்கஸும், மற்றறொன்றுக்கு நானும் தலைமை தாங்கிப் புறப்பட்டோம்.

யூரிலோக்கஸின் குழு தீவுக்குள் சென்றது. அவர்கள் மலையடி வாரத்தில் ஸார்ஸியின் வீட்டைக் கண்டுபிடித்தனர். விஷத்தன்மை வாய்ந்த ஒரு தைலத்தால் அவள் மனிதர்களைக் காட்டு விலங்குகளாக மாற்றி விட்டிருந்தாள். அப்படிப்பட்ட அபாயமற்ற காட்டு விலங்குகள் ஏராளமாக அந்த வீட்டைச் சுற்றி அலைந்து கொண்டிருந்தன. ஸார்ஸி ஏதோ ஆடை ஒன்றை நெய்தவாறு வீட்டுக்குள் அமர்ந்து இனிமையான பாடல் ஒன்றைப் பாடிக் கொண்டிருந்தாள். யாரோ அவளை உரத்த குரலில் அழைப்பதைக் கேட்டு வெளியே வந்தாள். மூவரையும் பார்த்துவிட்டுப் பளபளப்பான வாசற்கதவைத் திறந்துகொண்டு உள்ளே வருமாறு அழைத்தாள். எந்த விதமான சந்தேகமும் இல்லாமல் அவர்களும் உள்ளே நுழைந்தனர். ஆனால், யூரிலோக்கஸ் மட்டும் வெளியிலேயே நின்று கொண்டான். வீட்டுக்குள் வந்தவர்களை வரவேற்று இருக்கைகளில் உட்கார வைத்துவிட்டு, ரொட்டி, சர்க்கரை கலந்த பார்லிமாவு, *பிராம்ரியன்* மது கலந்த தேனையும் தாராளமாகக் கொடுத்து உபசரித்தாள். விஷமருந்து கலந்த உணவுப் பொருள்களை அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, தனது மந்திரப் பிரம்பினால் அவர்களது

தலையை வருடினாள் அவள். கண்மூடித் திறப்பதற்குள் பன்றிகளாக மாறிவிட்ட அவர்களை உடனேயே தனது கூண்டுக்குள் போட்டு அடைத்து வைத்தாள்.

இதையெல்லாம் கவனித்த யூரிலோக்கஸ் உடனே கப்பலை நோக்கி விரைந்தான். தனது வீரர்களுக்கு நேர்ந்த விபத்தை அவன் கண்ணீருடன் என்னிடம் விவரித்தான். இதைக் கேள்விப்பட்டதும் வெள்ளிக் கைப்பிடி பொருத்தப்பட்ட என்னுடைய பெரிய வாளையும் பெரிய வில்லையும் எடுத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பினேன். அந்த இடத்துக்கு வழி காட்டக்கூட யூரிலோக்கஸ் ஒப்புக் கொள்ளவில்லை. அந்த அளவுக்கு அவன் பயந்துவிட்டிருந்தான்!

நான் ஸார்ஸியின் வீட்டுக்குள் நுழைய முயன்றபோது வழி மறித்தவாறு ஹெர்மிஸ் தனது தங்கப் பிரம்புடன் வந்து நின்றார். நிகழவிருக்கும் ஆபத்தைப் பற்றி எனக்கு எச்சரிக்கை செய்தார். அதிலிருந்து நான் தப்பிப்பதற்காக எனக்குத் தாயத்து ஒன்றையும் தந்தார். பிற்பாடு ஸார்ஸியின் மாயாஜால மந்திரங்கள் பற்றியும் என்னிடம் விவரமாக எடுத்துரைத்தார்.

ஹெர்மிஸ் சொன்னதையெல்லாம் நான் கவனமாகக் கேட்டுக் கொண்டேன். அவர் தந்த தாயத்தைக் கட்டிக் கொண்டு ஸார்ஸியின் வீட்டு வாசலில் இருந்தபடி அவளை அழைத்தேன். உடனேயே அவள் கதவைத் திறந்து கொண்டு வெளிப்பட்டாள். என்னை, வெள்ளியாலான, சிற்ப வேலைகள் நிறைந்த சிம்மாசனம் ஒன்றில் உட்கார வைத்தாள் தேனில் விஷமருந்தைக் கலந்து கொடுத்து என்னைக் குடிக்கச் செய்தாள். ஆனால், என் கையிலிருந்த தாயத்தின் சக்தியால், அது எனக்கு எந்த விதமான பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. பிறகு அவள், தனது கையிலிருந்த மந்திரப் பிரம்பால் என் உடலை வருடினாள். 'நண்பர்களுடன் பன்றிக் கொட்டிலுக்குப் போ' என்று என்னிடம் கட்டளையிடவும் செய்தாள். உடனேயே ஹெர்மிஸ் குறிப்பிட்டபடி நான் வாளுடன் அவள் மீது பாய்ந்தேன். என் உருவம் மாறாததையும், எனது கோபாவேச நடவடிக்கைகளையும்

கவனித்த அவள் சட்டென்று என் காலில் விழுந்து மன்றாடத் தொடங்கினாள்.

'பிரபு... நீங்கள் யாராலும் தோற்கடிக்க முடியாத ஒடிஸியஸாக இருப்பீர்கள் என்று நான் யூகிக்கிறேன். டிராய் நகரிலிருந்து திரும்பும் கப்பல் பயணத்தின்போது நீங்கள் இங்கு வருவீர்கள் என்று ஹெர்மிஸ் ஏற்கெனவே என்னிடம் சொல்லியிருந்தார். முதலில் உங்கள் வாளை உறையில் போடுங்கள். வாருங்கள் என்னுடைய படுக்கையறைக்குச் செல்வோம். அங்கு நாம் இருவரும் மகிழ்ச்சியாக இருப்போம்.' என்றாள்.

மகிழ்ச்சியில் திளைத்திருக்கும்போது எனது வலிமையைக் குன்றச் செய்து, என்னையும் ஏதாவது ஒரு மிருகமாக மாற்றிவிடப் போகிறாளோ என்று நினைத்த என்னிடம், நிச்சயமாக அப்படி எந்த நோக்கமும் தனக்கு இல்லை என்று சத்தியமே செய்தாள். குளித்துவிட்டு வந்த பிறகு துயரத்துடனிருந்த என்னிடம் எனது வீரர்களைப் பழைய உருவத்திலேயே காட்டித் தந்தாள். பின்னர் கப்பலிலுள்ள மற்றவர்களையும் விருந்தில் கலந்து கொள்ள அழைத்து வருமாறு சொன்னாள். பிறகு எல்லாவிதமான கவலைகளையும் மறந்துவிட்டு சுமார் ஒரு வருட காலம் நான் அங்கு தங்கியிருந்தேன்.

என்னுடைய வீரர்களின் வேண்டுகோளையொட்டி, மீண்டும் தாய்நாட்டுக்குப் பயணம் செய்யத் திட்டமிட்டேன். உடனே ஸார்ஸி, நான் *ஹேய்டீஸி* நகருக்குப் போக வேண்டுமென்று கட்டளையிட்டாள். அங்கு பயங்கர வடிவம் கொண்ட *பெர்ஸிஃபோனியா*வின் வீட்டை அடைந்து, *டிரீஸியாஸ்* என்ற கண் தெரியாத குறி சொல்லும் பெண்மணியைச் சந்தித்து எதிர்காலத்தைப் பற்றித் தெரிந்துகொண்ட பிறகே பயணத்தைத் தொடரவேண்டும் என்று தீர்மானமாகச் சொன்னாள். இது என்னை மிகவும் நடுங்க வைத்தது.

'பயப்பட வேண்டியதில்லை. நீங்கள் அங்கு போனால், நான் சொல்கிறபடி நடந்து கொள்ளுங்கள்' என்று கூறி அதற்கான வழி

முறைகளையும் சொல்லித் தந்தாள். இறந்து போனவர்களின் ஆத்மா அமைதியடைவதற்காக கருமையான ஆண் ஆடு மற்றும் பெண் ஆட்டைக் கப்பலில் ஏற்றிவிட்டாள். எங்கள் பயணத்துக்கு உதவியாக இருக்க, வடதிசைக் காற்றையும் துணையாக அனுப்பி வைத்தாள். ஹேய்டீஸ்ுக்குப் போக வேண்டும் என்ற ஸார்ஸியின் கட்டளை எனக்குள் ஏமாற்றத்தையும் துயரத்தையும் அதிகப்படுத்தியது. அதனால் படுக்கையில் உட்கார்ந்து அழுது புலம்பினேன். மீண்டும் உயிருடன் சொந்த ஊர்போய், சூரியோதயங்களைப் பார்த்து மகிழ்ச்சியோடு இருப்பேன் என்ற நம்பிக்கையே அப்போது எனக்குப் போய்விட்டது.

என்னை யார் இந்தப் பயங்கரப் பயணத்துக்கு வழி நடத்திச் செல்வார்கள்? வேறு யாராவது இதுவரை பாதாள உலகமான ஹேய்டீஸ்ுக்குப் பயணம் செய்திருக்கிறார்களா என்ன? ஏகத்துக்கு மிரண்டுபோன என்னை ஸார்ஸிதான் ஆறுதல்படுத்தினாள். 'நீங்கள் கப்பலின் பாதையைக் கவனித்துக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை. வழிகாட்டுவதற்காக யாரையும் தேட வேண்டியதில்லை. கப்பல் பாய்களைக் கட்டி வைத்து விட்டால் வடதிசைக் காற்று உங்களை நேரடியாக நீங்கள் போகவேண்டிய இடத்துக்கே கொண்டு போய்ச் சேர்த்துவிடும். இங்கிருந்து புறப்படும் நீங்கள் இந்தக் கடலைத் தாண்டிவிட்டால் தாழ்மையான கடற்கரை ஒன்று தென்படும். அங்குதான் பெர்ஸிஃபோனியாவின் தோப்பு உள்ளது. அங்கு ஆகாயத்தைத் தொடுமளவு உயரத்தில் வளர்ந்து நிற்கும் *போப்லார்* மரங்கள் தென்படும். ஏராளமான சுழல்கள் நிறைந்த ஓஷ்யானஸ் பகுதியில் கப்பல்களை நங்கூரமிட்டு நிறுத்திவிட்டு, அழியக்கூடிய நிலையில் உள்ள ஹேய்டீஸ்ுக்குச் செல்லுங்கள்.'

அவள் இதையெல்லாம் சொல்லி முடிப்பதற்குள் பொழுது புலர்ந்து விட்டது. ஸார்ஸி அன்புடன் கொடுத்த மார்பு உடை மற்றும் துண்டைத் தோளில் போட்டுக்கொண்டு நான், எனது பயணத்தைத் தொடங்கினேன்.

என் உதவியாளர்கள் ஒவ்வொருவரையும் அழைத்தேன். எல்லோரும் வந்து குழுமியதும் நான் சொன்னேன்: 'நாம் நேராக

நமது நாட்டுக்குச் செல்கிறோம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பீர்கள். ஆனால், ஸார்ஸி நமக்கு வேறொரு யோசனையைச் சொல்லித் தந்திருக்கிறாள். முதலில் நாம் ஹேய்டீஸ் என்கிற பாதாள உலகத்துக்குச் செல்கிறோம். அங்கிருந்து பயங்கரமான பெர்ஸிஃபோனியாவுக்குச் செல்கிறோம்.'

என்னுடைய வார்த்தைகளைக் கேட்டதும் அவர்களது இதயங்கள் கடுமையான ஏமாற்றத்தாலும், பயத்தாலும் நடுங்கத் தொடங்கின. அவர்கள் உரத்த குரலில் அழுதும், தங்களது தலைமுடியைப் பிய்த்துக்கொண்டும் அரற்றினர். இருப்பினும் அவர்களது இந்த நடவடிக்கைகளுக்கு எந்த விதமான பலனும் இருக்கவில்லை.

நாங்கள் கப்பலை நெருங்கியபோது எங்களுக்குத் தெரியாமல் ஸார்ஸி புலப்படாதவளாக எங்களைக் கடந்து சென்றாள். தெய்வீகச் சக்திகள் கொண்ட மாயாவதி அவள். அவளது நடவடிக்கைகள் எங்களை என்ன செய்யுமோ என்று தெரியாதவர்களாக நாங்கள் திகைப்பில் ஆழ்ந்தோம்.

# XI

தேவையான எல்லா வசதிகளுடன், கப்பலைத் தயார் செய்து கொண்டு நானும் எனது வீரர்களும் பயணத்தைத் தொடங்கினோம். ஸார்ஸி ஏவிவிட்ட காற்று எங்களைப் பின்னாலிருந்து உந்தி உதவியது. அதனால் நாங்கள் கடலின் மிகவும் ஆழமான ஓஷியானஸ் என்ற பகுதியை நெருங்கினோம். அருகிலிருந்த கடற்கரை ஓரமாக நடந்து அதன் மையப்பகுதியை அடைந்தோம். பிறகு ஸார்ஸி சொன்னதுபோல் ஒன்றரையடி நீள அகலத்தில் பள்ளம் தோண்டிய பிறகு வாளை உருவிப் பிடித்தேன். தேன், பால், சுத்தமான மது, நல்ல குடிதண்ணீர் போன்றவற்றால் அபிஷேகம் நடத்தினேன். அதன் மீது பார்லிமாவைத் தூவினேன். இறந்து போனவர்களின் ஆத்மாக்

களுக்காகப் பிரார்த்தனை செய்தேன். கடைசியில் குழியின் மேற்புறம் பலிக்காகக் கொண்டு வந்த ஆடுகளின் கழுத்தை அறுத்தோம். பரலோகத்திலிருந்த ஆத்மாக்கள் உடனடியாக *எரிபாஸிலி*ருந்து கூட்டமாக அங்கு வந்து சேர்ந்தனர்.

டிரீஸியாஸிடம், தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகு மட்டுமே அந்த ஆத்மாக்களை அந்தப் பகுதிக்குச் செல்ல அனுமதித்தோம். முதன் முதலாக வந்த ஆத்மா, ஸார்ஸியின் வீட்டில் இறந்துபோன *எல்பினோர்*தான். எல்பினோருக்கு உரிய முறையில் இறுதிச் சடங்குகளை நடத்துவதாகவும், கடற்கரையில் மண்டபம் ஒன்றை எழுப்புவதாகவும் சொல்லி அதை அனுப்பி வைத்தோம். இரண்டாவதாக வந்தது, என் அம்மாவின் ஆத்மா. ஆனால், டிரீஸியாஸின் ஆத்மா வருவது வரையில், வேறு எந்த ஆத்மாவும் என்னை நெருங்க நான் அனுமதிக்கவில்லை. அடுத்ததாகத் தங்கக் கைத்தடியுடன் *தீபன் டிரீஸியஸின்* ஆத்மா, ஆவி வடிவில் வெளிப்பட்டது. பலியிடப்பட்ட மிருகத்தின் ரத்தத்தைத் தாராளமாகக் குடிக்கும் பொருட்டு, என் கையிலிருந்த வாளை உறைக்குள் போடுமாறு அது கேட்டுக் கொண்டது. ரத்தம் குடித்துத் திருப்தியடைந்தபோது அந்த ஆத்மா ஒரு குடிகாரனைப் போல் என்னிடம் பேசத் தொடங்கியது. பொஸடோனின் மகனது கண்ணை நான் சிதைத்து விட்டதால், பொஸடோன் என் மீது கடும் கோபத்துடன் இருப்பதால், பயணம் செய்யும் பாதை முழுக்க நாங்கள் கடுமையான துயரங்களை அனுபவிக்க வேண்டியிருக்கும் என்று முன்னறிவிப்புச் செய்தது. நாங்கள் திரினேஷ்யா தீவைத் தாண்டுகையில் *ஹீலியோஸ்* என்கிற சூரிய தேவனின் ஆடுமாடுகளைப் பார்க்க நேரும்போது, அவற்றுக்குத் தொல்லை கொடுக்காதிருந்தால் நாங்கள் பத்திரமாகத் தாய்நாடு போய்ச் சேருவோம் என்றும் டிரீஸியஸின் ஆத்மா தெரிவித்தது.

ஒருவேளை நாங்கள் அவற்றைத் தொல்லைப்படுத்தினால் எங்களது கப்பல்களும், மாலுமிகளும் ஒட்டுமொத்தமாக அழிக்கப்படும். கடைசியில் நீங்கள் ஒரே ஒருவர் மட்டுமே

மீதமானாலும்கூட ஏராளமான கஷ்டங்களை அனுபவித்த பிறகுதான், முன்பின் தெரியாத யாரோ ஒருவரின் கப்பலில் ஏறி சொந்த நாட்டை அடைய முடியும். அங்கும் உங்களுக்கு ஏராளமான துன்பங்கள் காத்திருக்கின்றன.

ஆணவம் பிடித்த சிலர் உங்களது சொத்துகளை ஊதாரித் தனமாகச் செலவு செய்து வீணாக்கிக் கொண்டிருக்கின்றனர். அவர்களில் ஒருவனைக் கணவனாக ஏற்றுக் கொள்ளுமாறு உங்களது மனைவியை மிரட்டிக்கொண்டும் இருக்கிறார்கள். இது போன்ற அவமானத்துக்குரிய காட்சிகளைத் தான் நீங்கள் பார்க்க வேண்டியிருக்கும். அவர்களை அடக்கி ஒடுக்கிய பிறகு ஒரேயொரு துடுப்பு மட்டும் உள்ள படகில் திரும்பவும் பயணம் புறப்பட வேண்டும். கடலைப் பற்றி உண்மையாகத் தெரிந்து கொள்ளாதவர்களும் சாப்பாட்டில் உப்பைச் சேர்த்துக் கொள்ளாதவர்களுமான ஓர் இனத்தவரை அப்போது நீங்கள் சந்திக்க நேரும்.

அங்கு உங்களுக்கு அறிமுகமில்லாத ஒருவர் வந்து, உங்களது கையில் உள்ளது நெல்லையும் பதரையும் வேறுபடுத்த உதவக்கூடிய கருவிதான் என்று உங்களிடம் சொல்லும்போது உங்களது துடுப்பைத் தரையில் குத்தி நிறுத்தி வையுங்கள். அதன்பிறகு பொஸடோனுக்கு ஒரு கிடாய் ஆட்டையோ, இளங்காளை மாட்டையோ, அல்லது காட்டுப் பன்றியையோ பலியிடுங்கள். பிறகு உங்களது வீட்டுக்குச் சென்று என்றென்றும் அழியாத தேவர்களுக்கு வேண்டிய யாகங்களைச் செய்யுங்கள்.'

அப்போது எனது மரணத்தைப் பற்றியும் டிரீஸியாஸ் ஆரூடம் சொன்னார். முதுமையின்போது மிகவும் இயல்பாக, அமைதியாக மரணம் நிகழும் என்றும், நெருங்கிய உறவினர்கள் மற்றும் நண்பர்களின் முன்னிலையில் கடலில்தான் மரணம் நிகழும் என்றும் அவர் தெரிவித்தார்.

தேவதைகள் எனக்குச் சொல்லித் தந்த இந்த விதிகளைப் பற்றி என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. ஆனால்,

என்னுடைய தாயை அடையாளம் தெரிந்து கொள்ள என்ன வழி என்று நான் அவரிடம் கேட்டேன். ஆத்மாக்களில் ஏதாவது ஒன்றைப் பலியிட்ட ரத்தத் துளிகளுக்கு அருகே வரவிட்டால், அது உண்மையான விவரங்களை வெளிப்படுத்தும். அதற்கு உடன்படாத பட்சத்தில் அந்த ஆத்மா, தானாகவே திரும்பிச் சென்று விடும் என்று அவர் பதிலளித்தார்.

இப்படித் தனது கணிப்பு மற்றும் யோசனைகளைத் தெரிவித்த பிறகு டிரீஸியாஸின் ஆவி மீண்டும் ஹேய்டீஸுக்குத் திரும்பிச் சென்றது. ஆனால், என் தாயைக் கண்டுபிடிப்பது வரை நான் அங்கேயே இருந்தேன். சற்று நேரத்துக்கு உள்ளேயே என் தாயை நான் அடையாளம் தெரிந்து கொண்டேன். நான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரியான பதில் சொல்லவும் செய்தார். எனது பிரிவுத் துயர்தான் அம்மாவின் மரணத்துக்குக் காரணம் என்றும், மகனான என் வருகையை எதிர்பார்த்து கிழிந்துபோன உடையுடன் அப்பா, நெருப்புக் குண்டத்துக்கு அருகே இன்னும் காத்துக் கொண்டிருப்பதாகவும், பெனிலோப்பியா இரவு பகலாக அழுது கொண்டிருப்பதாகவும் சொன்னார். என் மகன் டெலமாக்கஸ் என்னை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப் பதாகவும் சொன்னார். கூடவே மேலும் சில தகவல்களையும் குறிப்பிட்டார். இதையெல்லாம் என் மனைவியிடம் தெரிவிக்க வேண்டும் என்று சொல்லிவிட்டு உடனே மறைந்துவிட்டார்.

அதன் பிறகு ஏராளமான பெண்களின் ஆத்மாக்கள் வந்தன. புகழ்பெற்ற முக்கியப் பிரமுகர்களின் மனைவியரும், மகள்களும் தான் அவர்கள். அவர்கள் ஒவ்வொருவரும், தங்களது கதைகளை என்னிடம் விவரித்தனர். அதன் பின்னரும் நான் பாதாளத்தில் ஏராளமான ஆத்மாக்களைச் சந்தித்தேன். அவர்களது பெயர் களைச் சொல்வதும், அந்தக் கதைகளை விவரிப்பதும் மிகவும் கடினமான காரியம், அதனால் ஆல்ஸினூஸ் மன்னரே, என்னை உறங்க அனுமதியுங்கள்!" என்றேன்.

ஆல்ஸினூஸின் அரண்மனையில் விசாலமான ஹாலில் இருந்தபடி ஒடிஸியஸ் கதை சொன்னபோது, அந்தப் பகுதியே

மிகவும் அமைதியாக இருந்தது. அங்கிருந்தவர்கள் அனைவரும் அந்த அளவுக்கு அந்தக் கதையில் ஒன்றிவிட்டிருந்தனர்.

ஒடிஸியஸை அவ்வளவு சீக்கிரமாக அங்கிருந்து திரும்பிச் செல்ல விடக்கூடாது என்பதுடன், அவனுக்குத் தேவையான அளவுக்குப் பரிசுகளையும் வழங்க வேண்டுமென்றும் ஆரிட்டோ ராணி கூறினார். அதை அங்கிருந்த எல்லோரும் ஏற்றுக் கொண்டனர். ஆனால், சொந்த நாட்டுக்குச் செல்ல அவசரப்படும் விருந்தாளியை இப்படிப் பிடித்து நிறுத்துவது முறையல்லவென்றும் மேற்கொண்டு ஒரே ஒருநாள் ஒடிஸியஸ் அங்கு தங்குவதானால் அதற்குள் தேவையான பரிசுப் பொருள்களைச் சேகரித்து விடுவதாகவும் ஆல்ஸினூஸ் சொன்னார்.

உடனே ஆரிட்டோ அங்கு குழுமியிருந்தவர்களிடம் சொன்னார்: 'மரியாதைக்கு உரிய என்னுடைய விருந்தாளிகளே... இவரைப் பற்றி உங்களது கருத்து என்ன? இந்த அளவுக்குச் சாகசங்கள் மற்றும் புத்திசாலித்தனம் கொண்ட ஒருவரை இதுவரை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவர் எனக்கு எப்படி ஒரு விருந்தாளியோ, அதே போல் உங்களுக்கும் விருந்தாளிதான். அதற்காக நீங்கள் பெருமிதப்படலாம். உடனே அவரை இங்கிருந்து அனுப்பிவிடக் கூடாது. அதனால் நீங்களும் தாராளமாக அவருக்குப் பரிசுப்பொருட்களைக் கொடுத்து மகிழுங்கள்!'

ஆரிட்டோ ராணியின் கருத்தை ஆமோதித்தபடி எக்கினியோஸ் சொன்னார்: 'அன்புக்குரிய நண்பர்களே நாம் ஒப்புக் கொள்ளும்படி, நமக்கு விருப்பமான காரியத்தையே மரியாதையின் நிமித்தம் நமது ராணி பேசினார். அவர் சொன்னவற்றை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ள வேண்டியது உங்கள் கடமை. மேற்கொண்டு நாம் செய்யும் ஒவ்வொரு காரியமும் ஆல்ஸினூஸ் மன்னரின் மனத்துக்குப் பிடித்தமானதாகவே இருக்க வேண்டும்!'

அதற்கு ஆல்ஸினூஸ் பதிலளித்தார்: 'நான் கடல் சார்ந்த வாழ்க்கை வாழும் ஃபீஷ்யன்களின் மன்னராக இருப்பது வரையில், இதெல்லாம் தடைபடாமல் தொடரவே வேண்டும்.

ஒடிஸியஸ் சொந்த ஊருக்குத் திரும்ப எவ்வளவுதான் அவசரப் பட்டாலும் இன்னும் ஒரு நாள் அவர் இங்கு தங்க வேண்டும் என்பதுதான் என்னுடைய வேண்டுகோளும். அதற்குள் தேவையான பரிசுப் பொருள்களை நாம் சேகரித்து விடவும் செய்யலாம். அவர் எந்தவித ஆபத்துமின்றிச் சொந்த நாட்டுக்குத் திரும்ப வேண்டும் என்பதுதான் நம் விருப்பமும். அவரை, அவரது சொந்த நாட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டியது மன்னர் என்ற முறையில் எனது தார்மீகமான கடமையும் கூட.

உடனே நான் அதற்குப் பதிலளித்தேன்: 'அன்பு நிறைந்தவரும், இரக்கம் உள்ளவருமான பிரபுவே, நான் இங்கு ஒரு வருடகாலம் தங்க வேண்டும் என்று கட்டளையிட்டாலும் நான் அதன்படி நடக்கத் தயார். அதற்குள் எனது பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளையும், எனக்கான பரிசுப் பொருள்களையும் சேகரிக்க உங்களால் முடியுமே! நான் எந்த அளவுக்குப் பரிசுப் பொருள்களைக் கொண்டு செல்கிறேனோ, அந்த அளவுக்கு எனக்கு இதயபூர்வமான, விமரிசையான வரவேற்பு எனது வீட்டிலிருந்து கிடைக்கும். நான் பத்திரமாக, உடல் நலத்துடன் இதாக்காவுக்குத் திரும்பிச் சென்றால், அவர்களுக்கு என் மீது பன்மடங்கு மதிப்பு அதிகரிக்கும். என்னை முன்னைவிட அதிகமாக நேசிக்கவும் செய்வார்கள்.'

ஆல்ஸினூஸ் இதயம் நிறைந்த அன்புடன் சொன்னார்: 'என் அன்புக்கு உரிய ஒடிஸியஸ், உங்களைப் பார்க்கும்போதே நீங்கள் ஒரு ஏமாற்றுக்காரரல்ல; நல்ல மனிதர், மகத்தானவர் என்பது விளங்குகிறது. வஞ்சகர்களும், வக்கிரபுத்தி உடையவர்களும் நம் நாட்டில் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். வீணான வதந்திகளைக் கிளப்பிவிட்டு மனிதர்களுக்கு இடையில் மோதலை ஏற்படுத்துகிறார்கள். துரோகம் செய்கிறார்கள். ஒடிஸியஸ் நீங்களோ, நேர்மையானவர். களங்கமற்றவர். கலைகளில் ஆர்வம் உள்ளவர். கடவுளால் ஆசீர்வதிக்கப்பட்ட ஒரு கவிஞரைப் போல் நீங்கள், நடந்ததையெல்லாம் எங்களுக்கு விவரித்துக் கூறினீர்கள். வேதனையும், துயரங்களும் மட்டுமே நிறைந்த பயணங்கள்.

ஆர்கீவ் இனத்தாரின் துயரக் கதையை நீங்கள் சொன்னது எங்கள் அனைவரின் இதயங்களையும் தொட்டது.'

இலியோனில் என்னுடன் இருந்த வீரர்களில் யாராவது ஒருவரைப் பாதாள உலகத்தில் சந்தித்தீர்களா என்று கேட்க ஆல்ஸினூஸ் விரும்பினார். அது தொடர்பாக நான் சொல்லும் சுவாரஸ்யமான கதையைக் கேட்க அவர் தயாராக இருப்பதாகவும், அதனால் தூங்காமல் இரவு முழுக்கக் கதை கேட்க விரும்புவதாகவும் குறிப்பிட்டார்.

ஆல்ஸினூஸின் அன்பு நிறைந்த வார்த்தைகள் என்னை மிகவும் மகிழ்ச்சிக்கு உள்ளாக்கியது. உடனே நான் சொன்னேன்: 'மகத்தான மன்னரே, நல்ல பெருங்கதைகள், ஆழமான தூக்கம். இவையிரண்டும் வெவ்வேறு விஷயங்கள். இருப்பினும் நீங்கள் கதை கேட்பதில் மிகவும் ஆர்வமுள்ளவராக இருப்பதால், இது வரை நான் சொன்னதைவிட இரக்கத்துக்குரிய எவ்வளவோ கதைகளைச் சொல்ல முடியும். போர்க்களத்தில் ஏற்பட்ட கோரமான அனுபவங்களை நேரிட்டு வெற்றி கண்டு, பத்திரமாகத் தாய்நாடு திரும்பிய பிறகு, ஒரு பெண்ணின் வஞ்சனையால் கடுமையான துயரங்களை அனுபவித்த வீரம் நிறைந்த படைவீரர்களின் வரலாறு என்றுகூட அதைச் சொல்லலாம்.

பயங்கரமான வடிவம் கொண்ட பெர்ஸிஃபோனியா, பெண்களின் ஆவிகளை ஒரு புறமாக ஒதுக்கித் தள்ளியது. அதற்குப் பிறகு என் முன்னால் தட்டுப்பட்டது இலியோனில் என்னுடன் தங்கியிருந்த அகமெம்னோன் மன்னர்தான். அவரது மனைவியின் வஞ்சனை காரணமாகக் கொடூரமாகக் கொலை செய்யப்பட்ட தன்னுடைய கதையை அவர் என்னிடம் விவரித்தார்.

அதன் பிறகு வந்தவர்கள் அக்கிலஸ், பெட்ரோக்லிஸ், ஆன்டிலோக்கஸ் போன்றோர்தான். அந்த ஆவிகளின் கூட்டத்திலும் அவர்களது தலைவராக இருந்தார் அக்கிலஸ். அவரிடம் என் மகனது வீரப் பிரதாபங்களைப் பற்றி எடுத்துக் கூறினேன். அதைக் கேட்டவர் பெருமிதத்துடன் என்னைக் கடந்து

சென்றார். பிறகு அயாஸ், ஸியூஸின் மகனான *மீனோஸ்,* மலை போன்ற உடல் கொண்ட *ஓரியன்,* *கயாவின்* மகன் *டிட்டியாஸ், டாண்டலோஸ், ஸிஸிஃபோஸ் ஃபெராக்கிள்ஸ்* உட்பட மேலும் பலரையும் அங்கு சந்தித்தேன். அவர்கள் ஒவ்வொருவரும் செய்த பாவத்தின் அளவையொட்டி, அங்கு தண்டனை அனுபவித்துக் கொண்டிருப்பதையும் என்னால் பார்க்க முடிந்தது. புகழ்பெற்ற தேவகுமாரனான *தீஸியஸ், பீரித்தூஸ்* போன்ற புராதன காலத்து மனிதர்களைக்கூட நான் அங்கு சந்திக்க விரும்பினேன். அதற்காகச் சற்றுநேரம் காத்திருக்கவும் செய்தேன். ஆனால், அதற்குள் அந்த ஆவிகள் கூட்டம் கூட்டமாக அலறியும், பயங்கரமான சத்தங்களை எழுப்பியும் ஆர்ப்பாட்டம் செய்தன. நான் பயந்து போனேன். பயங்கர உருவம் கொண்ட பெர்ஸிஃபோனியா, ஹேய்டீஸிலிருந்து பிசாசுகளையோ, ராட்சத வடிவமானவர்களையோ எனக்கு நேராக அனுப்பிவிடக் கூடும் என்று பயந்து நான் அவசர அவசரமாகக் கப்பலில் ஏறினேன். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அங்கிருந்து புறப்பட வேண்டுமென்று என் உதவியாளர் களிடம் கட்டளையிட்டேன்."

# XII

"எங்களது கப்பல் ஓஷியானஸைக் கடந்து பரந்தவெளிக் கடலுக்கு வந்து சேர்ந்தது. சூரியக் கடவுளான *ஹீலியோஸ்* உதிக்கும் எயியா தீவில் அன்று இரவு தங்கி ஓய்வெடுத்தோம். பாதாள உலகத்தில் *அல்வினோருக்குக்* கொடுத்த வார்த்தையைக் காப்பாற்றும் பொருட்டு அவனது உடலை எடுத்து வருவதற்காக மறுநாள் காலையில் என் மாலுமிகளில் சிலரை ஸார்ஸியின் வீட்டுக்கு அனுப்பி வைத்தேன். அதை அந்தத் தீவின் ஒரு பகுதியில் எரித்துவிட்டு, கல்லால் ஒரு நினைவுத்தூண் எழுப்பி அதன் மீது அவனது துடுப்பையும் வைத்தேன். ஸார்ஸியுடன் அவளது ஊழியர்களும் எங்களை வரவேற்பதற்காக வந்தனர். அவர்களது கைகளில் கூடை நிறையப் பலகாரங்களும்,

இறைச்சியும் சிவப்பு நிற மதுவும் அளவுக்கு அதிகமாக இருந்தன. விருந்துக்குப் பிறகு பயணம் செய்ய வேண்டிய பாதை குறித்து ஸார்ஸி விவரமாகக் சொன்னாள். என் உதவியாளர்கள் நல்ல உறக்கத்தில் ஆழ்ந்தபோது, அவள் என்னருகே வந்தாள்.

முதல் தடவையாக *ஸைரன்கள்* என்கிற பாட்டுப் பாடும் தேவர்களிடமிருந்து எப்படித் தப்பிப்பது என்பதைச் சொன்னாள்: 'இந்தப் பாடும் தேவர்களுக்கு, அவர்களை நெருங்கும் எப்படிப்பட்டவரையும் கவர்ந்து கொள்ளவும், வசீகரிக்கவும் முடியும். அப்பாவியான ஏதோ ஒரு மனிதன் தன்னையும் அறியாமல் அவர்களது பாட்டைக் கேட்டு விட்டால், அதன் பிறகு அவனால் தனது தாய்நாட்டை அடைய முடியாது. அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்க மனைவியோ, குழந்தைகளோ முற்படமாட்டார்கள்.

அருகிலுள்ள திறந்தவெளிப் புறப்பரப்பில்தான் அவர்கள் அமர்ந்திருப்பார்கள். அவர்களுக்குச் சுற்றிலும் அழுகி, இற்றுப்போன சதைகளும், எலும்புகளும் குன்றுபோல் குவிந்து கிடப்பதைக் காணலாம். உங்களது உதவியாளர்கள் எவரும் ஒருபோதும் அவர்களது பாட்டைக் கேட்டுவிடக் கூடாது. அப்படி நேர்ந்தால் அது ஆபத்து. வேண்டுமானால் ஒன்று செய்யலாம். பாட்டுக் கேட்க முடியாதபடி அவர்களது காதுகளை மெழுகினால் அடைத்து விடலாம். ஆனால், நீங்கள் அந்தப் பாட்டைக் கேட்க விரும்பினால், உங்களது உதவியாளர்களிடம் சொல்லி, உங்களது கை கால்களை பத்திரமாகப் பாய்மரத்தில் கட்டிப் போடச் சொல்லுங்கள். அதன் பிறகு அந்தப் பாட்டைக் கேட்பதில் எந்த விதமான ஆபத்தும் இல்லை. கட்டுகளை அவிழ்த்து விடுமாறு நீங்கள் கேட்டுக் கொண்டால்கூட, அவர்கள் அவிழ்த்து விடக் கூடாது என்பதையும் முதலிலேயே அவர்களிடம் சொல்லி வையுங்கள்.

இப்படி இந்த இடத்திலிருந்து நீங்கள் தப்பித்துவிட்டால் பிறகு இரண்டு வழிகள் உண்டு. இதில் எதைத் தேர்ந்தெடுப்பது என்பதை உங்களது புத்திசாலித்தனத்தை வைத்து நீங்களே

தீர்மானிக்க வேண்டும். பிறகு ஆம்ஃபிடிரைட்டியின் பிரம்மாண்டமான அலைகளுக்கும், ஆபத்து நிறைந்த பாறைக் கூட்டங்களுக்கும் நடுவே பயணம் செய்யும்போது எப்படித் தப்பிக்கலாம் என்பதற்கும் வழி சொல்லிக் கொடுத்தாள். ஸியூஸுக்கு உணவு எடுத்துச் செல்லும் புறாக்கள்கூட, அந்தப் பகுதியைக் கடக்கும்போது இறந்து வீழ்வது வழக்கம். எயிட்டாவை நோக்கிச் செல்லும் பயணத்தின்போது உலகப் புகழ்பெற்ற *ஆர்கோஸ்* கப்பல் மட்டும்தான் அங்கிருந்து தப்பித்திருக்கிறது. அதுவும் ஹீராதேவி, கப்பலை மறுபுறம் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டதால்.

மற்றொரு வழி இரண்டு மலைச் சிகரங்களுக்கு ஊடாகச் செல்வது. ஆகாயத்தைத் தொட்டுக் கொண்டு நிற்பதும், இருள் நிறைந்ததும், பளபளப்பான பாறைகள் நிறைந்ததுமான ஒரு மலையின் இருளடைந்த குகை ஒன்றில்தான் *ஸில்லா* வசிக்கிறாள். கோரமான உருவமும், பயங்கரத் தன்மைகளும் கொண்ட பிசாசு அவள். அகலமான பன்னிரண்டு பாதங்களும் நீண்ட ஆறு கழுத்துகளும், ஒவ்வொரு கழுத்தின் மேற்புறமும் மூன்று பல் வரிசை கொண்ட தலையும் உள்ளவள். வழக்கமாகக் கடலிலுள்ள பெரிய மீன்களை மட்டுமே அவள் வேட்டையாடுவாள்.

எந்த ஒரு மாலுமியும் இன்று வரை அவளது பிடியிலிருந்து மீண்டது இல்லை.

மற்றொரு மலையில் ஒரு பெரிய அத்திமரம் உள்ளது. அதன் கீழ் *சாரிபடீஸ்* வசிக்கிறாள். அங்கு கன்னங்கரேல் என்று இருக்கும் தண்ணீரை ஒரு நாளைக்கு மூன்று முறை குடித்துவிட்டு மீண்டும் வெளியே துப்பிவிடுகிறாள். அவள் தண்ணீரைக் குடிக்கும்போது அந்தப் பகுதியிலுள்ள எவராலும் தப்பிக்க முடியாது. பிரபஞ்சம் முழுவதையுமே தகர்த்துவிடக்கூடிய பொஸடோனால்கூட உங்களை இந்தப் பயங்கரமான பெண்ணிடமிருந்து காப்பாற்ற முடியாது. அதனால் ஸில்லா இருக்கும் பாதையில் செல்லுங்கள். அங்கு யாராவது பலியானாலும் ஆறு பேருடன் முடிந்துபோகும். அங்கு போனால், நீங்கள் ஸில்லாவின் தாயாரை உதவிக்குக்

கூப்பிடுங்கள். அவரால் மட்டும்தான் அந்த ஸில்லாவைக் கட்டுப்படுத்த முடியும்.'

உடனே நான் குறுக்கிட்டேன்: 'தேவியே எனது வேண்டுகோளைத் தயவு செய்து கேளுங்கள். அதைப்பற்றிய உங்களது கருத்து என்ன? நான் சாரிபடீஸின் பிடியிலிருந்து தப்பிப்பதும், ஸில்லா என்னுடைய ஆட்களைப் பிடித்துக் கொள்ளும்போதும் நான் அவளை எதிர்த்துப் போரிடுகிறேன் என்றும் வைத்துக் கொள்ளுங்கள்...

ஸார்ஸி உடனே பதிலளித்தாள்: 'சாகசம் நிறைந்த மனிதரே, நீங்கள் சளைக்காமல் போரிடுவது, ஆபத்தில் சிக்கிக் கொள்வது போன்றவற்றையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அழியாத தேவர்களைக்கூட எதிர்த்து நிற்க வேண்டும் என்பதுதான் உங்களது ஆசை. ஸில்லா சாதாரணமான மனிதப் பெண் அல்ல. பயங்கரமானவள். பிசாசின் குணங்கள் அவளுக்கும் உண்டு. அவளுடன் மோதிய யாரும் இதுவரை வெற்றி பெற்றதில்லை. அதனால் போரிட்டு வெற்றி பெற்றுவிடலாம் என்று நினைக்காதீர்கள் அது மரணத்தை வலிய வரவழைப்பதற்கு ஒப்பானது. நான் ஏற்கெனவே குறிப்பிட்டது மாதிரி உங்கள் உதவிக்கு *கிராட்டாவை* அழைத்துக் கொள்ளுங்கள். அவள், தனது மகளை, கொடூரமான செயல்களிலிருந்து பின்வாங்கச் செய்வாள். பிறகு அங்கிருந்து *ஹீலியோஸின்* கால்நடைகள் மேய்ந்து கொண்டிருக்கும் *திரினேஷ்யா* தீவை அடைவீர்கள். அவற்றை எந்த விதமாகவும் தொல்லை செய்யாமலிருந்தால், சீக்கிரமாகவே நீங்கள் இதாக்காவை அடையலாம். மாறாக அவற்றுக்கு ஏதாவது ஊறு விளைவித்தால், நீங்கள் கப்பல்களையும், உங்களது ஆட்களையும் இழந்துவிடுவீர்கள். அதன்பின் எண்ணிலடங்கா துயரங்களை அனுபவித்து, எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு தான் நீங்கள் உங்களது தாய்நாட்டை அடைய முடியும்.'

ஸார்ஸி இந்தத் தகவல்களையெல்லாம் சொல்லிமுடித்த போது பொழுது விடிந்துவிட்டது. நாங்கள் பயணத்துக்குத்

தயாரானோம். எங்களுக்கு உதவி செய்வதற்காக, அவள் அனுகூலமான காற்றை எங்களுடன் அனுப்பிவைத்தாள். ஆனால், நான் அப்போதும் பதற்றத்துடன்தான் இருந்தேன். எனது உதவியாளர்கள் மற்றும் மாலுமிகளை அழைத்தேன். ஸார்ஸி தீர்க்கதரிசனமாகச் சொன்னதையெல்லாம் அவர்களிடம் ஒன்று விடாமல் தெரிவித்தேன். 'இதையெல்லாம் உங்களிடம் சொல்ல வேண்டியது என் கடமை. நாம் இதிலிருந்து தப்பிப்பதோ, ஆபத்துக்குள்ளாகி மரணமடைவதோ எதுவோ ஒன்று நடக்கட்டும். இருப்பினும் உண்மை நிலையை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். முதலில் நாம் அற்புதமான இசையையும் பாடலையும் கேட்போம். அது கேட்கத் தொடங்கும்போதே அழகான புல்வெளியாகத் தென்படும் அந்த இடத்தை நாம் விரைவாகக் கடந்துவிட வேண்டும் என்பதுதான் தேவியின் கட்டளை. ஆனால், அதற்கு முன்பாக நீங்கள் வலுவான கயிற்றால் என்னைப் பாய்மரத்துடன் சேர்த்துக் கட்டிப்போட வேண்டும். நானே அவிழ்த்து விடச் சொன்னாலும் நீங்கள் என்னை அவிழ்த்து விடக்கூடாது. அப்படிச் செய்தால் நிலைமை மிகவும் ஆபத்தாகி விடும்.

காற்று எங்களுக்கு அனுகூலமாக இருந்ததால் நாங்கள் எதிர்பார்த்ததைவிட விரைவாகப் பாடும் தேவர்களின் பகுதியை நெருங்கினோம். அப்போது சொல்லி வைத்தாற்போல் காற்றும் நிலைத்தது. எங்கும் பயங்கரமான அமைதி நிலவியது. கடலின் மேற்பரப்பில் நுரைகூடத் தென்படவில்லை. உடனே என்னுடைய ஆட்கள் பாய்த்துணிகளைச் சுருட்டி வைத்துவிட்டு, வேகவேகமாகத் துடுப்புப் போடத் தொடங்கினர். ஒவ்வொருவரும் அவரது மொத்தச் சக்தியையும் திரட்டித் துடுப்புப் போட்டனர். நான் ஒரு பெரிய மெழுகுக் கட்டியை எடுத்து ஒவ்வொரு வீரனின் காதுகளையும் மூடிவிட்டேன். பிறகு நான் கேட்டுக் கொண்டவாறே என்னைப் பாய்மரத்துடன் சேர்த்துப் பிணைத்தனர்.

கரையிலிருந்து கூப்பிடுதொலைவுக்கு எங்கள் படகு வரும்போது பாடும் தேவர்கள் எங்களைப் பார்த்து விட்டனர்.

உடனே தங்களது வசீகரமான பாடலை மனதைக் கவரும் இசையுடன் பாடவும் தொடங்கினர். ‘மகத்தான வீரரான ஒடிஸியஸ், இந்த வழியாக வாருங்கள். நீங்கள் உலகமே பெருமிதப்படக்கூடிய ஒருவர். வீரர்களில் சிறந்த வீரர். தைரியசாலியான நீங்கள், உங்களது கப்பல்களை அங்கேயே விட்டுவிட்டு உலகையே மயங்கச் செய்யும் எங்களது பாட்டைக் கேளுங்கள். தேனைவிட இனிமையான எங்களது பாடல்களைக் கேட்டு ரசிக்காமல் யாருமே இந்தப் பகுதியைக் கடந்து செல்ல முடியாது. இந்தப் பாட்டைக் கேட்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் மேலும் புத்திசாலிகள் ஆவதுடன், வெற்றி வீரராகவும் திகழ்வார்கள்.

அப்படிப்பட்டவர்களுக்குத் தங்களது தாய்நாட்டில் கிடைப்பது இதயபூர்வமான வரவேற்பாக இருக்கும். ஏனெனில் கடவுள்களின் தீர்மானப்படி ஆர்க்கீவ்களும், டிரோஜன்களும் போர்க்களத்தில் அனுபவித்த துயரங்கள் எங்களுக்கு நன்றாகத் தெரியும். அது மட்டுமின்றி, மேற்கொண்டு இந்த மண்ணில் நடக்கவிருக்கும் காரியங்களைப் பற்றியும் எங்களால் விளக்கமாகச் சொல்லமுடியும்.’

இப்படியெல்லாம் புகழ்ந்து பாடும் அவர்களது பாடலையே மேலும் மேலும் கேட்க வேண்டுமென்ற ஆவல் எனக்குள் எழுந்தது. சொன்னால் நம்ப மாட்டீர்கள், என்னுள் அடக்க முடியாத வேட்கை எழுந்தது. உடனே எனது கட்டுகளை அவிழ்த்துவிடுமாறு கேட்டுக் கொண்டேன். ஆனால், என் உதவியாளர்கள் அதன்படி நடந்து கொள்ளவில்லை. கடைசியில் அவர்களது பாட்டுக் கேட்காத தொலைவை நான் அடைந்தபோது, என்னுடைய ஆட்கள் எனது கட்டுகளை அவிழ்த்துவிட்டனர். அதன் பிறகு நான் அவர்களது காதுகளில் வைத்திருந்த மெழுகுத் துண்டுகளை எடுத்துவிட்டேன்.

இப்படியாக ஸைரன்களின் மயக்கும் பாடல்களின் கவர்ச்சியிலிருந்து நாங்கள் ஒருவாறு தப்பித்தோம். பிறகு ஸில்லாவின் குகையை நெருங்கினோம். அங்கு புகைப்படலம்

ஆகாயத்தைத் தொடுமளவு அடர்ந்து வளர்ந்திருந்தது. முன்னாலும் பின்னாலும் உள்ள எதுவுமே எங்களது கண்களுக்குப் புலப்படவில்லை. உடனே, நான் என் வீரர்களுக்குத் தைரியத்தை ஊட்டினேன். பாறைக் கூட்டத்தின் மையத்தில் உள்ள நீர்ப்பரப்பிலிருந்து கப்பல்களை விரைவாகத் துடுப்புப் போட்டு வெளியேற்றுமாறு கட்டளையிட்டேன். மறுபுறம் சாரீபடீஸ், கடல்நீரை உறிஞ்சும் பயங்கரமான காட்சியை ஒரு தடவை பார்த்துவிட்டுத் திரும்புவதற்குள் ஸில்லா என் வீரர்களில் ஆறு பேரைத் தூக்கிக் கொண்டாள். மற்றவர்கள் ஒருவாறாக உயிர்பிழைத்து ஹீலியோஸின் தீவை அடைந்தோம்.

எந்தக் காரணத்துக்காகவும் அந்தத் தீவில் இறங்கக்கூடாது என்று நான் வீரர்களிடம் கண்டிப்புடன் கூறினேன். ஆனால், அங்கு கரையிறங்கிச் சற்றுநேரம் ஓய்வு எடுத்துக் கொண்டு புறப்படலாம் என்று பிடிவாதமாகச் சொன்னான் யூரிலோக்கஸ். அவனது குரல் கோபத்துடன் ஒலித்தது. 'ஒடிஸியஸ், நீங்கள் கல்மனம் கொண்டவர். உங்களுக்குக் களைப்பு இல்லை. அதனால் உங்களுக்கு ஒருபோதும் ஓய்வு தேவையில்லை. கடவுள் உங்களை இரும்பைக் கொண்டா படைத்திருக்கிறார்? உங்களது வீரர்கள் சோர்வினால், பாதி உயிரை இழந்து தவிப்பது உங்களுக்குத் தெரியவில்லையா? அப்படி இருந்தும் இந்தத் தீவில் இறங்கி உணவு சமைத்துச் சாப்பிட நீங்கள் அனுமதிக்காமல் இருக்கிறீர்கள். இந்த இரவு முழுவதும் எங்களைப் பட்டினி போட்டுக் கொல்வதுதான் உங்கள் நோக்கமா? இவ்வளவு அழகான ஒரு தீவைப் பார்த்த பிறகு ஓய்வு எடுக்காமல் பயணம் செய்ய யாராலாவது முடியுமா? இந்த ஓய்வு நேரத்துக்குப் பதிலாக நாங்கள் கடுமையான இருட்டில்கூட கப்பலுக்குத் துடுப்புப் போடத் தயார். உங்களுக்கே தெரியும்... எல்லா விதமான ஆபத்துகளும் இரவில்தான் ஏற்படுகின்றன என்று. அதனால் கப்பலை உடனே கரைக்குக் கொண்டு சென்று, உணவு சமைத்துச் சாப்பிட்டு, இன்றிரவு நாம் இந்தத் தீவில் ஓய்வு எடுப்பதுதான் நல்லது. இதுதான் மாற்ற முடியாத என்னுடைய வேண்டுகோளும்கூட!'

யூரிலோக்கஸின் கருத்தையே மற்றவர்களும் ஆமோதித்தனர். என்னால் அவர்களை எந்த விதமாகவும் கட்டுப்படுத்த முடியவில்லை. கடைசியில் அங்குள்ள கால்நடைகளைத் தொல்லைப்படுத்தக் கூடாது என்று அவர்கள் எல்லோரிடமும் சத்தியம் வாங்கினேன்.

கப்பலிலுள்ள உணவுப் பொருள்கள் தீர்வது வரையில் அவர்கள் கொடுத்த சத்தியத்தைக் காப்பாற்றினார்கள். காற்று எதிர்த்திசையில் வலுவாக வீசியதால் நாங்கள் அந்தத் தீவில் சுமார் ஒரு மாதகாலம் தங்க நேர்ந்தது. இந்தச் சூழ்நிலையில் தேவர்களிடம் உதவி செய்யுமாறு கோருவதற்காக நான் கரைக்கு வந்தேன். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட யூரிலோக்கஸ், அங்கிருந்த கால்நடைகளை வேட்டையாடிச் சமைக்குமாறு வீரர்களிடம் சொன்னான். அதற்குள் தேவர்கள் என்னை உறக்கத்தில் ஆழ்த்தினர்.

நான் கண் விழித்தபோது கண்ட காட்சி என்னை நடுங்க வைத்தது. அதனால் தேவர்களின் விருப்பப்படி மேற்கொண்டு நடப்பதையெல்லாம் அனுபவிக்க வேண்டியதுதான். வேறு என்ன செய்வது? ஆறு நாட்கள் அவர்கள் ஹீலியோஸின் ஆடுமாடுகளை வேட்டையாடிச் சமைத்துச் சாப்பிட்டனர். ஏழாவது நாளன்று காற்று எங்களுக்குச் சாதகமாக இருக்கவே பயணத்தைத் தொடர்ந்தோம். ஆனால், எவ்வளவுதான் பயணம் செய்தும் கரை எதுவும் தட்டுப்படாமல் நாங்கள் கடலிலேயே சுற்றிச்சுற்றி வந்தோம். திடுமென்று ஆகாயம், கார்மேகங்களால் சூழப்பட்டது. இருட்டு எங்களை மூடியது. கப்பல் ஓர் அங்குலம் கூட முன்னேறாமல் அப்படியே நின்றுவிட்டது. மேற்குப்புறத்திலிருந்து எழும்பிய சூறைக்காற்று எங்கள் கப்பலைக் கடுமையாகத் தாக்கியது. பாய்மரம் பெயர்ந்து விழுந்ததால், சுக்கான் பிடித்திருந்தவனின் மண்டை பிளந்தது. அவன் அப்படியே தலைகுப்புறக் கடலில் விழுந்து இறந்தான். அப்போது சரியாக ஸியூஸ் தனது வஜ்ராயுதத்தை எங்களது கப்பலுக்கு நேராகச் செலுத்தினார். கப்பல் தள்ளாடியது.

கப்பலில் இருந்த மாலுமிகள், கப்பலிலிருந்து வீசியெறியப்பட்டுக் கடலில் விழுந்து இறந்தனர். அலைகளின் மோதலால் கப்பலின் பக்கவாட்டுப் பலகைகள் பிளந்து கொண்டன. உடைந்த பாய்மரத்தையும், சுக்கானையும் இணைத்துப் பிடித்தபடி நான் அதன் மீது ஏறியமர்ந்து கொண்டு சூறாவளியுடன் போராடினேன்.

மேலைக்காற்று சற்றுத் தணிந்தபோது, தென்திசைக் காற்று வலுவாக வீசத் தொடங்கியது. என்னைப் பொறுத்தவரை இது மிகவும் ஆபத்தான நிலைமையாக இருந்தது. காரணம், இந்தக் காற்று மீண்டும் என்னை சாரிபடீஸுக்கே கொண்டுபோய்ச் சேர்த்துவிடுமோ என்று பயந்ததுதான். அன்றிரவு முழுவதும் நான் கடலின் மேற்புறம் மிதந்தும் தாழ்ந்தும் ஒருவாறாகப் பொழுதைக் கழித்தேன். பிரம்மாண்டமான அலைகளின் தாக்குதலில் நான் சோர்வடைந்தேன். விடியற்காலையில் ஸில்லாவும் சாரிபடீஸும் என் முன்னால் தென்பட்டனர். சாரிபடீஸ் கடல் தண்ணீர் முழுவதையும் குடித்து வற்ற வைத்தாள். அதற்குள் அலையால் தூக்கி வீசப்பட்ட நான் மிகவும் உயரத்துக்குத் தூக்கிச் செல்லப்பட்டேன். எனவே சட்டென்று அருகிலிருந்த அத்திமரத்தை வலுவாகப் பற்றிக்கொண்டேன். ஒரு வௌவால் மாதிரி அதன் மீது தொங்கியபடி கிடந்தேன்.

தரையில் எங்காவது ஓரிடத்தில் காலை .ஊன்றித் தப்பிக்கலாம் என்று பார்த்தேன். அதற்கு எந்த விதமான வழியும் இல்லை. அதே போல் என்னால் மேற்புறமாக மரத்தில் ஏறவும் முடியவில்லை. ஏனெனில் வேர்கள் எல்லாம் மிகவும் ஆழத்தில், கீழ்ப்பகுதியில் இருந்தன. பருமனான கிளைகள் சாரிபடீஸின் முதுகுப் பக்கமாக நீண்டிருந்தன. எனது பாய்மரமும் சுக்கானும் அலைகளில் சிக்கி மேலெழும்பி வருவது வரையில் நான் கிளையிலிருந்து பிடியை விடாமல் வலுவாக அதில் தொங்கிக் கொண்டிருந்தேன். அந்தச் சந்தர்ப்பத்தில் பாய்மரம் என் கைக்குக் கிடைக்க நான் எவ்வளவு ஆசைப்பட்டேன் தெரியுமா? கடைசியில் பொறுமையைச் சோதித்துக் கொண்டு அது என்

கைக்கு அகப்படவே செய்தது. அதே நேரம் கப்பலின் மற்றும் சில மரத்துண்டுகள் சாரிபடீஸிடமிருந்து விடுபட்டு என்னிடம் வந்து சேர்ந்தன. நான் கைகளால் நீட்டி நிமிர்ந்து தண்ணீரின் மீது அப்படியே படுத்துக் கொண்டேன். ஒரு பெரிய அலை என்னை ஓர் அகன்ற பலகையிடம் கொண்டுபோய்ச் சேர்த்தது. உடனே நான் ஒரு தவளை மாதிரி அதன் மீது ஏறி உட்கார்ந்து கொண்டேன். பிறகு இரண்டு கையாலும் என்னால் முடிந்த மட்டும் துடுப்பு மாதிரி நீரைத் தள்ளி விட்டேன்.

ஸில்லா எங்கே போனாள்? பூமியிலும் சொர்க்கத்திலும் உள்ள எல்லா உயிர்களினதும் பாதுகாவலரான பிதா, என் மீது அவளது பார்வையைக்கூட படவிடவில்லை. அப்படி மட்டும் ஏதாவது நடந்திருந்தால், ஐயோ... பிறகு என்னால் அங்கிருந்து தப்பித்திருக்கவே முடியாது என்பது உறுதி!

அங்கிருந்து ஒன்பது பகலும் ஒன்பது இரவுகளும் நான் அந்தப் பலகை மீது அமர்ந்தே பொழுதைக் கழித்தேன். கடலுடன் நான் வாழ்வா, சாவா போராட்டத்தை நடத்த நேர்ந்தது. பத்தாவது நாளன்று இரவில் தேவதைகள் என்னை ஒஜீஜியா தீவில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அழகானவளும், பயங்கர இயல்புகள் கொண்டவளுமான காலிப்ஸோ என்கிற தேவதை அங்குதான் வசிக்கிறாள். மனிதர்களின் மொழியைப் பேசக் கற்றுக் கொண்டிருந்த அவள், என்னைக் காப்பாற்றிப் பராமரித்தாள். என் மீது அன்பு காட்டினாள். அதற்குப் பிறகு நடந்த கதையை நான் மறுபடியும் சொல்ல வேண்டியதில்லையே..."

# XIII

ஒடிஸியஸ் தனது கதையை முடித்துக் கொண்டபோது, அந்தப்பகுதி மொத்தமும் அமைதியாக இருந்தது.

சற்று நேரத்துக்குப் பிறகு ஆல்ஸினூஸ் சொன்னார்: "என்னுடைய அரண்மனைக்கு வந்த நீங்கள், வெறும் கையுடன்

சோர்ந்துபோய் உங்கள் தாய்நாட்டுக்குச் செல்ல வேண்டியிருக்காது. என்னுடைய விருந்தாளி கொண்டு செல்வதற்கான உயர்ந்த வகை உடைகளும், தங்கக் கட்டிகளும், என் நாட்டினர் உங்களுக்குப் பரிசாக வழங்கியுள்ள பொருள்களும், ஒரு பெரியபெட்டிக்குள் பத்திரமாக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. மேற்கொண்டு எனது குடிமக்களிடமிருந்து ஒரு பெரிய தொகையை வசூல் செய்து ஒரு பெரிய சமையல் பாத்திரத்தையும் உங்களுக்குப் பரிசளிக்கவிருக்கிறேன்."

பொழுது விடிந்தபோது ஒவ்வொருவரும் ஒவ்வொரு பித்தளைப் பாத்திரத்துடன் கப்பலுக்கு வந்தனர். ஆல்ஸினூஸின் மேற்பார்வையிலேயே அவையெல்லாம் கப்பலுக்குள் பத்திரமாக ஓரிடத்தில் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டன. பிறகு மன்னர் அளிக்கும் விருந்தில் கலந்து கொள்வதற்காக எல்லோரும் அரண்மனைக்கு வந்து சேர்ந்தனர். எத்தனை முறை கேட்டாலும் அலுப்பு ஏற்படாத நல்ல பாடல்களைப் பாடியபடி டெமடோக்கஸ் அங்கிருந்தவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்.

அங்கிருந்த ஒடிஸியஸ் அடிக்கடி தனது தலையை உயர்த்தி சூரிய தேவனைப் பார்த்துக் கொண்டிருந்தான். பயணம் புறப்படும் நேரம் நெருங்க நெருங்க ஒடிஸியஸ் பொறுமை இழந்ததுதான் காரணம். பகல் முழுவதும் தோட்டம்துரவுகளில் ஓய்வு ஒழிச்சலின்றி பணிபுரிந்த ஒருவன் சோர்வு அடைந்து வீட்டுக்கு வந்து சாப்பிடுவதற்காக சூரிய அஸ்தமனத்தை எப்படி எதிர்பார்ப்பானோ, அதைவிட அதிகமான ஆவலும் எதிர்பார்ப்பும் அவனிடமிருந்தது. பயணம் புறப்படுவதில் ஒடிஸியஸ் அந்த நாட்டுக் குடிமக்களையும், ஆல்ஸினூஸையும் பாராட்டிப் பேசத் தொடங்கினான்.

"பெரு மதிப்புக்கு உரிய ஆல்ஸினூஸ், உலகப்புகழ் பெற்ற மன்னரே... இனி தேவர்களுக்குப் பூஜை செய்துவிட்டு, நான் பயணம் புறப்பட அனுமதி அளியுங்கள். எல்லாம் வல்ல கடவுள் உங்கள் எல்லோரையும் ஆசீர்வதிப்பாராக. நான் விரும்பியதெல்லாம் உங்கள் மூலமாக நிறைவேறியிருக்கிறது. நேர்மை

யானவர்களின் மனமார்ந்த, அன்பு நிறைந்த ஆதரவு, தாராளமான நன்கொடைகள் இவற்றையெல்லாம்விட என்னைப் போன்றவர்களுக்கு வேறு என்ன வேண்டும்? இதன் பொருட்டே, கடவுள், மன்னரின் விருப்பங்களுக்கேற்ப, உங்கள் அனைவரின் விருப்பங்களையும் நிறைவேற்றுவாராக. அதற்காக நான் மனமாரப் பிரார்த்தனை செய்கிறேன். நான், மேற்கொண்டு எந்தவிதமான ஆபத்துகளும் இன்றி எனது நாட்டை அடைவதற்கும், அன்பு நிறைந்தவர்களும் நம்பிக்கைக்கு உரியவர்களுமான என் மனைவி மற்றும் உறவினர்களை உடல் நலத்துடனும் வசதி வாய்ப்புகளுடனும் சந்திக்க நீங்கள் என்னை ஆசீர்வதிப்பீர்களாக. அதே மாதிரி கடவுள் உங்கள் எல்லாரது விருப்பங்களையும் நிறைவேற்றி உங்கள் மீது கருணை பொழிவாராக"என்றான்.

அன்பும் மகிழ்ச்சியும் நிறைந்த விருந்துக்குப் பிறகு பரஸ்பரம் ஆசீர்வாதங்களும், பிரார்த்தனைகளும் நடத்திவிட்டு ஒடிஸியஸ் கப்பலில் ஏறினான். அதற்குப் பிறகு குடிமக்கள் கொண்டுவந்த பரிசுகளும் கப்பலில் உரிய இடத்தில் அடுக்கி வைக்கப்பட்டன. அதன்பின் கப்பல் புறப்படத் தொடங்கியது. ஒடிஸியஸ் சௌகரியமான தூக்கத்தில் ஆழ்ந்தான். மறுநாள் விடியற்காலையில் இதாக்காவின் துறைமுகத்தை அடையும் போதும் ஒடிஸியஸ் எழுந்திருக்கவில்லை. மாலுமிகள், அவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பாமல், போர்வையால் மூடியபடி ஒரு ஆலிவ் மரத்தின் அருகில் கொண்டுபோய்ப் படுக்கவைத்தனர். அவனுக்குக் கிடைத்த உயரிய பரிசுப் பொருட்களையும் அவனுக்கு அருகே வைத்துவிட்டு, அவர்கள் கப்பலை ஓட்டிச் சென்றனர்.

ஃபீஷியன்கள் ஒடிஸியஸைப் பத்திரமாக இதாக்காவுக்குக் கொண்டுவந்து சேர்த்ததை பொஸடோன் கொஞ்சம்கூட விரும்பவில்லை. அதனால், இதாக்காவிலிருந்து புறப்பட்ட கப்பலை, அவர்களது சொந்தத் துறைமுகத்தை நெருங்கும்போது ஒரு பெரிய பாறாங்கல்லாக மாற்றிக் கடலின் அடியில் உள்ள மணற்பரப்பின் மீது போட்டு விட்டார். பிறகு அந்த நாட்டையே விண்ணைத் தொடும் மூன்று மலைச் சிகரங்களால் மூடச் செய்து தனிமைப்படுத்தினார்.

ஒடிஸியஸ் உறக்கத்திலிருந்து விடுபட்டுக் கண் விழித்தான். சொந்த நாட்டில், சொந்த மண்ணில்தான் படுத்திருக்கிறோம் என்றாலும் அதெல்லாம் அவனுக்குத் தெரியவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால், ஸியூஸின் திவ்வியமான மகளான *பால்லாஸ்*, அதீனிதேவி போன்றோர் அவனிடம் அதுவரை நடந்த சம்பவங்களை நேரடியாகத் தெரிவிக்க விரும்பினர். மட்டுமின்றி அவனது வேடத்தையே மாற்ற வேண்டுமென்றும் விரும்பினர். அதனால் அந்தப் பகுதியையே அவர்கள் கடுமையான பனிமூட்டத்தால் மறைத்திருந்தனர். ஒடிஸியஸின் மனைவியை அடைய விரும்பிய எதிர்காலக் கணவர்கள் அதுவரை செய்துள்ள நீசத்தனமான செயல்களுக்கும், அவர்கள் ஏற்படுத்தியுள்ள அவமானத்துக்கும் உரிய தண்டனையை அவர்களுக்கு வழங்க வேண்டும் என்பதுதான். மட்டுமின்றி ஒடிஸியஸின் நெருங்கிய உறவினர்களும், அவனது மனைவியுமேகூட ஒடிஸியஸை உடனடியாக அடையாளம் தெரிந்து கொள்ளக் கூடாதென்று விரும்பினர். அதனால், அந்தப் பகுதியே ஒடிஸியஸுக்குப் பழக்க மற்ற ஏதோ ஒரு புதிய இடம்போல் தென்பட்டது. துறைமுகம், பாறைகள், மரங்கள் உட்பட அனைத்துமே அவனுக்கு முற்றிலும் புதிய இடம் போன்ற ஒரு மாயையை ஏற்படுத்தியது.

ஒடிஸியஸ் அளவு கடந்த ஆர்வத்துடன் தனது தாய் நாட்டின் ஒவ்வொரு பகுதியையும் பார்த்தான். அவனது பார்வை கண்ணுக்கெட்டிய தொலைவு வரை நீண்டது. எதுவும் விளங்காததால் அவனது மனம் நிம்மதியிழந்தது. திகைப்பும், வியப்பும் கலந்த மனநிலையில் அவன் வலுவாகத் தனது தொடையில் தட்டினான். பின்பு புலம்பல் மாதிரி அவன் தனக்குத் தானே பேசிக்கொண்டான்:

“என்ன, இப்போதும் என்னை ஆபத்துகள் பின் தொடர்கிறதா? நான் இப்போது எங்கு இருக்கிறேன்? எப்படிப்பட்ட மனிதர்கள் இங்கு வசிக்கிறார்கள்? இவர்கள் நீதியும் நேர்மையும் நியதியும் இல்லாத காட்டுமிராண்டிகளா அல்லது சட்டம் ஒழுங்கு தவறாமல் வாழ்கின்ற கருணை உள்ளவர்களா?

என்னிடமுள்ள விலை உயர்ந்த பரிசுகளை நான் எப்படிப் பாதுகாப்பது? மேற்கொண்டு நான் எங்கு செல்வது? என்னுடைய வீரர்கள் ஃபீஷ்யாவிலேயே தங்கியிருந்திருக்கலாம் என்று என் மனம் ஆசைப்படுகிறது. அப்படியானால், மேலும் சக்தியுள்ள வேறொரு மன்னரை நான் எப்படிச் சந்தித்திருக்க முடியும்? அபயம் தேடி வந்தவர்களை கைவிடாத இரக்கமுள்ள மன்னர் என்னைப் பத்திரமாக என் நாட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதாகச் சொன்னாரே?"

இப்போதைய என்னுடைய நிலையில் என் கைவசமுள்ள அபூர்வப் பொருள்களை எங்கே பாதுகாப்பது என்பதே எனக்குப் புரியவில்லை. யார் வேண்டுமானாலும், இவற்றை எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போகலாமே? என்னுடைய நிலை எப்போதும் கஷ்டப்படுவதுதானா? அந்த ஃபீஷியன் நாட்டு மக்கள் நேர்மையானவர்கள். சட்டத்துக்குப் பயந்து வாழ்பவர்கள் என்று என்னால் நம்ப முடியவில்லை. இல்லாவிட்டால் என்னைப் பத்திரமாக இதாக்காவில் கொண்டுபோய்ச் சேர்ப்பதாகச் சொல்லிவிட்டு, முற்றிலும் பழக்க மில்லாத இப்படியொரு இடத்திலா கொண்டுவந்து இறக்கியிருப்பார்கள்? பக்தர்களின் பிரார்த்தனையை எப்போதும் கேட்டுக் கொண்டு அதற்கேற்றபடி நல்லவர்களுக்கு நல்லதும், கெட்டவர்களுக்குத் தீமையையும் செய்கிற ஸியூஸ் பகவானே அவர்களுக்கு உரிய பலனை அளிக்கட்டும். எப்படியிருந்தாலும் என்னுடைய கைவசமுள்ள பொருள்கள் சரியாக உள்ளதா என்று முதலில் சரிபார்க்க வேண்டும்.

தங்கம், வெள்ளி போன்றவற்றுடன் பெரியபெரிய சமையல் பாத்திரங்களும் உயர்ந்த உடைகளும் பெரும்பாலும் எல்லாம் சரியாகவே இருந்தன. எதுவும் திருட்டுப் போகவில்லை. பிறகு தாங்க முடியாத துயரத்துடன் கடற்கரையில் சற்றுத் தூரம் அங்குமிங்குமாக நடந்தான். அப்போது அதீனிதேவி ஓர் இடைச் சிறுவனின் வேடத்தில் அவனிடம் வந்தாள். இடையச் சிறுவனாக இருந்த போதிலும் நல்ல நிலைமையில் வளர்க்கப்பட்ட,

மேன்மையான குலத்தில் பிறந்த மிடுக்கு அந்தச் சிறுவனிடம் தென்பட்டது. அவன் தோளைச் சுற்றி மூடியிருக்கும் ஒரு நீண்ட மேற்சட்டையை அணிந்திருந்தான். காலில் செருப்புகளும், கையில் சூலமும் இருந்தன. எதிர்பாராமல் சந்திக்க நேர்ந்த அந்தச் சிறுவனின் மீது ஒடிஸியஸுக்கு அன்பு தோன்றியது. எனவே, அந்தச் சிறுவனிடம் பேசினான்: "அன்பான தம்பி, உன்னைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கும், ஆறுதலுக்கும் அளவில்லை. இந்த இடத்தில் வந்த பிறகு நான் முதன்முதலாகப் பார்ப்பது உன்னைத்தான். அதனால் நீ எனக்கு எந்தவிதமான துரோகமும் செய்யக் கூடாது. என்னிடமுள்ள பொருட்களை நீ பத்திரமாகப் பாதுகாத்து, நான் விரும்பும் போது என்னிடம் ஒப்படைக்க வேண்டும். நீ ஒரு தேவன் என்று நான் நினைக்கிறேன். என்னிடம் நீ உண்மையைச் சொல்ல வேண்டும். இந்த இடத்தின் பெயர் என்ன? அழகான, ஒளி நிறைந்த இந்த இடம் ஏதாவது ஒரு தீவா? அல்லது கரையின் ஒரு பகுதி, கடலின் பக்கமாகச் சரிந்திருக்கிறதா?"

இயல்பிலேயே பளபளப்பான அதீனிதேவியின் கண்கள் அப்போது மேலும் பளபளப்பானது. தேவி சொன்னாள்:" நீ ஒரு முட்டாள் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.அல்லது நீ வெகுதொலைவிலிருந்து வந்தவனாக இருக்கவேண்டும். அதனால் தான் நீ இந்த நாட்டைப் பற்றி இப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்கிறாய். அந்த அளவுக்கு யாருக்கும் தெரியாத இடமல்ல இது. கிழக்குத் திசையில் உதயசூரியனை நேருக்கு நேராகப் பார்த்து வாழ்பவர்களுக்கும், வடக்குத் திசையில் பனிமூட்டம் நிறைந்த பகுதியில் வாழ்பவர்களுக்கும், இந்த நாட்டைப் பற்றி நன்றாகத் தெரியும். குதிரைச் சவாரிக்கு ஏற்றதாக இல்லாத ஒரு முரட்டுப் பிரதேசமாக இது இருக்கலாம். ஒரு சிறிய பகுதியும் கூட. இருந்தாலும் மனிதர்கள் வசிப்பதற்கு ஏற்ற வசதியான ஒரு பகுதிதான் இது. இங்கு உணவுத்தானியங்களும், திராட்சைத் தோட்டங்களும் செழிப்பாக வளர்கின்றன. தேவையான அளவுக்கு இங்கு மழையும் பொழிகிறது. ஆடுமாடுகள் மேய்ந்து வளர்வதற்குரிய முதல்தரமான புற்பரப்புகளும், எல்லா வகையான

பழங்களைக் கொடுக்கும் மரங்களும் இங்கு செழுமையாக வளர்கின்றன. தண்ணீர் விஷயத்தில் எங்களுக்கு எந்த விதமான பஞ்சமும் இல்லை. இதாக்கா என்ற பெயர், *எக்கியன்* தீவிலிருந்து வெகு தொலைவில் அமைந்துள்ள டிராய் நகரத்தைக்கூட அடைந்திருக்கிறது. ஆனால், நீ மட்டும் அப்படி ஒரு பெயரைக் கேட்டதில்லை என்பது எனக்கு ஆச்சரியமாக உள்ளது!"

இதைக் கேள்விப்பட்டதும் ஒடிஸியஸுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. எண்ணிலடங்காத் துயரங்களையும், கடுமையான சோதனைகளையும் அனுபவித்த பிறகு கடைசியில் ஒருவழியாகச் சொந்த நாட்டுக்கு வந்து சேர்ந்திருக்கிறோம்! அதீனிதேவியின் வார்த்தைகள் அவனது காதில் தேனாகப் பாய்ந்தன. ஆனால், கேவலம் ஒரு சாதாரணமான இடையர்குலச் சிறுவ்னிடம் அப்போது தன்னை வெளிப்படுத்திக் கொள்ள அவன் விரும்பவில்லை. கதை சொல்வதில் தேர்ந்தவனான ஒடிஸியஸ், அந்தச் சிறுவனிடமும் ஒரு கற்பனைக் கதையைச் சொன்னான்.

"நீ சொல்வது உண்மைதான். வெகுதொலைவில் கடலுக்கு அப்பாலுள்ள *கிரீட்* தீவிலேயே நான் இதாக்காவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆச்சரியத்துக்குரிய ஒரு விஷயம் என்னவென்றால், இவ்வளவு பரிசுப் பொருட்களுடன் நான் இந்த நாட்டுக்கே வந்து சேர்ந்திருக்கிறேன். ஒரு கொலைக் குற்றத்துக்காக நாடு கடத்தப்பட்டவன் நான். நான் எப்படி ஒரு கொலைகாரன் ஆனேன் என்று உனக்குச் சொல்கிறேன்.

ஐடோமினியூஸின் மகனும், ஓட்டப்பந்தய வீரனுமான *ஆர்ஸிலோகஸ்* எங்களது தீவிலுள்ள சகல மக்களையும் காலால் எட்டி உதைத்தும், சதா தொல்லைப்படுத்திக் கொண்டும் இருந்தான். அவனது தொல்லை தாங்க முடியாமல் போனபோது நான் அவனைக் கொன்றேன். நான் ஒரு நண்பனுடன் பாதையோரத்தில் ஒளிந்திருந்து, அவன் அந்த வழியாக வந்தபோது என்னுடைய நீண்ட வேலால் அவனைக் குத்திக் கொன்று விட்டேன். அது பனிபடர்ந்த ஓர் இரவாக இருந்தது.

நான், அவனைக் கொலை செய்த விவரம் வேறு யாருக்குமே தெரியாது. அதன் பிறகு அங்கு நங்கூரமிட்டு நின்றிருந்த ஒரு ஃபீஷ்யன் கப்பலின் மாலுமிகளை அணுகினேன். என்னுடைய சொத்தில் ஒரு பகுதியை நான் அவர்களுக்குக் கொடுத்தேன். பைலோஸ் நகரிலோ, *ஈப்பியர்கள்* வசிக்கும் அழகான *ஈலீஸிலோ* என்னைச் சேர்த்து விடுமாறு அவர்களிடம் கேட்டுக்கொண்டேன். கப்பலுக்கு எதிராக வீசிய காற்று எங்களை எங்கெல்லாமோ இழுத்துச் சென்றது. அங்கிருந்து வழிதவறி, நள்ளிரவு நேரத்தில் நாங்கள் இந்தத் துறைமுகத்தை அடைந்தோம். எங்களுக்குக் கடுமையான பசி இருந்தபோதிலும் நாங்கள் அதை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளவில்லை.

கடற்கரைக்கு வந்த நாங்கள் அப்படியே படுத்துக் கொண்டோம். நான் மிகவும் சோர்வு அடைந்திருந்ததால் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டேன். உடனே கப்பலில் உள்ளவர்கள் மிகவும் கருணையுடன் என் பொருட்களைக் கரைக்குக் கொண்டுவந்து என்னிடம் பத்திரமாக வைத்துவிட்டு, என்னைப் பிரிந்து சென்று விட்டார்கள்!"

அதீனிதேவியின் விசாலமான கண்களில் அதிகப்படியான பளபளப்புத் தென்பட்டது. தேவி புன்னகைத்தாள். உடனே தனது கைகளால் அவனது உடம்பை வருடிவிட்டாள். அதே நேரம் பேரழகு வாய்ந்த, மகத்தான புத்திசாலித்தனமும், தைரியமும் கொண்ட இளம்பெண்ணாக அவளது வடிவமும் மாறியது. அவள் சொன்னாள்: "குள்ளநரியைவிட உங்களிடம் தந்திரமும், புத்தி சாலித்தனமும் அதிகமாக உள்ளன. அழியாதவர்களான தேவர்களுக்குக்கூட உங்கள் அளவுக்குத் தந்திரம் இருக்காது. கட்டுக்கதைகளைச் சொல்வதில் உங்களுக்கு நிகரானவர் வேறு யாருமில்லை! அதனால் எல்லா விதமான தந்திரங்களும் உங்களுக்குப் புலப்படும். சொந்த நாட்டுக்குத் திரும்பி வந்த பிறகும்கூட உங்களை விட்டு, இந்தக் குறும்புத்தனம் போகவில்லை. தற்காலிகமாக இந்த வித்தைகளையெல்லாம் நாம் இந்த இடத்திலேயே நிறுத்திக் கொள்வோம். நாம் இருவருமே

தந்திரத்தில் குறைந்தவர்கள் அல்ல. நீங்கள் ஆண்களிடம் கட்டுக்கதைகள் சொல்கிறீர்கள். நானும் தேவன்கள், தேவதைகள் மத்தியில் அதையேதான் செய்து கொண்டிருக்கிறேன்.

உங்களது எல்லாச் செயல்களிலும் உங்களுக்கு உதவுகிற, உங்களது கோரிக்கைகளுக்குச் செவிமடுக்கிற ஸியூஸ் தேவனின் மகளான அதீனிதேவியையாவது உங்களுக்குத் தெரியுமில்லையா? உங்களைக் கருணையுடன் வரவேற்று உபசரிக்க ஃபீஷியர்களை உற்சாகப்படுத்தியது நான்தான். இப்போதும் உங்களுக்குத் தேவையான ஆலோசனைகளை வழங்குவதற்கும், உங்களது சொத்துகளைப் பாதுகாக்கவும்தான் வந்திருக்கிறேன். இவை எல்லாவற்றையும் விட முக்கியமான மற்றொரு காரியமும் உள்ளது. உங்களது சொந்த அரண்மனையில், மோசமான விதி இப்போதும் ஏராளமான துயரங்களைத் தயாராக வைத்திருக்கிறது என்பதை முன்னெச்சரிக்கையாக உங்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்.

நீங்கள் எல்லாவற்றையும் பொறுமையுடன் கேட்டுக்கொள்ள வேண்டும். அசாதாரணமான பொறுமையுடன், எதையும் தாங்கும் சக்தியும் தேவைப்படுகிற சந்தர்ப்பம் இது. நாம் நினைக்கிற காரியங்கள் வெற்றிகரமாக நடக்க இந்தக் குணங்கள் எல்லாம் அவசியம். நீங்கள் வெகுதொலைவு பயணம் செய்து திரும்பி வந்திருக்கும் செய்தி வேறு எவருக்குமே தெரியக்கூடாது. பூமாதேவியின் பொறுமையுடன் செயல்படத் தயாராகுங்கள். கெட்டமனிதர்கள் உங்களை எவ்வளவு அவமானப்படுத்தினாலும். தொல்லைப்படுத்தினாலும் அதையெல்லாம் பொருட்படுத்தாதீர்கள்."

ஒடிஸியஸ் அதற்குப் பதிலளித்தான்: "தேவி, நீண்ட வருடங்களுக்கு முன்பிலிருந்தே உங்களது கருணைக்கும், அன்புக்கும் பாத்திரமானவன் நான். ஆனால், ஒரு விஷயத்தைச் சொல்ல நீங்கள் என்னை அனுமதிக்க வேண்டும். ஸியூஸின் அன்புக்கு உகந்த மகளான தேவி, நாங்கள் பிரயாமின் தலைநகரைத் தகர்த்துத் தரைமட்டமாக்கிவிட்டு நாட்டுக்குத் திரும்பிவரும் வழியில், கடவுள் எங்களது கப்பல்களைச் சிதறடித்துச் சின்னாபின்னமாக்கியபோது நீங்கள் எதனால்

எனக்கு உதவவில்லை? உங்களது உதவி எங்களுக்கு அத்தியாவசியமாகத் தேவைப்பட்ட சந்தர்ப்பம் அது. எவ்வளவெல்லாம் கடுமையான துயரங்கள்... எத்தனை விபத்துகள்? நான் எவ்வளவெல்லாம் அதற்காகப் போராட நேர்ந்தது... தெரியுமில்லையா தேவி உங்களுக்கு?

நீங்கள் என்னை ஃபீஷியன் தலைநகருக்குச் செல்ல உற்சாகப்படுத்துவதற்கு முந்தைய கதை இது. எனது அன்புக்குரிய இதாக்கா நகரம்தான் இது என்பதை இப்போதும் என்னால் நம்ப முடியவில்லை! என்னுடைய உள்ளுணர்வு சொல்வது என்னவென்றால், இது வேறு ஏதோ ஒரு நகரம் என்றுதான். ஏற்கெனவே திகைப்பில் ஆழ்ந்து போயிருக்கும் என்னை மேலும் திகைப்பு அடையச் செய்வதற்காக நீங்கள் செய்யும் குறும்புத்தனங்கள்தான் இதுவும் என்று நம்புகிறேன். தயவுசெய்து எல்லாவற்றுக்கும் உரிய பதிலளித்து, எனது குழப்பங்களைத் தீர்க்க வேண்டும். உங்களது பரிபூரணமான அன்பு எனக்குக் கிடைக்க வேண்டும்!"

அதீனிதேவியின் கண்கள் மீண்டும் பளபளப்பு அடைந்தன: "ஒடிஸியஸ் என்னால் உங்களை ஒருபோதும் கைவிட முடியாது. காரணம், உங்களது நல்ல குணங்கள் என்னை அந்த அளவுக்குக் கவர்ந்துள்ளன. நீங்கள் தைரியசாலி. சாகசக்காரர். உங்களது அப்பாவி மனைவியான பெனிலோப்பியா, உங்களை நினைத்து நினைத்து ராத்திரிபகலாக அழுது கொண்டிருக்கிறார்கள். ஆனால், ஒரு காரியத்தில் நான் திடமாக இருந்தேன். உங்களது வீரர்கள் எல்லோரும் இறந்துபோனாலும் நீங்கள் மட்டுமாவது உயிருடன் திரும்பிவர வேண்டும் என்பதுதான் அது. நான் உண்மையைச் சொல்கிறேன்.

என் அப்பாவின் முதல் தம்பியான பொஸடோனுடன் நேருக்கு நேர் மோத நான் விரும்பாததுதான் காரணம். அவரது மகனின் கண்ணை நீங்கள் குத்திச் சிதைத்துவிட்ட விஷயத்தில் அவர் உங்கள் மீது கடுங்கோபத்துடன் இருக்கிறார்." என்ற அதீனிதேவி, அது இதாக்காதான் என்பதை ஒடிஸியஸுக்கு

உணர்த்துவதற்காக, அந்த நாட்டின் ஒவ்வொரு பகுதியைப் பற்றியும் தனித் தனியாக எடுத்து உரைத்தாள். அதன்பின் அந்தப் பகுதியை மறைத்திருந்த பனிமூட்டம் விலகியது. பூமிப் பகுதி மிகவும் தெளிவாகத் தெரியத் தொடங்கியது. ஒடிஸியஸ் அடக்க மாட்டாத மகிழ்ச்சியில் தேவியை முத்தமிட்டான்.

"முதலில் இந்தப் பரிசுப் பொருட்களையெல்லாம் நாம் ஒரு குகையில் பத்திரப்படுத்துவோம்."-தேவி சொன்னாள்.

இருளடைந்த குகை ஒன்றுக்குள் நுழைத்த அதீனிதேவி, எல்லாப் பொருட்களையும் அதற்குள் பத்திரப்படுத்தினாள். பிறகு ஒரு பெரிய பாறையால், அந்தக் குகை வாசலை மூடவும் செய்தாள். அதன் பிறகு தேவி கூறினாள்:

"மன்னனே, இதுவரை உங்களை யாரும் ஏமாற்றியது இல்லை. தோல்வியடையச் செய்ததும் இல்லை. கடந்த மூன்று வருடங்களாக உங்களது வீட்டில் நிரந்தரமாக அக்கிரமச் செயல்களைச் செய்து கொண்டு, உங்களது மனைவியையும் கைப்பற்ற முயற்சி செய்கிறார்கள் சிலர். அந்தப் பிரபுக்களை எப்படித் துரத்த வேண்டும் என்பதைப் பற்றித்தான் நாம் இப்போது யோசிக்க வேண்டும். அதனால் உங்கள் மனைவி எப்படிப்பட்ட பதைபதைப்புடன் நாட்களைத் தள்ளிக் கொண்டிருக்கிறார்கள் தெரியுமா?"

"தேவி, உண்மையில் அங்கு என்னதான் நடந்து கொண்டிருக்கிறது என்பதைத் தயவு செய்து எனக்குத் தெளிவாக விளக்குங்கள்!" ஒடிஸியஸ் கேட்டுக் கொண்டான்: "அவற்றை நான் எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்பதற்கும், ஆலோசனை கூறி, இதுவரை எனக்கு உதவியுள்ளது போலவே மேற்கொண்டும் உதவி, தைரியம், தன்னம்பிக்கை போன்றவற்றையும் அருளுங்கள். உங்களது துணை மட்டுமிருந்தால், முந்நூறு பேருடன்கூட நான் ஒரு தனிமனிதனாக நின்று போராட முடியும். அதில் நான் நிச்சயம் வெற்றி பெறுவேன் என்ற நம்பிக்கையும் உண்டு!"

"கண்டிப்பாக நான் உங்களுக்குத் துணையாக இருப்பேன் ஒடிஸியஸ். யாரும் உங்களை அடையாளம் தெரிந்துகொள்ள முடியாத ஓர் உருவத்தை உங்களுக்கு வழங்க இப்போது முடிவு செய்திருக்கிறேன். உங்களது திரண்ட உடலை வாட்டி, வறண்டதாகச் செய்யப் போகிறேன். உங்களது தவிட்டு நிறமான தலைமுடி காணாமல் போகப்போகிறது. பளபளப்பான கண்கள் உயிரற்றது போல் மாறிவிடும். பார்ப்பதற்கு மிகவும் அலங்கோலமானதும், அசிங்கமானதுமான உடைகள்தான் உங்கள் உடம்பில் இருக்கும். யாராலுமே, ஏன் உங்கள் மனைவி மற்றும் குழந்தைகளால்கூட உங்களை ஒருபோதும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாது. உருவம் அந்த அளவுக்கு மாறிவிடும். முதலில் நீங்கள், உங்களது பன்றிக்குட்டிகளை மேய்க்கும் வயதானவரைச் சென்று சந்திக்க வேண்டும். நம்பிக்கைக்கு உரிய நல்ல ஒரு பக்தன் அவர். அவருடன் அறிமுகம் ஏற்படுத்திக் கொண்டு முதலில் பேச்சுக் கொடுங்கள். அதற்குள் லெஸிடமோனுக்குச் சென்று உங்களது மகன் டெலமாக்கஸை நான் அழைத்து வருகிறேன். நீங்கள் இன்னமும் உயிரோடுதான் இருக்கிறீர்களா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அழகிகளின் நாடான லெஸிடமோனுக்கு அவன் போயிருக்கிறான். அவனை நினைத்து நீங்கள் வருத்தப்படவேண்டியதில்லை. அவனுக்கு எந்தவிதமான ஆபத்தும் ஏற்படாமல் உங்களிடம் கொண்டுவந்து சேர்ப்பது என் பொறுப்பு!"

இவ்வளவும் சொன்ன அதீனிதேவி தன்னுடைய மந்திர சக்தியால் ஒடிஸியஸை முற்றிலும் ஒரு புதிய மனிதனாக்கினாள். இப்போது அவன் முதுமையடைந்த ஒரு படுகிழமாக இருந்தான். அவனுக்கு மான் தோல் ஒன்றை அணிவித்தாள். நீ கையில் ஒரு நீண்ட தடியையும், துவாரங்கள் ஏராளமாக உள்ள முரட்டுத் துணியாலான பை ஒன்றையும் அவனிடம் கொடுத்தாள். இப்போது ஒடிஸியஸ் பார்வைக்கு காட்டுமிராண்டித்தனமான பிச்சைக்காரனாகத் தோற்றமளித்தான்.

# XIV

அதீனிதேவி சொல்லித் தந்தது போலவே தனது நம்பிக்கைக்கு உரிய ஊழியனான யூமியோஸைச் சந்திப்பதற்காக ஒடிஸியஸ் கிளம்பினான். அந்தப் பெரியவர், அவரது வீட்டின் வெளிப்புறத் திண்ணையில் அமர்ந்திருந்தார். அந்த இடத்தைச் சுற்றி பெரிய மதில்சுவர் கட்டப்பட்டிருந்தது. அதற்குள் பெண் பன்றிகளைப் பூட்டிவைக்கும் பன்னிரண்டு பெரிய கூண்டுகள் இருந்தன. ஒவ்வொரு கூண்டிலும் ஐம்பது பன்றிகள் வீதம் அடைக்கப்பட்டிருந்தன. ஆண்பன்றிகள் கூட்டுக்கு வெளியே தனியாக அடைக்கப்பட்டிருந்தன. பெனிலோப்பியாவைத் திருமணம் செய்ய வந்திருப்பவர்கள், பன்றிகளைக் கொன்று தின்றதால் அவற்றின் எண்ணிக்கை மிகவும் குறைந்து போயிருந்தது. இருப்பினும் அப்போது முந்நூற்றைம்பது பன்றிகள் அங்கு இருந்தன.

ஒடிஸியஸைப் பார்த்தவுடனேயே காவல்காக்கும் நாய்கள் குரைத்தவாறு அவன் மீது பாய்ந்தன. உடனே அங்கு விரைந்த பெரியவர், நாய்களை அதட்டி, விரட்டினார். பிறகு அலங்கோலமாகத் தோற்றமளிக்கும் வயதானவரைத் தனது வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். ஒடிஸியஸிடம் அவர் பேசினார்:

“உங்களைவிட மோசமான நிலையில் ஒருவர் இங்கு வந்துசேர்ந்தாலும், முன்பின் தெரியாதவர் என்ற நிலையில் என்னால் அவரிடம் கடுமையாக நடந்து கொள்ள முடியாது. நான் அப்படிப்பட்ட இயல்பு உள்ளவன். கடவுள்தான் இது மாதிரியான அறிமுகமற்றவர்களையும், பிச்சைக்காரர்களையும் அனுப்பி வைக்கிறார் என்று நம்புபவன் நான். என்னால் முடிந்த அளவுக்கு அவர்களுக்கு எதையாவது கொடுத்து அனுப்புவேன். நீங்களும் என்னிடமிருந்து பெரிதாக எதையும் எதிர்பார்க்காதீர்கள்.

என்னுடைய புதிய எஜமானருக்கு நான் பயப்பட வேண்டி இருப்பதுதான் காரணம். என்னுடைய எல்லாமான பழைய எஜமானைக் கடவுள்கள் எங்கேயோ கட்டிப் போட்டிருக்கிறார்கள்.

இல்லாவிட்டால், இதற்குள் அவர் வந்து சேர்ந்திருக்க வேண்டும். எனக்கென்று அவர் ஏதாவது கொடுக்கவும் செய்வார். ஒரு வீடு அல்லது வீடு கட்டுவதற்கான இடம் இப்படி எதையாவது கொடுத்திருப்பார். நானும் ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக வாழ்ந்திருப்பேன். ஓர் ஆணுக்குத் தேவையான உணவைச் சமைத்துக் கொடுக்கவும், அவனைப் பராமரிக்கவும் ஒரு பெண் இருக்க வேண்டும் என்பது என்னுடைய ஆசை. அந்த ஹெலன் என்கிற மூதேவி, அவளது உறவினர்கள் எல்லோருடனும் எப்போதோ இறந்துபோயிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! அவள் பொருட்டுத்தானே வீராதிவீரர்களும், சூராதிசூரர்களும் எவ்வளவோ துயரங்களை அனுபவிக்க நேர்ந்தது? என்னுடைய எஜமானுக்கும் இப்படியொரு நிலை ஏற்பட்டது எப்படி? அவர் இலியோன் நகருக்குப் போர் செய்யப்போனார். அதன் பிறகு இங்கு எல்லாமே நாசமாகிவிட்டது!"

இவ்வாறு பேசிய பெரியவர், தனது உடையின் இடுப்புப் பகுதியை இறுக்கிக் கட்டிக் கொண்டு, மேற்சட்டையணிந்து பன்றிகளை மூடிவைத்திருக்கும் இடத்துக்குப் போனார். அதிலிருந்து இரண்டைத் தேர்ந்தெடுத்தார். அவற்றைக் கொன்று சுவையாகச் சமைத்தார். பிறகு மரக்கோப்பைகளில் இனிமையான மதுவை ஊற்றிவைத்தார். பசியை ஆற்றுவதற்காக ரொட்டி மற்றும் மதுவை ஒடிஸியஸுக்கு வழங்கினார். பிறகு யூமியோஸ், தனது அன்புக்குரிய எஜமான் ஒடிஸியஸைப் பற்றியும், அவரைப் பிரிந்து வாழ்வதால் தான் அனுபவிக்கும் வேதனைகளைக் குறித்தும் இதயம் நெகிழும் வண்ணம் எடுத்துரைத்தான்.

மாறுவேடத்திலிருந்த ஒடிஸியஸ், யூமியோஸின் எஜமானை நேரில் சந்தித்ததாகவும், அவர் உயிரோடு இருக்கிறார் என்பதற்கான ஆதாரங்களைச் சுட்டிக் காட்டத் தயார் என்றும் குறிப்பிட்டான். ஆனால், யூமியோஸ் அதையெல்லாம்

நம்பியதாகத் தெரியவில்லை. கடைசியில் ஒடிஸியஸ் விரைவிலேயே இதாக்காவுக்கு வந்து சேரப் போகிறார் என்று சொல்லிப் பந்தயமே கட்டினான். என்னதான் முயன்றும் பெரியவர், ஒடிஸியஸின் வார்த்தைகளைக் கொஞ்சம்கூட நம்புபவராகத் தெரியவில்லை. அதற்குக் காரணம் என்ன வென்றால், ராணியும், இளவரசனும் மட்டுமல்ல அவரும்கூட இதற்கு முன் எத்தனையோ தடவை ஏமாற்றப்பட்டிருந்ததுதான்.

எனவே மேற்கொண்டும் தன் எஜமானைப் பற்றிப் பேசி, அவரை நினைவூட்ட வேண்டாம் என்று யூமியோஸ், விருந்தாளியாக வந்த பெரியவரிடம் கேட்டுக் கொண்டார். அப்படிச் செய்தால், அது தனது துயரத்தை அதிகப்படுத்தத்தான் உதவும் என்றும் அவர் தெரிவித்தார்.

தங்களது பன்றிகளுடன் மற்ற பன்றி மேய்ப்பவர்கள் வந்தபோது, மிகவும் நல்ல பன்றியைக் கொன்று, விருந்தாளிக்குச் சமைத்துப் போட்டார். வந்திருக்கும் விருந்தாளியைக் குளிர் தாக்காது இருக்கும் பொருட்டு கணப்பு அடுப்பின் அருகில் ஆட்டுத் தோலால் ஆன படுக்கையை விரித்துக் கொடுத்தார். பிறகு தனது சொந்த உபயோகத்துக்காக வைத்திருந்த கம்பளிப் போர்வையையும் எடுத்துக் கொடுத்தார். அதனால் அன்று இரவு கதகதப்பான படுக்கையில் படுத்து ஒடிஸியஸ் நிம்மதியாக உறங்கினான். அதன்பின் நம்பிக்கைக்கு உகந்த முதிய ஊழியரான யூமியோஸ், பன்றிகளைப் பாதுகாக்கும் பொருட்டுத் தனது படுக்கையை வீட்டின் வெளியே போட்டுக் கொண்டார்.

# XV

இதாக்காவுக்குத் திரும்பி வரவேண்டிய நேரம் ஏற்கெனவே தாண்டிவிட்டிருக்கிறது என்பதை டெலமாக்கஸுக்கு உணர்த்துவதற்காக அதீனிதேவி, லெஸிடமோனுக்குப் புறப்பட்டுச் சென்றாள். மெனலாஸின் அரண்மனைக்கு முன்புறமுள்ள

திறந்தவெளி கலைக்கூடத்தில் டெலமாக்கஸும், அவனுடன் வந்த நெஸ்தரின் மகனும் படுத்து உறங்கிக் கொண்டிருந்தனர். அவர்களைக் கவனித்த தேவி, அவர்களிடம் வந்தாள்.

டெலமாக்கஸ் உறக்கத்தில் அமிழவில்லை என்பதைத் தெரிந்து கொண்ட தேவி பேசத் தொடங்கினாள்: “டெலமாக்கஸ், நீ மேற்கொண்டு ஒரு விநாடி நேரம்கூட தாமதிக்கக் கூடாது. உன்னுடைய தாயாரையும், உங்களது விலை மதிக்க முடியாத சொத்துக்களையும் மற்றவர்கள் கைப்பற்றுவதற்கு முன்பு, எவ்வளவு விரைவாக உன்னால் இதாக்காவுக்குச் செல்ல முடியுமோ, அவ்வளவு விரைவில் நீ போய்ச் சேர வேண்டும். இன்னொரு விஷயமும் ஞாபகத்தில் இருக்கட்டும்.

பயணம் செல்லும் வழியில் இதாக்காவுக்கும், ஸாமோஸுக்கும் நடுவிலுள்ள கடற்பகுதியில் உன்னைக் கொல்வதற்காக ஒருவன் காத்திருக்கிறான். அந்த முயற்சி பலிக்காது. நீ தீவிலிருந்து விலகி, மேற்கடல் வழியாக இரவு நேரத்தில் கப்பலைச் செலுத்திக் கொண்டு போ. இதாக்காவை அடைந்தவுடன், உன்னுடைய உதவியாளர்களை நகரத்துக்குள் அனுப்பி வைத்துவிட்டு, பன்றிகளை மேய்க்கும் பெரியவரிடம் நீ நேராகச் செல். பிறகு அவர் மூலமாக நீ வந்து சேர்ந்த விவரத்தை உன் அம்மாவிடம் தெரியப்படுத்த வேண்டும்.”

தேவியின் யோசனைகளைக் கேட்டுக் கொண்ட டெலமாக்கஸ், *பிஸிஸ்டிரோட்டஸைத்* தட்டி எழுப்பினான். உடனடியாகப் பயணம் தொடங்க வேண்டும் என்பதைத் தெரிவித்தான். மெனலாஸ் ஏற்பாடு செய்திருந்த விருந்தில் கலந்துகொண்டு, அவர் கொடுத்த பரிசுப் பொருள்களைப் பெற்றுக் கொண்ட டெலமாக்கஸ், அவரிடம் விடைபெற்றுப் பயணத்தைத் தொடங்கினான். தங்கத்தால் செய்யப்பட்ட மதுக்கிண்ணம், வெள்ளியால் செய்யப்பட்ட மது நிறைக்கும் ஜாடி, திருமணத்தின்போது மணப்பெண்ணுக்குப் பரிசளிப்பதற் காக ராணி ஹெலன், தன் கைப்பட தங்கம் மற்றும்

வெள்ளியால் நெய்த பூவேலைகள் நிறைந்த உயர்தரத் துணிமணிகள் உட்பட விலைமதிப்பற்ற பல பொருட்களும் அவற்றில் இருந்தன. அவர்கள் பயணம் புறப்படுவதற்கு முன், தேவர்களுக்கான மதுவிருந்தை நடத்த விரும்பிய மெனலாஸ், ஒரு தங்கப் பாத்திரம் நிறைய தேன் போன்ற இனிமையான மதுவை எடுத்துக் கொண்டு ஓடி வந்தார். வந்தவர் தனது குதிரைகளுக்கு முன்பாக நின்று கொண்டு சொன்னார்:

"உங்களுக்கு என்னுடைய மனமார்ந்த நல்வாழ்த்துக்கள். என்னுடைய வாழ்த்து மற்றும் நல்லெண்ணத்தை நெஸ்தர் மன்னரைக் காணும்போது அவரிடம் தெரியப்படுத்துங்கள்!"

டெலமாக்கஸ் மரியாதையுடனும் பணிவுடனும் பதிலளித்தான்: "பிரபுவே... அந்த விஷயத்தில் உங்களுக்கு எந்த விதமான கவலையும் வேண்டியதில்லை. கண்டிப்பாக உங்களது செய்தியை நாங்கள் அவரிடம் கொண்டு போய்ச் சேர்ப்போம். என் மனத்திலுள்ள தீவிரமான ஆசை ஒன்றே ஒன்றுதான். நான் இதாக்காவை அடையும்போது இந்தத் தகவல்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள, அன்புக்குரிய என் தகப்பனார் அங்கு இருக்க வேண்டும் என்பதுதான். நீங்கள் எவ்வளவு கருணையுடன் என்னை வரவேற்று உபசரித்தீர்கள்... எவ்வளவு விலையுயர்ந்த பரிசுப் பொருள்களை வழங்கியிருக்கிறீர்கள் என்பதை அவரும் தெரிந்து கொள்ள வேண்டும்!"

டெலமாக்கஸ் இதைக் குறிப்பிடும்போது சுபச்சகுனம் ஒன்று தென்பட்டது. கழுகு ஒன்று விவசாய நிலத்திலிருந்து பாய்ந்து கவ்வி எடுத்த வெள்ளைவாத்தை நகங்களால் இறுக்கிக் கொண்டு அவர்களது தலைக்கு மேலாக வலது புறமாகப் பறந்தது. ஆண்களின் கூட்டம் ஒன்றும், பெண்களின் கூட்டம் ஒன்றும் பல்வேறு குரல்களை எழுப்பிக் கொண்டு அந்தப் பருந்தைப் பின்தொடர்ந்து ஓடின. அவர்களுக்கு அருகே வந்த கழுகு குதிரைகளுக்கு முன்னால் வந்து வலது புறமாகத் திரும்பி மேற்புறம் உயர்ந்தது. எதிர்பாராமல் தென்பட்ட இந்த சகுனக் காட்சி, அங்கு கூடியிருந்தவர்களையெல்லாம் மகிழ்ச்சியில் ஆழ்த்தியதுடன், ஆறுதல் அளிக்கவும் செய்தது.

டெலமாக்கஸின் நண்பன் பிஸிஸ்டிராட்டஸ், மெனலாஸ் மன்னரிடம் கேட்டான்: "உங்களுடைய கருத்துப்படி, இந்தச் சகுனத்தின் பொருள் என்ன? இது எங்கள் இருவர் தொடர்பான சகுனம்தானா? அல்லது உங்கள் தொடர்பான தகவலா?"

இதற்கு என்ன பதில் சொல்வது என்றோ, இந்தச் சகுனத்தின் பொருள் இன்னதென்றோ உண்மையில் அவருக்குத் தெரியவில்லை. ஆனால், ஹெலன் அவருக்கு உதவி செய்ய முன் வந்தாள். அவள் சொன்னாள்: "இந்தச் சகுனத்தின் பொருள் எனக்குத் தெரியும். அதைச் சொல்வதற்குத் தயவு செய்து என்னை அனுமதியுங்கள். அழிவற்ற தேவர்கள் என் மனத்தில் தெரிவித்தவாறே நான் இந்தச் சகுனத்துக்கு விளக்கம் அளிக்கிறேன். அதையொட்டித்தான் மேற்கொண்டு நடப்பவை அமையும் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. அந்தக் கழுகு தான் வசிக்கும் மலை உச்சியிலிருந்து வெகு தூரம் பறந்து வந்து, வயலில் மேய்ந்து கொண்டிருந்த ஒரு வாத்தை எப்படி ராவிக் கொண்டுபோய், நகங்களுக்குள் பத்திரமாக இறுக்கிப் பிடித்துக் கொண்டதோ, அதே போல் ஒடிஸியஸ் எண்ணிக்கையற்ற துயரங்களுக்குப் பிறகு ஓய்வு ஒழிவில்லாத அலைச்சலுக்குப் பிறகு தனது சொந்த வீட்டை அடைந்து, தனது பழிவாங்கும் செயலைக் கச்சிதமாக நிறைவேற்றுவார் என்பதுதான்!"

உடனே டெலமாக்கஸ் உணர்ச்சிவசப்பட்டு உரத்த குரலில் சொன்னான்: "அப்படியே நடப்பதற்கு ஹீராதேவி ஆட்சி புரியும் தேவலோகத்து கர்ஜிக்கும் சிங்கமான ஸியூஸ் தேவன் அருள் புரிவாராக!"

என்று சொல்லிவிட்டு அவன் குதிரைகளை முன்புறமாகச் செலுத்தினான். மேலான குதிரைகளைப் போல் அவை வேகமாகப் பாய்ந்தன. அன்று பகல் முழுவதும் அவர்கள் பயணம் செய்து கொண்டிருந்தனர்.

விருந்தினர்களை வரவேற்று உபசரிப்பதில் அதிக நாட்டம் உடையவரான நெஸ்தர் மன்னரிடம் செல்லாமல், தகவலைச்

சொல்லும் பொறுப்பை நெஸ்தரின் மகனிடம் ஒப்படைத்துவிட்டு டெலமாக்கஸ் நேராக இதாக்காவை நோக்கிப் புறப்பட்டான். அவனது கப்பல் பயணத்தைத் தொடங்குவதற்கு முன் உலகப் புகழ்பெற்ற தீர்க்கதரிசியான *பாலிஃபிடிஸின்* மகன் *தியோக்லி மினியஸுடன்,* ஓர் அகதியாகக் கப்பலில் ஏறிக் கொண்டான். தியோக்லிமீஸும் ஒரு தீர்க்கதரிசிதான்.

தன் எஜமானது மகன் வருவது வரை, பிச்சைக்கார விருந்தாளியான ஒடிஸியஸைத் தன் வீட்டில் தங்கிக் கொள்ளுமாறு யூமியோஸ் அனுமதி அளித்தார். அந்த இரவு முழுவதும், அவர் தனது முந்தைய காலக் கதையை விவரித்தார். ஒடிஸியஸின் தகப்பனாரான லெயர்ட்டீஸ் மன்னரின் அரண்மனையில் தான் ஓர் அடிமையாக வந்து சேர்ந்த கதையை விவரித்தார்.

பொழுது விடிவதற்குள் டெலமாக்கஸ் இதாக்காவை அடைந்துவிட்டான். அகதியாகத் தன்னுடன் வந்துள்ள தியோக்லிமினியஸை, தனது நம்பிக்கைக்கு உகந்த ஊழியனான *பீரியோஸின்* விருந்தாளியாக அனுப்பி வைத்தான். தனது தாயைத் திருமணம் புரியும் ஆசையுடன் காத்திருக்கும் பெரியவர்களுக்கு மத்தியில் தன்னுடைய அரண்மனைக்கு ஒரு புதிய விருந்தாளியை அழைத்துச் செல்வது உசிதம் அல்லவென்று தோன்றியது. தன்னுடன் வந்தவர்களை நகரத்துக்குள் அனுப்பி வைத்த பிறகு, அதீனிதேவி கூறியபடி யூமியோஸிடம் வந்து சேர்ந்தான் டெலமாலக்கஸ். நூற்றுக் கணக்கான பன்றிகளின் நடுவில், நம்பிக்கைக்கு உரிய அந்த ஊழியன் நல்ல உறக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

# XVI

ஒடிஸியஸும், யூமியோஸும் காலையில் எழுந்து சமையல் செய்து கொண்டிருக்கும்போதுதான் டெலமாக்கஸ் அங்கு வந்து சேர்ந்தான். மதுவை மரக்கோப்பைகளில் ஊற்றிக் கொண்டிருந்த

பெரியவர் துள்ளியெழுந்தார். அவரது கையிலிருந்த கோப்பைகள் கீழே விழுந்தன. அவர், ஆவேசத்துடன் சின்ன எஜமானை நெருங்கினார். தலையிலும், கண்களிலும், கைகளிலும் மாறி மாறி முத்தமிட்டார். அவனை மார்புடன் தழுவிக் கொண்டார். டெலமாக்கஸ் பத்திரமாக வந்து சேர்ந்ததால், அந்த வேலைக்காரனின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொழிந்தது.

டெலமாக்கஸ் முதன்முதலாகத் தனது தாயைப் பற்றிய விவரங்களைக் கேட்டான். அவனது தாயாரை யாரும் இன்னும் திருமணம் செய்து கொள்ளவில்லை என்றும், அவர் இப்போதும் அரண்மனைக்குள் அழுதவாறே நாளைக் கடத்துவதாகவும் பெரியவர் குறிப்பிட்டார். அவர் சின்ன எஜமான் உட்கார்வதற்கு இருக்கை கொடுத்துச் சாப்பிடுவதற்கு வறுத்த இறைச்சியும், ரொட்டியும் கொடுத்தார். உணவுக்குப் பிறகு டெலமாக்கஸ், புதிதாக வந்திருக்கிற விருந்தாளியைப் பற்றி விசாரித்தான். பிறகு தனது தாயை ரகசியமாகச் சந்தித்து, தான் கூறிய தகவலைச் சொல்லுமாறு அனுப்பி வைத்தான்.

யூமியோஸ் அங்கிருந்து கிளம்பியதும் அதீனிதேவி கடலிலிருந்து வெளிப்பட்டாள். ஒடிஸியஸ், விரைந்து சென்று தேவிக்கு முன்னால் போய் நின்றான். மகனிடம் பேசுவதற்கான வாய்ப்பு அதுதான் என்று தேவி, ஒடிஸியஸிடம் கூறினாள். டெலமாக்கஸுக்கு நம்பிக்கை ஏற்படுத்துவதற்காக, ஒடிஸியஸை அந்த வேடத்திலிருந்து ஓர் அழகான இளைஞனாக மாற்றினாள்.

மறுபடியும் யூமியோஸின் வீட்டுக்கு வந்த ஒடிஸியஸைக் கவனித்த டெலமாக்கஸ் வியப்பு அடைந்தான். யாரோ ஒரு தேவதைதான் வந்திருப்பதாக நம்பினான் டெலமாக்கஸ். உடனே, ‘நீங்கள் யார் என்ற உண்மையைச் சொல்லுங்கள்’ என்று அவன் ஒடிஸியஸிடம் கேட்டுக் கொண்டான்.

மனத்துள் பொங்கியெழுந்த உணர்வைக் கட்டுப்படுத்திக் கொண்டு நின்ற ஒடிஸியஸின் நிலை, டெலமாக்கஸுக்குப் புரிந்தது. தான், டெலமாக்கஸின் தந்தை என்ற உண்மையை

ஒடிஸியஸ் ஒருவாறு வெளியிட்டான். மிக விரைவில் சட்டென்று உருமாறி வந்த அவனை டெலமாக்கஸால், தந்தையாக ஒப்புக்கொள்ள முடியவில்லை. இருப்பினும் ஏதோ ஒரு தேவன் என்றுதான் நினைத்தான். இதெல்லாம் அதீனி தேவியின் மாயாஜாலம் என்பதால், பயப்படவோ, வியப்பு அடையவோ, பதற்றப்படவோ வேண்டியதில்லை என்று ஒடிஸியஸ் தன் மகனிடம் சொன்னான்: "என்னைத் தவிர வேறு ஒரு ஒடிஸியஸ் இங்கு வரமாட்டான். நீண்ட இருபது வருடங்கள் தீவுகள் தீவுகளாக அலைந்து திரிந்து, எண்ணற்ற ஆபத்துகளைக் கடந்து, ஒரு வழியாகத் தற்போது சொந்த மண்ணை அடைந்திருக்கும் உன் தந்தை ஒடிஸியஸ்தான் நான்." என்றான் ஒடிஸியஸ்.

ஒடிஸியஸ் தரையில் அமர்ந்தான். டெலமாக்கஸ் தன் கைகளை நீட்டி, தந்தையைக் கட்டியணைத்தான். இதயம் நொறுங்குமளவு, கதறிக் கண்ணீர்விட்டான். உடனேயே சிரித்தும் மகிழ்ந்தும் சிறு குழந்தைகளைப் போல் அவர்கள் பரஸ்பரம் தங்களது அன்பை வெளிப்படுத்திக் கொண்டனர்.

ஃபீஷ்யன்கள் தன்னை அங்கு கொண்டு வந்து சேர்த்த கதையையும், தனக்குப் பரிசாகக் கிடைத்துள்ள உயர்ந்த வகைப் பொருள்களை குகை ஒன்றினுள் ஒளித்து வைத்திருப்பதையும் குறிப்பிட்டான் ஒடிஸியஸ். எதிரிகளை அழிப்பதற்காக அதீனி தேவியின் கட்டளைப்படி தான் இப்படி மாறுவேடத்தில் வசிப்பதாகவும், அதனால் திட்டப்படி செயல்களை நிறைவேற்ற வேண்டும் என்றும் கூறினான். அதனால், விருந்தாளிகளாகத் தங்கியுள்ள விரோதிகளின் எண்ணிக்கை எவ்வளவு என்று கேட்டான்.

உடனே டெலமாக்கஸ் அவர்களை எண்ணத் தொடங்கினான்: "டியூலிக்யோனிலிருந்து ஐம்பத்திரண்டு வாட்டசாட்டமான வீரர்கள், அவர்களுடன் ஆறு வேலைக்காரர்கள். ஸாமி நகரிலிருந்து வந்துள்ள இருபத்து நான்கு இளைஞர்கள் சாஸிந்தோஸில் இருந்து இருபது பேர், இதாக்காவில் இருந்து பன்னிரண்டு பேர். இந்தப் பன்னிருவரும்

இதாக்காவின் தைரியம் நிறைந்த வீரர்கள். அரசாங்கப் படைத் தலைவனான மெடனும், ஒரு பாடகனும் இரண்டு கசாப்புக் கடைக்காரர்களும் அங்கு இருக்கிறார்கள். இத்தனை பேருடன் நாம் இருவர் மோதுவது முட்டாள்தனமான செயல். அதனால், போர் முறைகள் தெரிந்த வேறு சிலரை நம் பக்கம். இழுக்க முடியுமா என்று முயற்சி செய்ய வேண்டும்."

நமக்கு அதீனிதேவியும், ஸியூஸ்ும் உதவுவார்கள் என்று பதிலளித்தான் ஒடிஸியஸ். அத்துடன் மிகவும் முக்கியமான வேறு சில காரியங்களையும் தன் மகனிடம் தெரிவித்தான்:

"எதிரிகளுடன் மோதுவதற்கான நேரமாகிவிட்டது என்பதை அதீனிதேவி, ஏதேனும் ஒரு வழியில் என்னிடம் தெரிவிப்பார். பெரும்பாலும் அது ஒரு சைகை மொழியாக இருக்கலாம். அதை நானும் அப்படியே உன்னிடம் தெரிவிப்பேன். நீ உடனேயே நம்மிடம் உள்ள மொத்த ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டுபோய், நமது அரண்மனையின் மேற்பகுதியில் பத்திரப்படுத்த வேண்டும். யாராவது கேட்டால், தொடர்ந்து ஏற்படும் புகையினால் அவை பழுதடைந்து விட்டன என்றும், அதனால் பத்திரமாக ஓரிடத்தில் எடுத்து வைப்பதாகவும் பதில் சொல். அதே போல் நீ உணவருந்துவதற்கு முன்னால் சற்று மது அருந்திவிட்டுச் சாப்பாட்டு நேரமாகும்போது சிறிய சிறிய சண்டைகளைப் போடுவதும் நம்முடைய நோக்கத்துக்கு உதவும். அதே நேரம் இரண்டு வாள்கள், இரண்டு வேல்கள், உறுதியான தோலால் செய்த இரண்டு கவசங்கள் ஆகியவற்றை நாம் எப்போது வேண்டுமானாலும் பயன்படுத்துவதற்குத் தயாராக வைத்திருக்க வேண்டும். மற்றொரு விஷயம், ஒடிஸியஸ் இதாக்காவுக்கு வந்து சேர்ந்துவிட்ட செய்தியை நீ வேறு எவரிடமும் மூச்சு விடக்கூடாது. இங்குள்ளவர்களின் நேர்மையையும், கடவுள் பக்தியையும் நாம் சோதித்துப் பார்க்க இது உதவும்!"

டெலமாக்கஸை பைலோஸில் இருந்து கொண்டுவந்த கப்பலைப் பத்திரமாகக் கரைக்குக் கொண்டுவந்து, அவனுடன் அனுப்பி வைக்கப்பட்ட பரிசுப்பொருள்களை கிளீட்டியோஸின்

வீட்டில் பத்திரமாகக் கொண்டுபோய்ச் சேர்த்தனர். செய்தியாளன் ஒருவன் வந்து ராணியிடம் இந்தத் தகவலை உரத்த குரலில் தெரிவிக்கவும் செய்தான். அப்போதுதான் யூனியோஸ் அங்கு வந்து சேர்ந்தான். அவன், ராணியைத் தனியாகச் சந்தித்து டெலமாக்கஸ் சொன்ன தகவல்களையும் கூறினான்.

டெலமாக்கஸ் திரும்பி வந்த செய்தியை அறிந்ததும், காத்திருந்த கூட்டத்தினர் ஒட்டுமொத்தமாகத் திகைத்தனர். உடனே அவர்கள் ஓர் அவசரக் கூட்டம் போட்டனர். அதற்குள் டெலமாக்கஸைக் கொல்வதற்காகக் கப்பலில் சென்ற ஆன்டினூஸும் அவனது ஆதரவாளர்களும் வந்து சேர்ந்தனர். இவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து வீதியொன்றில் ஒன்றிணைந்தனர்.

டெலமாக்கஸைக் கொல்வதற்காகத் தங்களது கப்பல் இரவு முழுவதும் குறிப்பிட்ட கடல் பகுதியில் சுற்றிக் கொண்டிருந்ததாகவும், இந்தத் தடவை விதிவசமாக அவன் தப்பித்து விட்டதாகவும் ஆன்டினூஸ் குறிப்பிட்டான்.

அதனால், மேற்கொண்டு தாமதிக்காமல் அவனைக் கொன்று விடுவது என்றும் தீர்மானித்தனர். ஆனால், *நியோஸ் அரேஸியஷின்* மகனும் *டியூலிக்கியோன்* பகுதியிலிருந்து வந்தவனுமான *ஆம்ஃபினோமஸ்* மட்டும் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தான்.

ஸியூஸின் அசரீரி வார்த்தைகளைத் தெரிவிக்கும் தேவனைச் சந்தித்து தேவர்கள் நமக்கு அனுகூலமாக இருக்கிறார்களா என்பதை முதலில் தெரிந்து கொண்டு மேற்கொண்டு நடவடிக்கை எடுத்தால் போதுமென்று ஆம்ஃபினோஸ் ஆலோசனை கூறினான்.

எல்லோரும் இதற்கு ஒப்புக் கொண்டனர். பிறகு ஒடிஸியஸின் வீட்டை அடைந்து, எல்லோரும் தத்தமது இருப்பிடங்களில் இடம் பிடித்தனர்.

அப்போது பெனிலோப்பியா ராணி இறங்கி வந்து, தனது மகனைக் கொல்வதற்காக அவர்கள் நடத்திய ஆலோசனையைக்

குறித்துத் தனக்குள்ள அதிருப்தியைத் தெரிவித்தாள் ஆன்டினூஸை ஆதரித்துத்தான் அவள் கோபத்துடன் பேசினாள் என்றாலும் அவன் அதற்குப் பதில் எதுவும் சொல்லவில்லை.

ஆனால், யூரிமாக்கஸ் மட்டும் எழுந்து வெகு தந்திரமாகப் பேசினான். டெலமாக்கஸுக்கு எந்த விதமான ஆபத்தும் ஏற்படத் தான் அனுமதிக்கப் போவதில்லை என்றும் வெளிப்படையாகப் பேசினான். வெளியே இப்படிப் பேசினாலும், அவன் மனம் அதற்கு எதிராகவே அப்போதும் யோசித்துக் கொண்டிருந்தது.

யூமியோஸ் மீண்டும் கடற்கரையை அடைந்தபோது அதீனி தேவி, ஒடிஸியஸை மீண்டும் வயதான பழைய உருவத்துக்கு மாற்றி விட்டிருந்தாள். தான் கொல்வதற்கு முன்பாகவே செய்தியை யாரோ ஒருவன் அரண்மனையில் சொல்லிக் கொண்டிருந்த தகவலையும், ஆயுதபாணிகளான வீரர்கள் சிலர் கப்பலில் வந்து இறங்குவதைத் தான் பார்த்ததாகவும் யூமியோஸ் தெரிவித்தான்.

அருமையான விருந்துச் சாப்பாட்டுக்குப் பிறகு அங்கிருந்த மூவரும் பல விஷயங்களைப் பற்றிப் பேசினர். அதற்குப் பிறகு அவரவர்கள் தங்கள் படுக்கைகளில் போய்ப் படுத்துக் கொண்டனர்.

# XVII

பொழுது விடிந்ததும் டெலமாக்கஸ் நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். பயணம் புறப்படுவதற்கு முன்னால், அங்கு உள்ள பெரியவரை நகருக்குள் கொண்டு போய்விடுமாறு யூமியோஸிடம் டெலமாக்கஸ் கட்டளையிடவும் செய்தான்.

டெலமாக்கஸ் அரண்மனைக்குள் நுழைந்த உடனேயே, வேலைக்காரர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் அவனைச் சூழ்ந்து கொண்டனர். எப்போதும் தன்னைச் சுற்றி தங்கநிற வெளிச்சம் பரப்பும் அஃப்ரோடயற்றி தேவியைப் போல, ஒளி

பொருந்திய பெனிலோப்பியா, ஓடிவந்து மகனை வாரியணைத்து உச்சி முகர்ந்தாள். அவனது தலை, கண்கள், உடல் என்று மாறி மாறி முத்தமிட்டாள். பிறகு மகிழ்ச்சிக் கண்ணீர் சொரிந்தபடியே பேசத் தொடங்கினாள்:

"அன்பு மகனே, உன்னை மீண்டும் காணும் அதிர்ஷ்டம் ஏற்படும் என்றே நான் நினைக்கவில்லை. உன் அப்பாவைப் பற்றி ஏதாவது தகவல்கள் தெரிந்ததா... அதை முதலில் சொல்" என்று கேட்டுக்கொண்டாள்.

"அம்மா... நீங்கள் அழக் கூடாது. என் இதயத்தை மேலும் வேதனையடைய வைக்காதீர்கள். எல்லா விவரங்களையும் நான் சொல்கிறேன். இப்போது நான், என்னுடன் கொண்டு வந்துள்ள ஒரு விருந்தாளியை பிரியோஸின் வீட்டிலிருந்து அழைத்துக் கொண்டு வரப்போகிறேன்!"

டெலமாக்கஸ் தன்னுடைய வேலை எடுத்துக் கொண்டு, இரண்டு நாய்களுடன் வீட்டிலிருந்து அப்போதே வெளியேறினான். உடனே அதீனிதேவி அவனது அழகைப் பத்து மடங்கு அதிகமாக்கினாள். அதனால், அவன் சென்ற பாதையில் இருந்தவர்கள் அவனை வியப்புடன் கவனித்தனர்.

பெனிலோப்பியாவைத் திருமணம் செய்யக் காத்திருக்கும் கூட்டம் அவனை நெருங்கியது. அவர்கள் எவரையும் பொருட்படுத்தாத டெலமாக்கஸ், தனது அப்பாவின் பழைய நண்பர்களான மென்டார், ஆன்டிஃபஸ், ஹாலிதெர்ஸியஸ் போன்றவர்களை அணுகினான். பீரியோஸ் தனது விருந்தாளியுடன் அப்போது சந்தைக்கு வந்திருந்தான்.

மெனலாஸிடமிருந்து கொண்டு வந்த பரிசுப் பொருள்களை எடுத்துச்செல்ல வேலையாட்கள் சிலரை அனுப்பி வைக்குமாறு பீரியோஸ் கேட்டுக் கொண்டான்.

ஆனால், இனிமேல் என்னவெல்லாம் நடக்கப் போகிறது என்பதைத் தெரிந்து கொண்டு அதன் பிறகு மேற்கொண்டு

நடக்க வேண்டியதைப் பார்த்துக் கொள்ளலாம் என்று டெலமாக்கஸ் பதிலளித்தான். பிறகு முன்பின் தெரியாத விருந்தாளியையும் அழைத்துக் கொண்டு அவன் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். உரிய அளவுக்கு அவரை உபசரித்தான். அப்போது பெனிலோப்பியா மகனுக்கு அருகே வந்தாள். ஒடிஸியஸைப் பற்றி ஏதாவது தகவல் தெரியுமா என்று கேட்டாள். உடனே டெலமாக்கஸ் பேசத் தொடங்கினான்:

"நான் முதலில் பைலோஸை அடைந்து நெஸ்தர் மன்னரைச் சந்தித்தேன். மிகவும் அன்புடன் அவர் என்னை வரவேற்று உபசரித்தார். ஆனால், அப்பாவைப் பற்றி அவரால் சரியான தகவல் எதையும் சொல்ல முடியவில்லை. அதனால், அவர் தன் மகனை என்னுடன் மெனலாஸ் மன்னரின் அரண்மனைக்கு அனுப்பி வைத்தார். அங்கும் எனக்கு இதயபூர்வமான, மகிழ்ச்சியான வரவேற்புதான் கிடைத்தது. அங்கு அப்பாவைப் பற்றிக் கேட்டபோது, கடல் தேவன் அவரிடம் சொன்ன கதையை அவர், என்னிடம் கூறினார். கடுமையான துயரத்துடன், அவரை அழகியும் மந்திரவாதினியுமான காலிப்ஸோவின் வீட்டில் பார்த்ததாக அவரிடம் கூறினாராம். அவள் பலவந்தமாக அவரை அங்கு சிறை வைத்திருப்பதாகவும் தெரிவித்தார்.

அப்போது அவரிடம் சொந்தமாகக் கப்பலோ, மாலுமிகளோ இல்லாததால், ஆழமான கடல் பரப்பைத் தாண்டி அங்கிருந்து சொந்த நாட்டுக்குத் திரும்பவும் வழியில்லை. ஆனால், எப்படியாவது அப்பா இங்கு வந்து சேர்ந்துவிட்டால், இங்கு குடியிருக்கும் மன்னர்கள் மற்றும் பிரபுக்களை, ஒரு சிங்கம் எப்படித் தன்னுடைய இரையைக் கடித்துக் குதறுமோ அதே போல் சுலபமாக அவர்களைக் குதறிவிடுவார் என்பதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் இல்லை. காரணம் என்னவென்றால், டிராய் நகரப் போரில் அவர் காட்டிய போர்த்திறனை நேரிலேயே அவர் பார்த்திருக்கிறாரே. அதன் பிறகு மெனலாஸ் மன்னரும், ஹெலன் ராணியும் விமரிசையான விருந்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்து, தாராளமான பரிசுகளை வழங்கி என்னை வழியனுப்பி வைத்தனர்."

இந்தக் கதையைக் கேட்ட பெனிலோப்பியாவின் இதயம் நொறுங்கியது. ஆனால், தீர்க்கதரிசியான தியோக்லி மானோஸ் அங்கு வந்து கீழ்க்கண்டவாறு கூறினார்:

“ஒடிஸியஸ் லெயர்ட்டிடஸின் மேன்மைக்குரிய ராணியே... தகப்பனாரான ஸியூஸ் பகவானையும், இந்தக் கருணை மிகுந்த மேஜை மீது எனக்கு அபயம் தந்த இந்த வீட்டையும் முன்னால் வைத்துக் கொண்டு இதோ நான் சொல்கிறேன்.

ஒடிஸியஸ் இப்போது அவரது சொந்த மண்ணிலேயேதான் வசிக்கிறார். எங்கோ ஓரிடத்தில் ஓய்வு எடுத்துக் கொண்டோ, மறைமுகமாக நடமாடிக் கொண்டோகூட இருக்கலாம். அவர், இங்கு நடந்து கொண்டிருக்கும் அக்கிரமங்களைப் பற்றி விரிவாக விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்கிறார். மட்டுமின்றி இங்கு குழுமியுள்ள தீயவர்களைக் கூண்டோடு அழிப்பதற்கான முயற்சிகளிலும் ஈடுபட்டிருக்கிறார். நான் கப்பலில் இருக்கும் போது கண்ட சகுனத்தின் பலன் இதுதான். நான் இந்தத் தகவலை அப்போதே டெலமாக்கஸிடம் சொல்லவும் செய்தேன்!”

பெனிலோப்பியா இதற்குப் பதிலளித்தாள்: “உங்களது வார்த்தைகள் அப்படியே பலிக்குமாறு நான் பிரார்த்தனை செய்கிறேன். என்னுடைய நன்றியை உடனேயே உங்களுக்குக் காட்டுகிறேன். மற்றவர்களுக்குப் பொறாமை ஏற்படுமாறு நான் உங்களுக்குப் பரிசுகளை வழங்குகிறேன்.”

அவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருந்தபோது, மோசமான வர்களான விருந்தாளிகள்-முட்டாள்கள் வெளிப்பகுதியில் வழக்கமான தங்களது பொழுதுபோக்குப் போட்டிகளில் ஈடுபட்டிருந்தனர்.

“சரி இனி நாம் உற்சாகமாக இருப்பதைப் பற்றி யோசிப்போம்!” என்று மெடோன் சொன்னதும் எல்லோரும் அங்கிருந்த விசாலமான ஹாலுக்குள் நுழைந்தனர். ஒரு பெரிய செம்மறியாட்டையும், கொழுத்த இரண்டு பெண்ணாடுகளையும், சில பன்றிகளையும், பிரம்மாண்டமான காளைமாடு ஒன்றையும் கொன்று, உடனேயே அவற்றைச் சமைப்பதில் ஈடுபட்டனர்.

அப்போது யூமியோஸும் ஒடிஸியஸும் நகரத்தை நோக்கி வந்து கொண்டிருந்தனர். வலுவான தடி ஒன்றை ஊன்றிக் கொண்டு, அழுக்குப் படிந்த முரட்டுத்தனமான பை ஒன்றைத் தோளில் சுமந்தவாறு நடந்து கொண்டிருந்தான் ஒடிஸியஸ். வழியிலேயே விருந்தாளிகளாகத் தங்கியிருக்கும் வீணர்களுக்கு உணவு சமைப்பதற்காக ஆடுகளை ஓட்டிச் செல்லும் மெலந்தியோஸை அவர்கள் பார்த்தனர். அவன், மற்ற இருவரையும் பார்த்துக் கேலியாகப் பேசத் தொடங்கினான். கூடவே கையைச் சுருட்டிப் பிடித்துக் குத்தவும் செய்தான். பொங்கியெழுந்த கோபத்தை ஒருவாறாக அடக்கிக் கொண்டு அவர்கள் அரண்மனைக்கு வந்து சேர்ந்தனர்.

அவர்கள் அங்கிருந்த விசாலமான ஹாலுக்குள் நுழையும் போதே, அங்கு சமைத்துக் கொண்டிருக்கும் அறுசுவை உணவின் மணம் அவர்களது மூக்கைத் துளைத்தது. அத்துடன் பாட்டு மற்றும் இசை நிறைந்த ஆரவாரமும் கேட்டன.

அவர்கள் அங்கு வந்து சேர்ந்தபோது ஒடிஸியஸின் வேட்டை நாயான ஆர்கோஸ் மிகவும் சோர்ந்து போய்ப் படுத்திருந்தது. அது இருபது வருடங்களுக்குப் பிறகு தனது எஜமானை அடையாளம் கண்டுகொண்டு, அந்த அதிர்ச்சியிலேயே கடைசி மூச்சுக்காகப் போராடியது.

யூமியோஸ் பிச்சைக்காரனை அங்கேயே நிற்கவைத்துவிட்டு, உள்ளே நுழைந்தான். அவனுக்கு டெலமாக்கஸின் உத்தரவுப்படி ரொட்டியும், இறைச்சியும் வழங்கப்பட்டன. உடனேயே பிச்சைக்காரனும் உள்ளே வந்தான். வாசலை ஒட்டியிருந்த வெறும்தரையில உட்கார்ந்தான். உடனே யூமியோஸின் கூடைக்குள் கையை விட்டு இரண்டு கைகள் நிறைய ரொட்டியையும், இறைச்சித் துண்டுகளையும் வாரியெடுத்து டெலமாக்கஸ் பிச்சைக்காரனுக்குக் கொடுத்தான். அதைச் சாப்பிட்ட பிறகு மற்றவர்களிடம் பிச்சையெடுக்குமாறு அவனை அனுப்பி வைத்தான். அதீனிதேவியும் அவ்வாறே பிச்சை எடுக்குமாறு ஒடிஸியஸிடம் கேட்டுக் கொண்டாள்.

அங்கு குழுமியிருந்தவர்களில் மிகவும் மோசமானவர்கள் யார் யார் என்பதைக் கண்டுபிடிப்பதற்கான சோதனைதான் அது. ஆன்டினூஸ் பிச்சைக்காரனை அதிகமாகத் திட்டியதுடன் தான் கால் வைத்திருந்த மரப்பீடத்தை எடுத்து அவன் மீது எறியவும் செய்தான். ஒடிஸியஸ் எல்லாவற்றையும் பொறுமையுடன் தாங்கிக் கொண்டான். ஆனால், ஆன்டினூஸின் நடவடிக்கை அங்கிருந்த எவருக்குமே பிடிக்க வில்லை. மற்றவர்கள் அனைவரும் ஒடிஸியஸுக்குப் பிச்சை போட்டனர். ஆனால், பிச்சைக்காரக் கிழவனின் சாபவார்த்தைகளைக் கேட்டதும் ஆன்டினூஸ் சற்றுக் கோபம் தணிந்தான். இதெல்லாம் நடைபெற்றுக் கொண்டிருந்த போது டெலமாக்கஸ், தான் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது பற்றியே யோசித்துக் கொண்டிருந்தான்.

பிச்சைக்காரனிடம் ஆன்டினூஸ் மிகவும் கொடூரமாக நடந்து கொண்டதை அறிந்த பெனிலோப்பியா, யூமியோஸை அனுப்பி ஒடிஸியஸை வரவழைத்தாள். தனது கணவரைப் பற்றிய தகவல்களை, கப்பலில் பயணம் செய்பவரான அந்தக் கிழவர் சொல்லக்கூடும் என்று அவள் நம்பினாள். ஆனால், சூரியன் மறையும் வரை காத்திருங்கள் என்று கிழவன் பதிலளித்தான். கிழவனது பாதுகாப்புக்கு அது அவசியம் என்றும் தெரிவித்தான்.

டெலமாக்கஸ் அந்தக் கிழவனுக்குத் தேவையான அளவுக்கு உணவை வழங்கிவிட்டு, யூமியோஸிடம் தனது பன்றிக் கூட்டத்தைப் பார்வையிட்டு வருமாறு அனுப்பி வைத்தான். அவர் மகிழ்ச்சியுடன் அங்கிருந்து கிளம்பவும் செய்தார்.

# XVIII

மதியம் தாண்டிய பிறகும் அந்த விசாலமான ஹாலில் ஆட்டமும் பாட்டும் ஆரவாரங்களும் ஓய்ந்ததாகத் தெரியவில்லை. அப்போது புதிய விருந்தாளி ஒருவர் அங்கு வந்து சேர்ந்தார். ஒருபோதும் நிறையாத யானைப்பசி

கொண்டுள்ளதால் நகரில் புகழ்பெற்றிருந்தவனான ஆர்னியோஸ் என்ற பிச்சைக்காரன்தான் அந்த விருந்தாளி. எப்படிப்பட்ட செய்தியையும், எங்கு வேண்டுமானாலும் கொண்டுபோய்ச் சேர்க்க முடிந்த கெட்டிக்காரனாகவும் அவன் விளங்கியதால் தேவர்களின் செய்தியை மக்களுக்குத் தெரிவிக்கும் ஐரோஸின் பெயரையே அவனுக்கும் சூட்டியிருந்னர். பிச்சைக்காரனின் வேடத்தில் ஏற்கெனவே அங்கிருந்த ஒடிஸியஸை அடித்து விரட்டுவதற்காகக் கண்டபடி திட்டியவாறே அவன் ஒடிஸியஸை நெருங்கினான். ஆனால், ஒடிஸியஸ் அங்கிருந்து பின்வாங்க வில்லை. அவர்கள் ஒருவருக்கொருவர் மோதிக் கொள்வதை வேடிக்கை பார்க்க ஆன்டினூஸ் மிகவும் ஆர்வமாக இருந்தான். 'நாங்கள் ஒருவருக்கொருவர் மோதும்போது யாரும் தலையிடமாட்டோம் என்று வாக்குறுதி அளிப்பதனால், தான் மோதலுக்குத் தயார்' என்று ஒடிஸியஸ் தெரிவித்தான்.

அதற்கு எல்லோரும் ஒப்புக்கொண்டனர். மட்டுமின்றி வெற்றி பெறுபவர், தினந்தோறும் அவர்களுடன் அமர்ந்து உணவு அருந்தலாம் என்ற உறுதிமொழியையும் வழங்கினர். அதீனி, ஒடிஸியஸின் அருகிலேயே நின்று கொண்டாள். அதனால் அவனுக்கு விரிந்த மார்பையும், வலுவான கைகளையும், தடித்த தொடைகளையும் வழங்கினாள். எல்லோரும் வியப்பு அடைந்தனர். இரண்டே அடியில் ஒடிஸியஸ் அந்தப் பிச்சைக்காரனை வீழ்த்தினான். அதனால் உணவுப் பொருள்கள் ஒடிஸியஸுக்கு முன்னால் குவிந்தன. வெற்றி பெற்றவனை அவர்கள் பாராட்டவும் தவறவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில் ஆணவம் நிறைந்தவர்களான அவர்களுக்கு, அவர்களது செயல்களின் தன்மையை-குரூரத்தை உணர்த்தவும், இதற்குப் பழிவாங்குவதற்காக வந்து சேர்ந்திருப்பதைத் தெரியப்படுத்துவதற்கும் இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ள விரும்பினான் ஒடிஸியஸ்.

உடனே பெனிலோப்பியாவை நெருங்கிய அதீனிதேவி, காத்திருக்கும் விருந்தாளிகளின் மனத்தில் காம உணர்வைத் தூண்ட முற்பட்டாள். சட்டென்று பெனிலோப்பியாவை ஒரு

சிறு உறக்கத்துக்கு ஆட்படுத்தினாள். அதற்குள் பெனிலோப்பியாவைப் பேரழகியாக மாற்றவும் செய்தாள். தூக்கத்திலிருந்து விழித்த பெனிலோப்பியா, தனது மெய்க்காவலர்களான இரண்டு பெண்மணிகளுடன் அந்த ஹாலுக்கு வந்தாள். அவளைக் கண்டவுடனே காத்திருந்த விருந்தாளிகளின் மனத்தில் காம உணர்வு பற்றிக் கொண்டது. அவளை எப்படியும் தங்களது மனைவியாக்கிக் கொள்ள வேண்டுமென்று அவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குள் சபதமே செய்து கொண்டனர்.

உடனே தன் மகனை அழைத்த பெனிலோப்பியா சொன்னாள்: "டெலமாக்கஸ், நீ திடகாத்திரசாலியான ஓர் இளைஞனாக வளர்ந்திருக்கிறாய். ஆனால், அதற்கேற்றவாறு தைரியமும் தன்னம்பிக்கையும் உன்னிடம் தென்படவில்லை. இந்த ஹாலில் நடப்பதையெல்லாம் நீ கவனிக்கவில்லையா? முன்பின் தெரியாத ஒருவனிடம் இவர்கள் எவ்வளவு முறைகேடாக நடந்து கொண்டார்கள்? இங்கு அந்த மனிதனின் உயிருக்கு ஆபத்து ஏதாவது ஏற்பட்டிருந்தால், அந்த அவமானமும், கெட்டபெயரும் யாருக்குச் சேரும் என்பதை நீ யோசிக்கவில்லையா?"

இதைக் கேள்விப்பட்ட டெலமாக்கஸ் அமைதியான குரலில் பதிலளித்தான்: "எல்லாவற்றையும் நான் கவனித்துக் கொண்டு தான் இருக்கிறேன். ஆனால், நான் தனி ஒருவனாக என்ன செய்ய முடியும்? எப்படியிருந்தாலும் முன்பின் தெரியாத பிச்சைக்காரருடன், நம் ஊர் பிச்சைக்காரனை மோதவிட்டதில் அவர்கள் விரும்பியபடி எதுவும் நடக்கவில்லை. புதியவரே வெற்றி பெற்றுவிட்டார்."

அந்தச் சூழ்நிலையில் காமஉணர்வு மேலிட்டிருந்த விருந்தாளிகளைக் கவர்ந்தது, பெனிலோப்பியாவின் அழகுதான். யூரிமாக்கஸ் அவளது அழகை வானுயரப் புகழ்ந்தான். அதே நேரம் அவர்கள் திருமணம் செய்து கொள்ளுமாறு தன்னை வற்புறுத்துவதை பெனிலோப்பியா கண்டிக்கவும் செய்தாள்: "ஒடிஸியஸ் திரும்பி வந்து, என்னைப் பழையபடி பாதுகாக்கும்படி

நேர்ந்தால், எனக்கு உலகத்தில் மேலும் மேன்மையான ஓர் இடம் கிடைக்க வாய்ப்பு இருந்தது. ஆனால், இப்போது எனக்குத் தெய்வம் அருள் புரிந்திருப்பது தீராத துயரங்களைத்தான். அதனால் என்னால் மௌனமாக அழ மட்டுமே முடிகிறது.

என் அன்புக்குரிய கணவர் இந்த மண்ணிலிருந்து கிளம்பிச் செல்லும்போது என்னிடம் சொல்லிவிட்டுப்போன வார்த்தைகள் என்ன என்பதை இப்போது நான் உங்களுக்குச் சொல்லப் போகிறேன். அவர் எனது கைகளைப் பிடித்துக் கொண்டு பேசினார்: 'தேவி, நம்முடைய தைரியம் நிறைந்த வீரர்கள் அனைவரும் டிராய் நகரிலிருந்து பத்திரமாகத் திரும்பி வருவார்கள் என்று நான் உறுதியாகச் சொல்ல முடியாது. டிரோஜன்களும் நம்மைப் போலவே தைரியமும், போர் முறைகளும் அறிந்தவர்கள். ஆயுதப் பயிற்சியில் தேர்ந்தவர்கள். குதிரைப் படையைக் கொண்டு போரிட்டால் அவர்களை யாராலும் வெல்ல முடியாது. குதிரைப் போரில் அவர்கள் அந்த அளவுக்கு வல்லவர்கள் கடவுள் என்னைக் காப்பாற்றுவாரோ, போர்க்களத்தில் அகப்பட்ட என்னுயிரைக் கவர்ந்து கொள்வாரோ என்பது எனக்கு உறுதியாகத் தெரியாது. அதனால் இங்குள்ள எல்லாவற்றையும் நிர்வகிக்கும் பொறுப்பை நான் உன்னிடம் ஒப்படைக்கிறேன்.

உண்மையான ஈடுபாட்டுடனும், பக்தியுடனும் என்னுடைய வயது முதிர்ந்த பெற்றோரைப் பார்த்துக் கொள்ளவேண்டும். பிறகு நம்முடைய மகன் உரிய பருவத்தை அடைந்து விட்டால், இந்த அரண்மனையை விட்டு விலகிச் சென்று, உனக்கு விருப்பமான ஒருவனைக் கணவனாக ஏற்றுக் கொள்.' இப்போது எல்லாமே அவர் சொன்னபடிதான் நடந்து கொண்டிருக்கிறது. நான் மிகவும் வெறுக்கக் கூடியதாக இருந்தாலும், ஒரு திருமணம் செய்யாமல் என்னால் இருக்க முடியாது. அப்படி நடப்பதை விதி என்பதைத் தவிர நான் வேறு என்ன சொல்ல? ஸியூஸ் தேவன் எனக்கு வழங்கிய எல்லா விதமான நல்வாய்ப்புகளையும் திரும்பப் பெற்றுக் கொண்டிருக்கிறார்.

இந்த அவமானத்தையும் துயரத்தையும் என்னால் தாங்கிக் கொள்ள முடிகிறது. ஆனால், இவற்றையெல்லாம்விட பெரிய அவமானம் ஒன்றை இப்போது நான் தாங்கிக் கொண்டிருக் கிறேன். நீங்கள் திருமணம் செய்யுமாறு என்னிடம் கேட்டுக் கொள்ளும் முறையை இதற்கு முன்பு நான் எங்கும் கேள்விப் பட்டதாகவும், பார்த்த ஒன்றாகவும் தெரியவில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? நல்ல குலத்தில் பிறந்த ஒருத்தியைத் திருமணம் செய்துகொள்ள விரும்புபவர், அவளுக்குக் கொடுக்கவிருக்கும் பொன், பொருள் போன்றவற்றின் பெயரால் போட்டியிடுவார்கள். அப்படிப்பட்டவளுக்கு அரிதான பொருட்களைப் பரிசளிப்பார்கள். அவளது உறவினர்களுக்குப் பிரம்மாண்டமான விருந்துகளை நடத்துவார்கள். அப்படி இல்லாமல், அவர்கள் யாரும் வேறு எந்த பலனையோ, மற்றவர்களின் சொத்துகளையோ கைப்பற்றியதாகத் தெரியவில்லை."

மறுநாளே அவர்கள் ஒவ்வொருவரும் தங்களது மதிப்பை வெளிக்காட்டும் விதமாக வெவ்வேறு பரிசுப் பொருள்களைக் கொண்டு வந்தனர். அதன் பிறகு அவர்கள் தங்களது வழக்க மான பொழுதுபோக்குகளில் ஈடுபட்டனர்.

யூரிமாக்கஸ், ஒடிஸியஸைக் கேலி செய்ய அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டான். ஆனால், உடனே ஒடிஸியஸ் அதற்குத் தக்க பதிலடி கொடுத்தான். அதனால் கோபமடைந்த யூரிமாக்கஸ், தான் கால்வைக்கும் பீடத்தை எடுத்துச் சுழற்றி அவன் மீது வீசி எறிந்தான். ஒடிஸியஸ் ஆம்ஃபினோஸின் பின்னால் மறைந்து கொண்டதால், பீடம் அவன் மீது விழுந்தது. அதனால் அவன் சுருண்டு தரையில் விழுந்தான். தொடர்ந்து பல்வேறு விதமான அலறல்களும், அட்டகாசக் குரல்களும் நான்கு திசைகளிலிருந்தும் உயர்ந்தன.

டெலமாக்கஸ் அவர்களுக்குள் சமாதானத்தை ஏற்படுத்த முயன்றான். கடைசியில் சாப்பாடு முடிந்து விட்டதால் மேற்கொண்டு ஒவ்வொருவரும் தங்களது இருப்பிடங்களுக்குச்

செல்லுமாறு கேட்டுக் கொண்டான். உடனே எல்லோரும் அதை ஏற்றுக் கொண்டு அப்படியே நடந்து கொண்டனர்.

# XIX

ஒடிஸியஸும் டெலமாக்கஸும் மட்டும் கடைசியில் அந்த விசாலமான ஹாலில் மீதமானார்கள். இருவரது மனங்களிலும் அவர்களை எப்படிப் பழிவாங்குவது என்ற உணர்வே மேலிட்டிருந்தது. அதீனிதேவியின் அருளாலும், பின்பலத்தாலும் ஒடிஸியஸ், டெலமாக்கஸை அருகில் அழைத்துச் சில யோசனைகள் கூறினான்.

"முதலில் நம்முடைய ஆயுதங்களையெல்லாம் ஆயுதக் கிடங்கில் கொண்டுபோய் வைக்க வேண்டும். ஆனால், எப்போது வேண்டுமானாலும் எடுப்பதற்கு வசதியாக அவை தயாராக இருக்க வேண்டும். அதற்கு முன்னால் வேலைக்காரர்களின் அறைக் கதவுகளை மூடிவிடவேண்டும்."

இதையெல்லாம் கவனமாகக் கேட்டுக்கொண்ட டெலமாக்கஸ் வயது முதிர்ந்த பெண்மணியான யூரிக்லியாவை அழைத்து, வேலைக்காரர்களின் அறைகளைப் பத்திரமாக மூடிப் பூட்ட ஏற்பாடு செய்தான். அதன் பிறகு டெலமாக்கஸும் ஒடிஸியஸும் சேர்ந்து கனமான கிரீடங்கள், கவசங்கள், கூர்மையான வேல்கள் ஆகியவற்றை எடுத்துச் சென்றனர். கண்ணைக் கூசச் செய்யும் ஒரு தங்க நிற தீபத்தைக் கையில் ஏந்திக் கொண்டு அதீனி தேவி அவர்களுக்கு முன்பாக நடந்தாள். டெலமாக்கஸால் தன்னுடைய ஆவலை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவன் உரத்த குரலில் கேட்டான்: "அன்புக்குரிய அப்பா, நான் மிகவும் அதிசயமான ஒரு காட்சியைக் காண்கிறேன். இந்த அறைகளின் சுவர்களும் உயர்ந்த தூண்களும் நெருப்புக் கொழுந்துகளால் சூழப்பட்டவைபோல் தோன்றுகிறது. விசாலமான ஆகாயத்தில்

வாழ்ந்து கொண்டிருக்கும் ஏதோ ஒரு தேவதை இப்போது இங்கு வந்திருக்க வேண்டும்!"

சற்று நேரத்துக்கு ஆவலை ஒதுக்கி வைக்க வேண்டும் என்றும், கேள்விகள் எதையும் கேட்கக்கூடாது என்றும், இதெல்லாம் ஒலிம்பஸில் ஆட்சி புரியும் தேவர்களின் திருவிளையாடல்கள்தான் என்றும் ஒடிஸியஸ் விளக்கம் அளித்தான். அதன் பிறகு டெலமாக்கஸை அவனது படுக்கையறைக்கு அனுப்பிவைத்தான். அதனால் தனிமையில் ஆழ்ந்த ஒடிஸியஸ் தான் எப்படிச் செயல்படுவது என்பதைப் பற்றி வெகுநேரம் யோசித்தான்.

ஒடிஸியஸைத் தனியாகப் பார்த்தபோது *மெலாந்தா* என்ற வேலைக்காரி உடனே அவனைத் திட்டத் தொடங்கினாள். இதைக் கேட்டுக்கொண்டு அங்கு வந்து சேர்ந்த பெனிலோப்பியா அவளை அடித்து அங்கிருந்து விரட்டியடித்தாள். பிறகு ஒடிஸியஸை நாற்காலி ஒன்றில் உட்காரவைத்தாள். அவனிடம் அவனது கதையைக் கூறுமாறு கேட்டுக் கொண்டாள். பிறகு துயரத்துக்குரிய தனது கதையையும் அவனிடம் விளக்கினாள். அதனால் ஒடிஸியஸ் ஏராளமான கற்பனைக் கதைகளை அவளிடம் சொல்ல நேர்ந்தது.

தன்னுடைய உண்மை நிலையை மறைத்துக் கொண்டு, போருக்குப் போகும் வழியில் ஒடிஸியஸை பார்த்ததாகவும், அவரை உபசரித்ததாகவும், ஒரு சில நாட்கள் தனது விருந்தாளியாக அவர் தங்கியிருந்தார் என்றும் ஒடிஸியஸ் கதை சொன்னான். பெனிலோப்பியாவுக்கு நம்பிக்கை ஏற்படுத்துவதற்காக, ஒடிஸியஸின் வேடத்தைப் பற்றியும் எடுத்துச் சொல்ல நேர்ந்தது. அன்று உதவியாளனாக உடனிருந்த *யூரிபேட்டஸ்* என்பவனைப் பற்றியும் சொன்னான். பிறகு இதாக்காவுக்கு வரும் வழியில் ஒடிஸியஸைப் பற்றிக் கேள்விப்பட்டதாக மேலும் சில செய்திகளையும் தெரிவித்தான்.

"சொந்த நாட்டுக்குத் திரும்பிவரும் வழியில் அவர் *தெஸ்பி ரோஷ்யன்* நாட்டை அடைந்தார். நீண்ட பயணத்தால் சேகரித்த

எக்கச்சக்கமான பொருள்களையும் அவர் தன்னுடன் கொண்டு வருகிறார். திரினேஷ்யாவிலிருந்து புறப்பட்ட பயணத்தின்போது ஒடிஸியஸின் கப்பலும் மாலுமிகளும் நாசமாகிப் போனார்கள். கப்பலின் பக்கப் பலகை ஒன்றைப் பிடித்துக் கொண்டுதான் அவர் ஃபீஷ்யன் கடற்கரையை அடைந்தாராம்.

அந்த நாட்டு மன்னர், ஒரு தேவனைப் போல் ஒடிஸியஸை வரவேற்றார். பத்துத் தலைமுறைகளுக்குப் பயன்படக்கூடிய செல்வத்தைப் பரிசாக அளித்தார். அங்கிருந்து சொந்தக் கப்பலில் ஒடிஸியஸை இதாக்காவில் கொண்டு வந்துவிடுவதாகச் சொன்னார் என்று கேள்விப்பட்டேன். அதனால், தேவி நீங்கள் நிம்மதியாக இருங்கள். நான் மீண்டும் சொல்கிறேன்... உங்கள் கணவர் உயிருடன் இருக்கிறார். இனி எந்த விநாடியிலும் அவர் இங்கு வந்து சேரலாம்!"

"இருக்கலாம். ஆனால், நான் இப்போது நெருப்பின் மீது நிற்பது போல் நிற்கிறேன்." பெனிலோப்பியா கூறினாள்: "விதி இன்னும் என்னவெல்லாம் துன்பங்களை என் தலை மீது கட்டி வைக்கப்போகிறதோ? அருகிலுள்ள தீவுகளில் உள்ள முக்கியப் பிரமுகர்களும், இளவரசர்களும் அவ்வளவு ஏன்... இதாக்கா நகரின் பிரபுக்கள் சிலரும்கூட என் விருப்பத்துக்கு விரோதமாக என்னைத் தங்கள் மனைவியாக்கக் கடுமையான முயற்சிகளில் ஈடுபட்டுள்ளனர். அதன் பொருட்டுத்தான் எல்லோரும் இங்கு குழுமியிருக்கிறார்கள். எங்களது சொத்துக்களை ஊதாரித் தனமாகச் செலவழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அதனால் பழக்கமில்லாத விருந்தாளிகளையோ, அகதிகளையோ கவனிக்கக்கூட என்னால் முடியவில்லை. என் கணவரை நினைத்து எப்போதும் நான் அழுது கொண்டே இருக்கிறேன். இதற்கிடையில்தான் நான் விரைவில் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று இங்குள்ள ஒவ்வொருவரும் விரும்புகிறார்கள்.

நான் ஒரு தந்திரத்தைப் பயன்படுத்தித் திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டிருக்கிறேன். கருணை மிகுந்த ஏதோ

ஒரு தேவதைதான் என் மனத்தில் இப்படியொரு யோசனையை ஏற்படுத்தியது. என்னுடைய தறியில் மிகவும் சன்னமான ஒரு துணியை நெய்யும் முயற்சியில் ஈடுபடுவது. அதுதான் எனக்குத் தட்டுப்பட்ட ஒரே யோசனை. நான் வெளியில் உள்ளவர்களிடம் சொன்னேன்: 'ஒடிஸியஸ் இறந்து போய்விட்ட நிலையில், உங்களில் யாராவது ஒருவரை நான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறீர்கள். அதற்காக அவசரப் படுகிறீர்கள். நீங்கள் எவ்வளவு அவசரப்படுத்தினாலும் நான் நெய்ய விரும்பும் புனிதமான ஆடையை நெய்து முடிப்பது வரை நீங்கள் காத்திருக்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் நான் என் கையாலேயே நூற்ற விலையுயர்ந்த நூல்கள் வீணாகிவிடும்.

மகானான லெயர்ட்டிஸின் மரணத்துக்குப் பிறகு அவரது உடலில் போர்த்துவதற்காக நெய்யப்படும் ஆடை இது. மிகவும் புகழ்பெற்ற ஒரு மன்னர் இறக்கும்போது அவரது உடலின் மீது போர்த்த உயர்தரத் துணி ஒன்று இல்லாவிட்டால், என்னைப் பழிப்பார்கள். என்னைப் பற்றிய வீணான வதந்திகளைக் கிளப்புவார்கள்.

இப்படிச் சொன்ன பிறகு பகல் நேரம் முழுவதும் நான் துணி நெய்வதில் ஈடுபடுவேன். ஆனால், இரவில் யாருக்கும் தெரியாமல் பகலில் நெய்த துணியிலிருந்து நூலைப் பிரித்துப் பழையபடி சுற்றி வைப்பேன். அதனால் நான் நெய்யும் துணியின் வேலை ஒரு போதும் தீராது. மூன்றாண்டுகள் வரையில் நான் இந்தத் தந்திரத்தைக் கடைப்பிடித்தேன். ஆனால், நான்காவது வருடத்தில் இங்குள்ள வேலைக்காரர்கள் அந்த ரகசியத்தை வெளிப்படுத்திவிட்டார்கள். அதனால் அவர்கள் என்னை வளைத்துக் கொண்டார்கள். உடனே அந்தத் துணியை நான் நெய்து முடிக்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளானேன்.

மேற்கொண்டு இந்தத் திருமணத்தைத் தள்ளிப்போட எனக்கு வேறு வழி எதுவும் தெரியவில்லை. புதிய தந்திரங்கள் எதையும் என்னால் கண்டுபிடிக்கவும் முடியவில்லை.

சரி, உங்களது கதையை எல்லாம் நீங்கள் சொல்லி விட்டீர்களா? என் கணவரை நீங்கள் சந்தித்ததாகச் சொல்வது உண்மைதானா? அவர் விரைவில் என்னிடம் திரும்பி வருவாரா?" பெனிலோப்பியா துயரம் தாங்காமல் உரத்த குரலில் அழத்தொடங்கினாள்.

"மேன்மைக்குரிய ராணியே, இந்தக் கண்ணீர் உங்களது முகத்தின் ஒளியைக் குறைத்துவிட நீங்கள் அனுமதிக்கக் கூடாது. உங்களது கணவரின் பிரிவை நினைத்து நீங்கள் இதயம் நொறுங்கி இறந்துவிடக் கூடாது. நீங்கள் அமைதியடையுங்கள். நான் திரும்பத் திரும்பச் சொல்கிறேன். உங்களது கணவர் உயிருடன் இருக்கிறார். விரைவிலேயே அவர் இங்கு வந்து சேர்வார்!"

ஒடிஸியஸின் இந்த வார்த்தைகள் பெனிலோப்பியாவுக்குத் தற்காலிகமாக ஓர் ஆறுதலை அளித்தாலும் ஒடிஸியஸ் ஒரு போதும் திரும்பி வரமாட்டார் என்று அவளது உள்ளுணர்வு கூறியது. அதன் பிறகு மாறுவேடத்திலிருந்த ஒடிஸியஸின் கால்களைக் கழுவி, வாசனைத் தைலத்தைத் தேய்த்துவிட்டு, நல்ல உடைகளை அணிவிக்குமாறு அவள் தனது வேலைக்காரிகளிடம் கூறினாள்.

யூரிக்லியா என்ற வயதான வேலைக்காரி வந்து ஒடிஸியஸின் கால்களைக் கழுவினாள். ஆனால், சிறுவயதில் வேட்டையாடச் சென்றபோது காட்டுப்பன்றியுடன் போராடியதில் ஒடிஸியஸின் காலில் ஏற்பட்ட காயவடுவை அவள் அடையாளம் தெரிந்து கொண்டாள். ஒடிஸியஸின் வளர்ப்புத் தாயாக இருந்த அவளுக்கு ஒடிஸியஸை அடையாளம் காண்பது அதன் பிறகு அவ்வளவு கடினமானதாக இருக்கவில்லை. அவள் இந்த மகிழ்ச்சிகரமான செய்தியை பெனிலோப்பியாவிடம் சொல்வதற்காகத் திரும்பியதும் ஒடிஸியஸ் அவளை ஒதுக்கித் தள்ளினான். உண்மையைச் சொன்னால் தலையை வெட்டி விடுவேன் என்று மிரட்டவும் செய்தான். அதனால் இந்தத் தகவலை வெளியிடமாட்டேன் என்று அவளும் வாக்குறுதி அளித்தாள்.

குளியலை முடித்துக்கொண்டு கணப்பு அடுப்புக்கு அருகே வந்து அமர்ந்த விருந்தாளியிடம், பெனிலோப்பியா தான் கண்ட கனவை விவரித்து, அதற்கான பொருளைக் கூறுமாறு கேட்டுக் கொண்டாள்.

"இந்த இடத்துக்கு அருகில் இருபது வாத்துகள் உள்ளன. அவை, உணவு தேடி நீரிலிருந்து கரைக்கு வந்தன. மலைப் பகுதியிலிருந்து ஒரு பெரிய கழுகு வந்து தனது கூர்மையான நகங்களால், வாத்துகளின் கழுத்தை நெரித்துக் கொன்றது. நான் உரத்த குரலில் அழுததுடன் கூடவே அலறவும் செய்தேன். அந்தக் கனவைக் கண்டதும். உடனே பெண்களின் கூட்டம் என்னைச் சூழ்ந்து கொண்டது. அந்தக் கழுகு மீண்டும் தாழ்வாகப் பறந்து வந்து அரண்மனையின் மேற்கூரை மீது அமர்ந்து கொண்டு மனிதக் குரலில் என்னிடம் பேசத் தொடங்கியது:

உலகப் புகழ்பெற்ற *ஐக்கோரியஸின்* மகளான ராணியே, உனக்குத் தைரியம் ஏற்படுவதாக! இது வெறும் ஒரு கனவு மட்டுமல்ல. மாறாக, ஒரு நல்ல காரியத்தை உனக்கு உணர்த்தும் ஒரு சூசனையும் கூட. இந்த வாத்துகள் உங்களிடம் திருமணம் செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளும் காமாந்தகாரர்கள். ஒரு கழுகாக வந்த நானோ, இப்போது உங்களது கணவனாக வந்திருக்கிறேன். நான் அவர்களை ஒட்டு மொத்தமாக மரணத்துக்கு உள்ளாக்குவேன்.' என்று கூறியது. சட்டென்று கண்விழித்த நான், வாத்துகள் எங்களது உணவுப் பாத்திரத்திலிருந்து கோதுமையைக் கொத்தித் தின்பதைக் கவனித்தேன்."

ஒடிஸியஸ் உடனே அதற்குப் பதிலளித்தான்: "மேன்மைக்குரிய ராணி, இந்தக் கனவுக்கு வேறு எந்த விதமாகவும் பொருள் சொல்ல முடியாது. ஏனென்றால் ஒடிஸியஸே நேரடியாக வந்து தான் என்ன செய்ய நினைத்திருக்கிறார் என்கிற தகவலை உங்களிடம் சொல்லியிருக்கிறார். அதனால் காத்திருக்கும் காமாந்தகர்கள் எல்லோரும் இறந்து போவார்கள். அதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை!"

பெனிலோப்பியா உடனேயே மற்றொரு தகவலையும் தெரிவித்தாள்: “திருமணம் புரியுமாறு கோரிக்கொண்டு அங்கு குழுமியுள்ள இளைஞர்களுக்காக நான் ஒரு போட்டியை ஏற்பாடு செய்யப் போகிறேன். ஒடிஸியஸ் இங்கு இருக்கும்போது பன்னிரண்டு மூங்கில் குழாய்களை இந்த ஹாலில் .வரிசையாக நிற்கவைத்து தொலைவிலிருந்து அம்பு எய்து அவற்றின் ஊடாகப் பாய்ந்து வரச் செய்வார். அவரது கனமான பெரிய வில்லை எடுத்து நாணேற்றி அதே போல் பன்னிரண்டு குழல்களின் வழியாக அம்பை வெளியே கொண்டு வருபவரை நான் எனது கணவராகத் தேர்ந்தெடுக்கப் போகிறேன்.”

“மேன்மைக்குரிய ராணி, இந்தப் போட்டிக்காக நீங்கள் தேர்ந்தெடுத்துள்ள நாளில், தள்ளிப் போடாமல் போட்டியை நடத்துங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன். அவர்கள், அவ்வளவு பெரிய வில்லை நாணேந்தி அம்பு எய்வதற்குள் எப்படியும் ஒடிஸியஸ் இங்கு வந்து சேர்ந்து விடுவார் என்று நான் நம்புகிறேன்.”

வயதான பிச்சைக்கார விருந்தாளியின் வார்த்தைகளைக் கேட்டபிறகு சற்று ஆறுதலடைந்த பெனிலோப்பியா, தனது படுக்கை அறைக்குச் சென்றாள். கணவனை நினைத்து அழுது கொண்டிருந்த ராணியின், கண்ணிமைகளை மூடி, எல்லாவற்றையும் மறக்கச் செய்யும் தூக்கத்தைக் கொடுத்தாள் அதீனிதேவி.

# XX

ஒடிஸியஸ், முற்றப் பகுதியை ஒட்டியிருந்த விசாலமான ஹாலில், அகலமான காளைமாட்டுத் தோலின் மீது ஒரு சில ஆட்டுத் தோல்களை விரித்துப் போட்டுப் படுத்துக் கொண்டான். யூரினோமி போர்வை ஒன்றைக் கொண்டு வந்து அவனைப் போர்த்திவிட்டாள். ஆனால், பல்வேறு யோசனைகளில் ஆழ்ந்திருந்த ஒடிஸியஸுக்கு அவ்வளவு சீக்கிரம் உறக்கம் வரவில்லை. மனம் மொத்தமும் வேதனையடைந்திருந்ததால்

திரும்பியும் புரண்டும் படுத்து உறக்கத்தை வரவழைக்க முயன்றான். அப்போது அதீனிதேவி அங்கு சட்டென்று தென்பட்டாள்.

'அந்த முட்டாள்களைத் தான் தனியொரு மனிதனாக நின்று வெற்றி கொள்ள முடியுமா? ஒருவேளை வெற்றி கொள்வதாகவே இருந்தாலும், அவர்களது உறவினர் கூட்டத்தை எப்படித் தோற்கடிப்பது?' இதுதான் ஒடிஸியஸின் கவலைக்குக் காரணம்.

"ஐம்பது படைப்பிரிவே எதிர்த்து வந்தாலும் அவர்களை எல்லாம் கொல்வதற்கான சக்தியும், தைரியமும் உங்களுக்கு அப்போது ஏற்படும். அமைதியாகப் படுத்து உறங்குங்கள்!" என்று கூறிவிட்டு அதீனிதேவி மறைந்தாள்.

ஒடிஸியஸ் தூக்கத்துள் ஆழ்ந்தான்.

அதே நேரம் பெனிலோப்பியா ஒரு கனவு கண்டு திடுக்கிட்டுக் கண் விழித்தாள். ஒடிஸியஸ் அங்கிருந்து கிளம்பிச் சென்ற அதே வேடத்தில், திரும்பிவந்து அவளுடன் படுக்கையில் கிடப்பது போன்ற அந்தக் கனவு அவளை மேலும் சோகத்தில் ஆழ்த்தியது.

தன் மனைவியின் துயரம் நிறைந்த குரலை ஒடிஸியஸும் கேட்கவே செய்தான். கனவின் மயக்கத்தில் அவள் தன்னைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கலாம் என்றும், அதனால் தனக்கு அருகில் வந்து நிற்பதாகவும் அவனுக்குத் தோன்றியது. உடனேயே தனது படுக்கையைச் சுருட்டி வைத்துவிட்டு முற்றத்தின் பக்கமாக நடந்தான். தனது இரண்டு கைகளையும் உயர்த்திப் பிடித்தவாறு அவன் ஸியூஸ் தேவனிடம் பிரார்த்தனை செய்தான்.

"பிதாவான ஸியூஸ்! எண்ண முடியாத என் துயர அனுபவங்களுக்கும், கொடூரமான சோதனைகளுக்கும் பிறகு நான் என் பிறந்த மண்ணை அடைந்தது தேவர்களின் விருப்பப்படிதான் என்றால், இந்த வீட்டில் இப்போது தூக்கத்திலிருந்து விழித்து எழுந்திருக்கும் யாராவது இந்தத் தீர்க்கதரிசனமான வார்த்தைகளை உச்சரிக்கட்டும். ஸியூஸ்

தேவனே. அரண்மனைக்கு வெளியிலும் அதற்கு அடையாளமாக ஏதாவது ஒரு சகுனத்தைக் காட்டித் தருவீராக!"

எல்லாம் வல்ல ஸியூஸ் தேவன் அவனது பிரார்த்தனைக்குச் செவிமடுத்தார். திடுமென்று மேக மண்டலங்களுக்கு மேற்புறம் உள்ள தெய்வீக ஒளி நிரம்பிய ஒலிம்பஸ் மலையிலிருந்து ஓர் இடிமுழக்கம் கேட்டது. ஒடிஸியஸின் இதயத்தில் அடக்க முடியாத மகிழ்ச்சி ஏற்பட்டது. அதே சமயம், அருகில் எங்கோ கோதுமையை அரைத்துக் கொண்டிருந்த பெண்மணியிடமிருந்து அசிரீரி போல் தீர்க்கதரிசனமான வார்த்தைகளும் கேட்டன:

"பிதாவான ஸியூஸ், தீராத துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும் ஒரு பெண்மணியின் பிரார்த்தனையை நீங்கள் செவிமடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அந்த மனிதர்கள் காலையில் சாப்பிடும் உணவு அவர்களுடைய கடைசி உணவாக இருக்கட்டும். என் இதயம் நொறுங்கும் அளவுக்கு இப்படி வேலை செய்ய வைப்பது அவர்கள்தானே? அதனால், இப்போது உண்டாக்கப்படும் உணவு அவர்களுடைய கடைசி கோதுமை உணவாக இருக்கட்டும்!"

இந்த வார்த்தைகளைச் செவிமடுத்த ஒடிஸியஸ் மிகவும் மகிழ்ச்சியடைந்தான். தான், குற்றவாளிகளைத் தண்டித்து விடுவோம் என்பது அவனுக்கு உறுதியாகத் தெரிந்தது.

டெலமாக்கஸ், காலையில் எழுந்தவுடனே யூரிக்லியாவை அழைத்துப் புதிய பிச்சைக்கார விருந்தாளிக்கு எந்த விதக் குறையுமில்லாமல் பார்த்துக் கொள்ளுமாறு கட்டளையிட்டான். பிறகு தன்னுடைய வேலை எடுத்துக் கொண்டு அங்கிருந்து வெளியேறினான். அவர்களது வீட்டிலிருந்த காவல் நாய்கள் இரண்டும் அவனைப் பின்தொடர்ந்து சென்றன.

யூரிக்லியா, மற்ற வேலைக்காரிகளையும் எழுப்பிவிட்டு, ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு வேலையைக் கொடுத்தாள். விருந்தாளிகள் இன்று வழக்கத்தைவிட விரைவில் வந்து சேர்வார்கள் என்றும், இன்றைய தினத்தை ஓய்வு நாளாகக்

கழிக்க அவர்கள் தீர்மானித்திருப்பதாகவும் அவள், மற்ற வேலைக்காரர்களிடம் தெரிவித்தாள். அப்போது பன்றிகளைப் பராமரிக்கும் பெரியவர், சிறந்த மூன்று பன்றிக் குட்டிகளைக் கொண்டு வந்திருந்தார். வந்திருக்கும் விருந்தாளிகளின் நிலையில் மாற்றம் ஏதாவது உண்டா என்றும் கேட்டார். 'கடவுள்தான் அவர்களைக் கவனித்துக் கொள்ளவேண்டும்' என்று பதிலளித்தான் ஒடிஸியஸ்.

அதே நேரம் மெலந்தியாஸ் மூன்று மிக நல்ல ஆடுகளைக் கொண்டு வந்தான். வந்ததும் வராததுமாக அவன் உடனே ஒடிஸியஸைத் திட்டத் தொடங்கினான். அதைப் பொருட்படுத்தாத ஒடிஸியஸ் சிந்தனையில் ஆழ்ந்தான்.

சற்று நேரத்துக்குள் ஃபிலியோஷ்யஸ் என்ற மாடு மேய்ப்பவன், நல்ல பசுமாடு ஒன்றையும், ஒரு சில ஆடுகளையும் கொண்டுவந்து சேர்த்தான். வயதான பிச்சைக்காரனைப் பார்த்ததும், என்ன காரணத்தாலோ அவனுக்குத் தன் பழைய எஜமான் நினைவுக்கு வந்தார். அந்த வீட்டுக்கு வந்து சொத்துக்களைச் சூறையாடும் நாசமாகிப்போன விருந்தாளிகளைப் பற்றியும், தனது சிறிய எஜமானால் அவர்களை எதுவும் செய்ய முடியாமல் இருப்பதையும் எடுத்துச் சொல்லி அவன் மிகவும் வருத்தப்பட்டான். உடனே அவனை நெருங்கி வந்த ஒடிஸியஸ், "நாசமாகிப்போன அந்த விருந்தாளிகள் மொத்தப் பேரையும் ஒடிஸியஸ் வந்து கொல்லப்போவதை நீயே உன் கண்களால் பார்க்கலாம்!" என்று ஆறுதல் கூறினான்.

அவர்கள் இருவரும் இப்படிப் பேசிக் கொண்டிருந்தபோது, காமாந்தக விருந்தாளிக் கூட்டம் டெலமாக்கஸைக் கொல்வது குறித்துத் திட்டம் போட்டுக் கொண்டிருந்தது. அப்போது கழுகு ஒன்று அவர்களுக்கு இடது பக்கமாக உயரத்தில் பறந்தது. அதன் நகங்களுக்கிடையில் புறா ஒன்று கிடந்து துடிப்பதை அவர்கள் கவனித்தனர்.

அந்தத் துர்ச்சகுனத்தைக் கவனித்ததும் உடனேயே அவர்கள் அந்த விவாதத்தை அப்படியே ஒதுக்கி வைத்தனர். பிறகு

எல்லோருமாக உணவு அருந்தும் இடத்துக்குச் சென்றனர். இறைச்சியைப் பல்வேறு விதமாகச் சமைத்து எடுத்தனர். மதுஜாடிகளை நிறைத்துக் கொண்டனர். யூரினோஸ் மதுக்கிண்ணங்களை நிரப்பினான். ஃபிலோஷ்யஸ் பெரிய பெரிய கூடைகளில் ரொட்டிகளை எடுத்து வந்தான்.

ஒடிஸியஸின் இருப்பிடத்தை டெலமாக்கஸ் கவனமாகத் தேர்ந்தெடுத்தான். அவனை அந்த ஹாலின் கதவருகில் நாற்காலி ஒன்றில் உட்கார வைத்தான். ஒரு பெரிய தட்டு நிறைய வறுத்த இறைச்சியையும், ஒரு தங்கக் கோப்பையில் மதுவையும் ஊற்றி டெலமாக்கஸே அவனுக்குப் பரிமாறினான். பிறகு உரத்த குரலில் டெலமாக்கஸ் கூறினான்:

"மேன்மைக்குரிய பிரபுக்களுடன் அமர்ந்து நீங்களும் விருந்தில் கலந்து கொள்ளுங்கள். யாரும் உங்களைத் தொல்லைப்படுத்தாமலும், எந்த விதமான பிரச்சினையும் ஏற்படுத்தாமலும் நான் பார்த்துக் கொள்கிறேன். இது பொதுமக்களுக்கு உரிய சத்திரமோ சாவடியோ அல்ல. என் அப்பாவுக்குச் சொந்தமான அரண்மனை. அவர் எனக்காகவே கட்டியதும்கூட. அதனால் ஒரு கலகத்தைத் தவிர்க்க வேண்டுமென்று நீங்கள் மனமார விரும்பினால், உங்களது நாக்கு மற்றும் கைகளை நீங்களே கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியதுதான்!"

டெலமாக்கஸிடம் ஏற்பட்டிருந்த தைரியம், விருந்தாளிகளை வியப்பு அடைய வைத்தது. அதனால் அவர்கள் தொடர்ந்து கேலி செய்து, அட்டகாசமாகச் சிரித்து ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர். ஒடிஸியஸின் கோபத்தை அதிகப்படுத்துவது தான் அதீனிதேவியின் நோக்கமாக இருந்தது. உடனேயே ஸாமியிலிருந்து வந்த *டெஸிப்போஸ்* என்ற வேலையாள் எலும்புத் துண்டு ஒன்றை ஒடிஸியஸை நோக்கி எறிந்தான். ஒடிஸியஸ் தலையை ஒரு புறமாகச் சரித்தான். அதனால் அந்த ஆபத்திலிருந்து தப்பித்தான். டெலமாக்கஸ் அவனைக் கோபத்துடன் திட்டியதுடன் மறுபடியும் எல்லோரையும் எச்சரித்தான்.

அதே நேரம் ஏஜீலயோஸ் டமஸ்டேரியஸ், தனது திருமண காரியம் தொடர்பாக, அம்மாவிடம் பேசுமாறு டெலமாக்கஸிடம் சொன்னான். அதற்குப் பதிலளித்த அவன், தன் தாயார் திருமணம் புரிந்து கொள்வதில் தனக்கு எந்த விதமான ஆட்சேபனையும் இல்லை என்றும், ஆனால், அவரது விருப்பத்துக்கு மாறாக அவரை அந்த வீட்டிலிருந்து வெளியேற்றத் தான் விரும்பவில்லை என்றும் திட்டவட்டமாகக் கூறினான்.

இந்தப் பதிலைக் கேட்ட விருந்தாளிக் கூட்டம் சிரித்து, கேலிக் குரலில் கண்டபடி பேசத் தொடங்கியது. அதீனி விருந்தாளிக் கூட்டத்தை உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தாள்.

திடுமென்று அவர்களது பாத்திரங்களிலிருந்து ரத்தத் துளிகள் தெறித்தன. அவர்களது கண்களிலிருந்து கண்ணீர் மளமளவென்று வழியத் தொடங்கியது. இதைக் கவனித்த தியோக்லிமானோஸ் ஆபத்து ஏற்படப்போவதை உரத்த குரலில் எடுத்துரைத்தான். அவர்களுக்கு நிலைமையைப் புரியவைக்க முயன்றான். ஆனால், அதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாத அவர்கள், அவனை அங்கிருந்து விரட்டியடித்ததுடன் வெறிவந்தவர்கள் போல் நடனமாடவும் தொடங்கினர்.

# XXI

அந்த ஹாலில் நடைபெற்ற சம்பவங்களுக்கெல்லாம் சாட்சியாக, பெனிலோப்பியா அப்போதும் அந்த ஹாலின் வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். தனது கணவரைத் தேர்ந்தெடுப்பதற்கான போட்டியை மேற்கொண்டும் தள்ளிப் போடுவது சரியல்லவென்று அவளுக்குத் தோன்றியது. ஒடிஸியஸின் பெரிய வில்லும், மூங்கில் குழாய்களையும் எடுத்து வருவதற்காக அவள் ஆயுதக்கிடங்குக்குப் போனாள்.

மிகப்பெரிய வில்லான அதை, ஒடிஸியஸின் நண்பரான இஃபிட்டோஸ் யூரிடிடிஸ், ஒடிஸியஸுக்குப் பரிசு அளித்தது.

ஒரு முறை *மெஸ்ஸீனியர்கள்* இதாக்காவிலிருந்து முந்நூறு செம்மறியாடுகளைத் திருடிச் சென்றபோது, அவர்களிடமிருந்து ஈட்டுத்தொகை பெறுவதற்காக ஒடிஸியஸ் அவர்களது நாட்டுக்குச் சென்றான். அங்கு நண்பராகிவிட்ட இஃபிட்டோஸை, *ஹிராக்கிள்ஸ்* கொன்று விட்டான். எனினும் நண்பர் வழங்கிய அந்த வில்லை, நட்புக்காகப் பத்திரப்படுத்தி வைத்திருந்தான் ஒடிஸியஸ். அதற்கு அருகிலேயே அம்பறாத்தூணியில் ஏராளமான அம்புகளும் கவனமாகப் பாதுகாக்கப்பட்டு வந்தன. அந்த வில்லைப் பார்த்தபோது பெனிலோப்பியாவினால் தனது துயரத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அதனால் சற்று நேரம் அங்கிருந்தவாறே அவள் அழுதாள். அதன் பிறகு இரண்டு கைகளாலும் அந்த வில்லைத் தூக்கியவள் அதை விசாலமான ஹாலுக்குக் கொண்டு வந்தாள். அதைத் தொடர்ந்து போட்டிக்குத் தேவையான மற்ற கருவிகளையும் வேலைக்காரிகள் வரிசையாகக் கொண்டு வந்து சேர்த்தனர்.

தன்னைத் திருமணம் செய்து கொள்வதற்காகக் காத்துக் கொண்டிருக்கும் ஒவ்வொருவரையும் நோக்கி அவள் பேசினாள்: "வணக்கத்துக்குரிய என் கணவரின் பாதுகாப்பிலிருந்த புகழ் பெற்ற வில் இது. உங்களில் யாராவது ஒருவர் இதன் நாணைப் பூட்டி அம்பு எய்து, இங்கு ஒரே வரிசையில் வைத்துள்ள பன்னிரண்டு மூங்கில் குழாய்களின் வழியாக வெளியே அனுப்பி வைக்கிறாரோ அவரையே திருமணம் செய்து கொள்ளவும், பரிசுத்தமான ஏராளமான நினைவுகள் நிறைந்த இந்த வீட்டிலிருந்து வெளியேறவும் நான் தயாராக இருக்கிறேன்."

பிறகு ராணி பெனிலோப்பியா, அந்த வில்லை எடுத்துக் கொண்டு போய் அங்கிருந்த விருந்தாளிகள் ஒவ்வொருவரிடமும் கொடுக்குமாறு யூமியோஸிடம் கூறினாள். வில்லைக் கையில் வாங்கியபோது அவனும் ராணியுடன் சேர்ந்து கண்ணீர் உகுக்கத் தொடங்கினான். இதைக் கவனித்த ஆன்டினூஸ், அவர்கள் இருவரையும் கடுமையாகத் திட்டியபடி பேசினான்:

"எதையும் பகுத்தறிந்து கொள்ள முடியாத, முன் யோசனையற்ற மடக் கழுதைகள்! பெண்கள் தங்களது

உணர்வுகளை வெளிப்படுத்தக்கூடிய இடமா இது? நீங்கள் எதற்காக ராணியின் மனத்தை வீணாக நெகிழச் செய்கிறீர்கள்? ஏற்கெனவே கணவரை இழந்துவிட்ட சோகத்தால் மிகவும் சோர்ந்து போயிருக்கிறார். அவரை மேலும் ஏன் அழவிடுகிறீர்கள்? ஒன்று அவர் அமைதியாக அடங்கி இருக்கட்டும். அல்லது அவர் இங்கிருந்து வெளியேறட்டும். போட்டி எங்களுக்கு இடையில்தானே? உங்களுக்கு இதில் என்ன பங்கிருக்கிறது?

அவ்வளவு பெரிய வில்லை நாண் ஏற்றுவது சுலபமான காரியமாக எனக்குத் தோன்றவில்லை. ஒடிஸியஸின் அளவுக்குச் சக்தி வாய்ந்தவர் யாராவது இங்கு இருக்கிறார்களா என்ன?" என்றும் கேட்டான்.

இப்படியெல்லாம் பேசினாலும், அந்தப் போட்டியில் தான் நிச்சயமாக வெற்றிபெற்று விடுவோம் என்றுதான் அவனும் நம்பினான். இதையெல்லாம் கவனித்த டெலமாக்கஸ் ஒரு பைத்தியக்காரனைப்போல் அலறினான்:

"எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது. எல்லாவித நற்குணங்களும் நிரம்பிய, அன்பான என்னுடைய தாயார் இந்த வீட்டை நிரந்தரமாகப் பிரிந்து செல்லப்போகிறார். வேறு ஒருவரைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறார். நானோ, கொஞ்சமும் பொறுப்பு இல்லாமல் சிரித்து விளையாடிக் கொண்டிருக்கிறேன். எல்லோரும் எனக்கு முன்னால் வாருங்கள். உங்களுக்கு விருப்பமான உயர்ந்த பரிசுப் பொருள் இதோ உங்களுக்கு எதிரிலேயே உள்ளது. இங்கோ அல்லது வெளிநாடுகளிலோ இதே மாதிரி நற்குணங்கள் நிரம்பிய ஒரு பெண்மணியை உங்களால் கண்டுபிடிக்க முடியுமா? முடியாது என்று உங்களுக்கே தெரியும்.

நீங்கள் உடனே வந்து வில்லில் நாணேற்றுங்கள். கொஞ்சம் இருங்கள்... நான் ஒரு தடவை முயற்சி செய்து பார்க்கிறேன். நான் வெற்றி பெற்றால் எனது பெருமிதத்துக்கு உரிய தாயார், வேறு ஒருவரைத் திருமணம் புரிந்து கொண்டு, இந்த அரண்மனையிலிருந்து வெளியேற வேண்டும் என்ற பயமே எனக்கு ஏற்படாதே.

மதிப்பும் மேன்மையும் வாய்ந்த இந்த அரண்மனையைப் பராமரிக்கவும், நிர்வகிக்கவும் என்னாலும் முடியும்! என்ற டெலமாக்கஸ் ஒரு தடவை அதைச் சோதித்துப் பார்க்க விரும்பினான்.

அவன் தரையில் ஒரு நீண்ட கோடுபோட்டு அதன் மீது பன்னிரண்டு மூங்கில் குழாய்களை வரிசையாக நிற்க வைத்தான். பிறகு நாணேற்ற மூன்று முறை அவன் முயற்சி செய்தாலும், ஒடிஸியஸ் ரகசியமாகச் சைகை செய்ததால், டெலமாக்கஸ் அந்த முயற்சியிலிருந்து பின்வாங்கினான். பிறகு காத்திருக்கும் மற்றவர்களைப் போட்டியில் கலந்து கொள்ள அழைத்தான்.

முதலில் வந்தவன் *வினிட்போஸ் ஈனோப்ஸின்* மகனான *லியோடிஸ்*தான். அவனால் அந்த வில்லை வளைக்கக்கூட முடியவில்லை. மற்றவர்கள் அதன் மீது கொழுப்பைத் தடவிச் சூடாக்கி வளைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். உடனே ஒடிஸியஸ், ஆட்டிடையனான ஃபிலியோஷ்யஸையும், பன்றி மேய்ப்பவனான யூமியோஸையும் அழைத்துக் கொண்டு அங்கிருந்து வெளியேறினான். முற்றத்தைக் கடந்து வெளிவந்ததும் ஒடிஸியஸ் அவர்களிடம் சொன்னான்:

"நான் உங்கள் இருவரிடமும் ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டியுள்ளது. ஒடிஸியஸ் சட்டென்று இப்போது இங்கு வந்துவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்? அவருடன் சேர்ந்து கொள்வீர்களா அல்லது இந்தக் கூட்டத்தாரோடு சேர்ந்து கொள்வீர்களா?"

உடனே அவர்கள் இருவரும் ஒடிஸியஸ் அங்கு வந்து சேரவேண்டுமென்று ஸியூஸ் தேவனிடம் பிரார்த்தனை செய்தனர். "இந்தக் கடைசி நிமிடத்திலாவது ஏதாவது ஒரு தேவன், அவரை இங்கு கொண்டு வந்து சேர்ந்தால், எங்களது வல்லமையை, விருந்தாக வந்திருக்கும் தீயவர்கள் உணர்வார்கள்!"

அவர்கள் இருவரும் நம்பிக்கைக்கு உரியவர்களும், நேர்மையானவர்களும்தான் என்பது ஒடிஸியஸுக்கு விளங்கியது.

எனவே, தான் யார் என்ற உண்மையை ஒடிஸியஸ் அவர்களிடம் உடனேயே வெளியிட்டான். அதற்கு ஆதாரமாகத் தனது கணுக்காலிலிருந்த காயவடுவை அடையாளம் காட்டினான். அவர்கள் அவனைக் கட்டிப்பிடித்து இடைவிடாமல் முத்தமழை பொழிந்தனர். அவர்களால் தங்களது மகிழ்ச்சிக் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஒடிஸியஸும் எல்லாவற்றையும் மறந்துவிட்டு அவர்களைக் கட்டியணைத்தான். பிறகு அவர்களிடம் சில யோசனைகள் தெரிவித்தான்.

"அந்த வில்லையும், அம்புகளையும் நான் கேட்பேன். ஆனால், விருந்தாளிகள் எனக்குத் தரக்கூடாது என்று எதிர்ப்புத் தெரிவிப்பார்கள். அப்போது யூமியோஸ் ஹாலுக்கு வந்து வில்லை எடுத்து என் கையில் தரவேண்டும். அதன் பின் வீட்டுக்குள் நுழைந்து பெண்மணிகளையெல்லாம் அவரவர்களின் அறைக்குள் நுழைந்து கொண்டு கதவைத் தாழிட்டுக் கொள்ளுமாறு சொல்லவேண்டும். இங்கு என்ன சத்தம் கேட்டாலும் அறையை விட்டு வெளியே வரக்கூடாது என்று கண்டிப்பாக அவர்களிடம் சொல்ல வேண்டும். அதே நேரம் ஃபிலியோஷ்யஸ் வெளிப்பக்கம் சென்று நிலைவாசல் கதவை மூடி பெரிய வடக்கயிறால் இறுக்கமாகக் கட்டிவிட வேண்டும்!"

சொல்லி முடித்த உடனேயே ஒடிஸியஸ் நேராக ஹாலுக்குள் நுழைந்தான். மற்ற இருவரும் சற்று நேரத்துக்குப் பிறகு வந்து சேர்ந்தனர். அவர்கள் வந்து சேரும்போது யூரிமாக்கஸ் வில்லை வளைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். வில்லின் மீது கொழுப்பைத் தடவி, சூடுபடுத்தி மீண்டும் மீண்டும் முயற்சி செய்தான். இருந்தாலும் வில்லை வளைக்கக்கூட முயவில்லை. உடனே முன்னால் வந்த ஆன்டினூஸ் சொன்னான்:

"இன்று ஸியூஸ் தேவனின் பேரால் கொண்டாட்டங்களும் விருந்தும் நடந்து கொண்டிருக்கும்போது, நாம் இந்த வில்லை வளைக்க முயற்சி செய்து நேரத்தை வீணாக்க வேண்டாம். அதெல்லாம் கிடக்கட்டும். நாம் இப்போது தேவதைகளுக்கு அர்ச்சனை செய்யலாம். அப்போலோ தேவனுக்கும், அவரது

புனிதமான வில்லுக்கும் நிவேதனம் செய்தால், நம்மால் இந்த வில்லை வளைக்க முடியும்!"

எல்லோரும் இந்த யோசனையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டனர். உடனே எழுந்து நின்ற ஒடிஸியஸ் வில்லை வளைத்து நாணேற்றத் தனக்கும் ஒரு வாய்ப்புத் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டான். ஆன்டினூஸ் தன்னிலை மறந்து ஒடிஸியஸைக் கண்டபடி திட்டி, கேலி செய்யத் தொடங்கினான். இதைச் செவிமடுத்த பெனிலோப்பியா ஒடிஸியஸை ஆதரித்துப் பேசினாள்.

"அவர் இந்தப் போட்டியில் வெற்றி பெற்றால், அவருக்குத் தேவையான பரிசுகளை வழங்குகிறேன்!" என்றாள்.

அதுவரை மௌனமாக இருந்த டெலமாக்கஸ், "யார் போட்டியிட வேண்டும் என்று தீர்மானிக்கும் உரிமை என்னைச் சேர்ந்தது!" என்றான். "அந்த வில்லையும் அம்பையும் அவருக்கே பரிசளித்தால்கூட யாரும் கவலைப்படத் தேவையில்லை" என்றான். கூடவே பெண்கள் இதில் தலையிட வேண்டாம் என்றும், அம்மா அவரது அறைக்குப் போய் சொந்த வேலைகளைப் பார்க்கலாம் என்றும் கேட்டுக் கொண்டான்.

டெலமாக்கஸின் தைரியமான வார்த்தைகள், பெனிலோப்பியாவை ஆச்சரியப்படுத்தின. அவள் தனது அறைக்குள் நுழைந்த உடனேயே, அதீனிதேவி அவளைத் தீவிரமான உறக்கத்தில் ஆழ்த்தினாள்.

யூமியோஸ் வில்லைத் தூக்கத் தொடங்கியதும் எதிர்ப்புக் குரல்கள் கிளம்பின. அவனைக் கொன்று விடுவதாகக்கூட மிரட்டினர். உடனேயே அவன் வில்லைக் கீழேயே வைத்து விட்டான். ஆனால், டெலமாக்கஸின் கடுமையான வார்த்தைகளும், மிரட்டலும் அவனை மீண்டும் வில்லை எடுக்கத் தூண்டியது. ஒருவாறாக வில்லை எடுத்து ஒடிஸியஸின் கையில் கொடுத்தான். பிற்பாடு அவர்கள் இருவரும் தங்களிடம் ஒப்படைத்த வேலையைக் கச்சிதமாக நிறைவேற்றினர்.

ஒடிஸியஸ் முதலில் வில்லை மேலும் கீழுமாகப் பார்த்தான். பின்பு நெடுநாள் பழகிய ஒரு வில்வீரனைப் போல், அந்த வில்லை மிகவும் சுலபமாக எடுத்து நாணேற்றி மூங்கில் குழாய்களின் ஊடாக அம்பை எய்துவிட்டான். ஸியூஸ் அப்போது கடுமையான முழக்கத்துடன் இடியோசையை எழுப்பினார். சுபமான ஒரு சகுனத்தால் ஒடிஸியஸின் மனம் மகிழ்ச்சியடைந்தது. அவன் இதுதான் தருணமென்று ரகசியமாகச் சைகை செய்தான். உடனே டெலமாக்கஸ் கூர்மையான தன்னுடைய வாளை உறையில் எடுத்துப் போட்டுக்கொண்டு, வேலுடன் அப்பாவை நெருங்கினான்.

அப்போது ஹாலில் விருந்துக்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன.

# XXII

அந்த விநாடியிலேயே ஒடிஸியஸ் தான் போர்த்தியிருந்த கிழிசல் துணியை அவிழ்த்தான். பெரிய வில்லையும் ஏராளமான அம்புகள் உள்ள அம்பறாத்தூணியையும், எடுத்துக் கொண்டு வாசல் பக்கமாக விரைந்தான். அம்புகளைத் தரையில் வரிசையாக வைத்த பிறகு உரத்த குரலில் சொன்னான்:

"இப்படியாக அந்தப் போட்டி முடிவடைந்தது. இனி வேறொரு லட்சியம் மீதமாக உள்ளது. அதிலும் எனக்கு வெற்றியை அளிக்கு மாறு நான் இதோ அப்போலோ தேவனிடம் பிரார்த்திக்கிறேன்."

இதைச் சொல்லி முடித்த வேகத்திலேயே கண்மூடித் திறப்பதற்குள் கூர்மையான அம்பு ஒன்றை ஆன்டினூஸை நோக்கி எய்தான் ஒடிஸியஸ். அது அவனது கழுத்தைத் துளைத்துக் கொண்டு பாய்ந்தது. அந்த விநாடியிலேயே ஆன்டினூஸ் முன்புறமாகக் குப்புற விழுந்தான்.

அவன் இறந்து விழுந்ததுமே மற்றவர்கள் திகைப்புடனும் பயத்துடனும் முன்புறமாக ஓடினர். அதைப் பொருட்படுத்தாத ஒடிஸியஸ் கோபம் நிறைந்த கண்களுடன் அலறினான்:

"நாய்களே, நான் டிராய் நகரிலிருந்து ஒருபோதும் திரும்பி வரமாட்டேன் என்று நீங்கள் நினைத்தீர்கள். அதனால் நீங்கள் என்னுடைய சொத்துகளை ஊதாரித்தனமாகச் செலவழித்தீர்கள். பலவந்தமாக அரண்மனைக்குச் சுற்றிலும் வசிக்கும் பெண்களுடன் உறவு கொண்டீர்கள். நான் உயிரோடு இருக்கும் போதே என் மனைவியிடம் திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டுகோள் வைத்துத் தொல்லைப் படுத்தினீர்கள். தேவர்களுக்குக் கொஞ்சமும் பயப்படாமல், மனிதனின் இதயத்திலிருந்து கிளம்பும் சாபத்தையும் பொருட்படுத்தாமல் நீங்கள் இந்தப் பைசாசிகச் செயல்களை நடத்தினீர்கள். அவற்றுக்கெல்லாம் தண்டனையாக இதோ மரணக் கயிற்றால் நான் உங்களை ஒட்டுமொத்தமாகப் பிணைக்கிறேன்."

பயத்தால் எல்லோரது உடல்களும் நடுங்கின. யூரிமாக்கஸ் மட்டும் அவர்களது மொத்தப் பேரின் உயிருக்காகவும் விண்ணப்பித்தான். ஆனால், 'யாரும் இதிலிருந்து தப்பிக்க முடியாது' என்று ஒடிஸியஸ் உரத்த குரலில் பிரகடனம் செய்தான். இறுதிக்கட்ட முயற்சி என்ற முறையில், எல்லோருமாக ஒன்று சேர்ந்து, ஒடிஸியஸை ஒட்டுமொத்தமாக எதிர்க்கலாம் என்று யூரிமாக்கஸ் யோசனை கூறினான்.

வாசல் படியிலிருந்து ஒடிஸியஸைக் கீழே தள்ளிவிட்டு, நகருக்குள் உள்ள மக்களைக் கிளப்பிவிட நினைத்த அவனது முயற்சியும் கடைசியில் தோல்வியடைந்தது. ஒடிஸியஸ் எய்த அம்பு அவனது நெஞ்சைப் பிளந்தது. மறுவிநாடி ஆம்ஃபினோமஸ் உருவிய வாளுடன் வெளியேற முயன்றான். இதை உணர்ந்த டெலமாக்கஸ் அவனது கையில் தன்னிடம் இருந்த வேலைப் பாய்ச்சினான். அதன் கூர்மையான முனை அவனது நெஞ்சைத் துளைத்துக் கொண்டு முதுகின் வழியாக

வெளியேறியது. அவனும் தரையில் விழுந்தான். டெலமாக்கஸ் தனது தந்தையிடம் விரைந்து, மேற்கொண்டு ஆயுதங்கள் எடுத்து வரட்டுமா என்று கேட்டான்.

"என் கையிலுள்ள அம்புகள் தீர்வதற்குள் ஆயுதங்களை எடுத்து வா!" ஒடிஸியஸ் கட்டளையிட்டான். டெலமாக்கஸ் ஆயுத சாலையை நோக்கி விரைந்தான். தேவையான ஆயுதங்களுடன் ஓடிவந்தான். டெலமாக்கஸுடன் நம்பிக்கைக்கு உரிய இரண்டு ஊழியர்களும் ஆளுக்கொரு ஆயுதத்தை எடுத்துக் கொண்டு வந்து ஒடிஸியஸின் பக்கம் சேர்ந்து கொண்டனர்.

அம்புகள் தீர்வது வரையில் ஒடிஸியஸ் எதிரிகளை வரிசையாக வீழ்த்திக் கொண்டிருந்தான். பிறகு வில்லைச் சுவரில் சாத்தி வைத்த பிறகு மார்புக் கவசத்தையும் தலைக் கவசத்தையும் அணிந்து கொண்டு இரண்டு கைகளிலும் வேல்களை ஏந்தினான்.

அங்கிருந்து வெளியேறுவதற்கு எந்த வழியும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்ட மெலந்தியோஸ் நேராக ஆயுத சாலைக்குச் சென்றான். பன்னிரண்டு கவசங்கள், வேல்கள், தலைக் கவசம், போன்றவற்றை எடுத்துக் கொண்டு வந்தான். சட்டென்று அவற்றை அங்கிருந்த தனது நண்பர்களிடம் கொடுத்தான்.

டெலமாக்கஸ் ஆயுதசாலையின் கதவுகளை மூட மறந்து விட்டிருந்தான். மெலந்தியோஸ் மீண்டும் ஆயுதங்களை எடுத்து வருவதற்காக ஓடும்போது யூமியோஸ் அவனைக் கவனித்து விட்டான். அவனை ஒரு பலகையுடன் கைகால்களைச் சேர்த்துக் கட்டிவிட்டு, கயிறின் ஒரு முனையை மேற்புற உத்திரக் கட்டை மீது தொங்கவிடுமாறு ஒடிஸியஸ் தன்னுடைய இரண்டு வேலைக்காரர்களிடமும் கட்டளையிட்டான். அவர்கள் அதை, அப்படியே நிறைவேற்றினர்.

அப்போது அதீனிதேவி மென்டாரின் வடிவில் அங்கு வெளிப்பட்டாள். ஒடிஸியஸ், தேவியை உடனேயே அடையாளம் தெரிந்து கொண்டான். தனக்கு அருகில் நிற்குமாறு அவன்

கேட்டுக்கொண்டான். ஆனால், மீதமிருந்த எதிரிகள் மென்டாரை மிரட்டியும், திட்டியும் விலக்கப் பார்த்தனர். மிகவும் தைரியசாலிகளான ஆறுபேர் மட்டுமே மீதமிருந்தனர். அவர்கள் வாழ்வா சாவா என்று போராடிப் பார்க்கவே விரும்பினர். ஆறுபேரும் ஒன்றாகச் சேர்ந்து ஒடிஸியஸின் மீது வேலை எறிந்தார்கள். அதீனி அவற்றையெல்லாம் குறி தவறச்செய்தாள்.

ஒடிஸியஸ் *டெமோட்டானிமாஸின்* நெஞ்சிலும், டெலமாக்கஸ் யூரியாடெஸின் நெஞ்சிலும் வேலைப் பாய்ச்சினர். யூமியோஸ் *இலேட்டோஸையும்*, ஃபிலியோஷ்யஸ் *பிஸான்ட்ரோஸையும்* எமனுலகுக்கு அனுப்பி வைத்தனர். அதன் பிறகு மீதமிருந்தவர்கள் அந்த ஹாலின் மூலையில் தஞ்சம் அடைந்தனர். எதிரிகளிட மிருந்து வந்த வேல்களை அதீனிதேவி மீண்டும் குறிதவற வைத்துக் கொண்டிருந்தாள். உடனேயே ஒடிஸியஸ் யூரிடாமஸையும், டெலமாக்கஸ் ஆம்ஃபிமெடோனையும், யூமியோஸ் பாலிபாஸையும் கொன்று வீழ்த்தினர். கடைசியில் அந்த இடையன் தனது வேலை, டெஸிபோஸின் நெஞ்சில் பாய்ச்சினான்.

மீண்டும் ஒடிஸியஸ் டமஸ்ட்ரோஸியஸையும், டெலமாக்கஸ் *லியோகிரிட்டஸையும்* வீழ்த்தினர். சட்டென்று அதீனிதேவி பளபளப்பான ஒரு கவசத்தை எடுத்து அவருக்கு நேராகப் பிடித்தாள். எதிரிகள் பயந்து நடுங்கி அங்கும் இங்குமாக ஓடும்போது கண்ணை மூடிக்கொண்டு ஒடிஸியஸும், டெலமாக்கஸும் அவர்களை வெட்டி வீழ்த்தினர்.

ஜோதிடரான *லியோடிஸைக்கூட* விட்டுவிடவில்லை. ஆனால், அவர்கள் பலாத்காரமாகக் கொண்டுவந்த ஃபீமியஸ் என்ற பாடகனையும், டெலமாக்கஸைப் பராமரித்த படைத்தலைவனான மெடோனையும், டெலமாக்கஸின் வேண்டுகோளை ஒட்டி ஒடிஸியஸ் கொல்லாமல் விட்டுவிட்டான்.

யாராவது அங்கு ஒளிந்திருக்கிறார்களா என்று ஒடிஸியஸ் ஹால் முழுவதும் தேடிப் பார்த்தான். பிறகு யூரிக்லியாவை அழைத்து முறை தவறி நடந்து கொண்ட பெண்களை அழைத்து வருமாறு கூறினான். அவர்கள் வந்து சேர்ந்ததும், அவர்களைக்

கொண்டே பிணங்களை அப்புறப்படுத்திவிட்டு அந்த இடத்தைக் கழுவிச் சுத்தப்படுத்து மாறு கூறினான். பிறகு டெலமாக்கஸ் அவர்களது கழுத்தில் கயிறைப் போட்டுக் கொன்றான்.

மெலந்தியோஸின் ஒவ்வோர் அவயவங்களையும் வெட்டிக் கொன்றார்கள். அந்த ஹால் முழுவதும் கந்தகத்தைப் புகைபோட்ட பிறகு பெனிலோப்பியாவை அழைத்துக் கொண்டு வருவதற்கு யூரிக்லியாவை அனுப்பிவைத்தான் ஒடிஸியஸ்.

யூரிக்லியா, பெனிலோப்பியாவின் அறையைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்து அவளை எழுப்பி நடந்ததையெல்லாம் கூறினாள். உடனே பெனிலோப்பியா தனது தோழிகளுடன் ஹாலுக்கு ஓடிவந்தாள். பெண்கள் எல்லோரும் கண்ணீரைச் சொரிந்து தங்களது மனத்தின் உணர்வை வெளிப்படுத்தினார்கள்.

# XXIII

பெனிலோப்பியாவால் அந்தச் செய்தியை நம்ப முடியவில்லை. யூரிக்லியா தன்னைக் கேலி செய்வதாகக்கூட முதலில் நினைத்தாள். பிறகு ஒடிஸியஸின் காலில் தான் கண்ட அடையாளத்தையும், அதை வெளியிடக்கூடாதென்று அவன் அப்போது எச்சரித்ததையும் அவள் வெளிப்படுத்தினாள்.

"சீக்கிரமாக வாருங்கள்... அவர் கணப்பு அடுப்பின் அருகே உட்கார்ந்திருக்கிறார்." யூரிக்லியா அவசரப்படுத்தினாள்.

திகைப்புடன் ஓடிவந்த பெனிலோப்பியாவுக்கு உடனடியாக என்ன செய்வதென்று தெரியவில்லை. வந்தவள் ஒடிஸியஸின் இருக்கைக்கு நேராகச் சுவரில் சாய்ந்து நின்றாள். சற்று நேரம் மௌனமாக இருந்த டெலமாக்கஸ், பொறுமையிழந்து கோபத்துடன் கேட்டான்:

“என்னம்மா அப்படியே நின்று கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் இதயம் என்ன கருங்கல்லால் ஆனதா? ஏன் அப்பாவிடமிருந்து இவ்வளவு தொலைவில் நிற்கிறீர்கள்? பக்கத்தில் போய் ஏதாவது பேசுங்கள். இருபது வருடங்களுக்குப் பிறகு எவ்வளவோ ஆபத்துகளைக் கடந்து வந்திருக்கிறார். இப்படி வந்து சேர்ந்திருக்கிற ஒரு கணவரை வேறு எந்த மனைவியாவது இவ்வளவு அலட்சியமாக வரவேற்பார்களா? உங்களது இதயம் எப்போதுமே எஃகு இரும்பு போல் கடினமானதுதான். இப்போதும் அது அப்படித்தான் இருக்கிறது.”

அப்போதும் சந்தேகம் விலகாத பெனிலோப்பியா அதற்குப் பதிலளித்தாள்: “அன்பு மகனே, என் இதயம் அசைவற்றுப் போயிருக்கிறது. அவரிடம் பேசவோ, கேள்விகள் கேட்கவோ, ஏன் நேருக்கு நேராகப் பார்க்கவோகூட என்னால் முடியவில்லை. அவர் உண்மையிலேயே ஒடிஸியஸாக இருந்தால், இதுவும் அவரது சொந்த வீடாக இருந்தால், எனக்கும் அவருக்கும் மட்டுமே தெரிந்த சில ரகசியங்கள் உள்ளன.”

ஒடிஸியஸ் புன்னகை புரிந்தவாறு டெலமாக்கஸிடம் சொன்னான்: “டெலமாக்கஸ், உன் அம்மாவைத் தனிமையில் விடு. அவர், எப்படி வேண்டுமானாலும் என்னைச் சோதித்துக் கொள்ளட்டும். நாம் உடனடியாக நமது உயிரைக் காப்பாற்றும் முயற்சிகளில் ஈடுபடுவோம். எல்லோரும் குளித்துவிட்டுப் புத்தாடை அணிய வேண்டும். நமது அரண்மனைப் பாடகன் பாட்டுப் பாடத் தொடங்கட்டும். ஆண்களும் பெண்களும் நடனம் ஆடட்டும். இங்கு ஒரு திருமணம் நடப்பதாகக் குடிமக்கள் நினைக்கட்டும். நாம் காட்டுக்குப் போய்ச் சேர்வது வரையில் எந்தத் தகவலையும், யாரிடமும் சொல்ல வேண்டாம். பிறகு நடப்பதை, அப்போது கவனித்துக் கொள்ளலாம்!”

ஒடிஸியஸ் கேட்டுக் கொண்டவாறே எல்லாம் நடந்தன. அங்கு பெனிலோப்பியாவின் திருமணம் நடப்பதாகவே குடிமக்கள் நினைத்தனர். அந்த அரண்மனைக்குள் யூரினோமி, ஒடிஸியஸைக்

குளிப்பாட்டி, வாசனைத் தைலங்கள் பூசி, புத்தாடைகள் அணிவித்தாள். அப்போது ஒடிஸியஸ் தங்கத்தால் செய்த ஒரு சிலை போல் தகதகத்தான். பிறகு பெனிலோப்பியாவுக்கு நேர் முன்னால் உட்கார்ந்தபடி பேசத் தொடங்கினான்:

"பெனிலோப்பியா, கடவுளின் திருவிளையாடல்கள் உன் இதயத்தை வெறுமையாக்கி விட்டிருக்கின்றன. கடந்த இருபது வருடங்களாக நிரந்தரமாகத் துன்பங்கள் அனுபவித்த பிறகு மறுபிறவி எடுத்ததுபோல் வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்திருக்கிற ஒரு கணவனை, எந்த ஒரு மனைவியும் இவ்வளவு தொலைவில் வைத்திருக்க மாட்டாள். சரி, என் படுக்கையை விரி. நான் தனியாகவே படுத்துக் கொள்கிறேன். பெனிலோப்பியாவின் இதயம் இரும்பினால் ஆனதுதான். ஒப்புக் கொள்கிறேன். அதில் எந்த விதமான சந்தேகமும் இல்லை!"

உடனே பெனிலோப்பியா பதிலளித்தாள்: "அதிசயத்துக்குரிய மனிதரே, எனக்கு எந்தவிதமான ஆணவமும் கிடையாது. ஆனால், இதாக்காவில் இருந்து பயணம் புறப்பட்டபோது, நீங்கள் எப்படி இருந்தீர்கள் என்று எனக்குத் தெரியும். யூரிக்லியா, அவர் கட்டிய இந்த அரண்மனையில், வெளிப்புறமாக அவருக்குப் படுக்கை போட்டுக்கொடு! ம்... சீக்கிரமாக நடக்கட்டும்!"

இந்த வார்த்தைகள் ஒடிஸியப் பொறுத்த வரையில் எதிர்பாராத ஒரு தாக்குதலாக இருந்தன. எனவே கடுமையான கோபத்துடன் அவன் பேசினான்: "பெனிலோப்பியா, உன்னுடைய வார்த்தைகள் என் இதயத்தைப் பிளக்கிறது. யாரால், என்னுடைய கட்டிலை அசைக்க முடிந்திருக்கிறது? கடவுளே நேரடியாக பூமிக்கு இறங்கி வந்தால் மட்டுமே அது சாத்தியம்! எவ்வளவுதான் வலுக்கொண்டவரானாலும் அதைச் செய்ய முடியாது. அந்தக் கட்டிலைப் பொறுத்தவரை ஒரு ரகசியம் உள்ளது. அது நானே உருவாக்கியது. மற்ற எவரது கையும் அதைத் தொட்டதுகூட இல்லை. ஒரு ஆலிவ் மரத்துக்கு அருகில்தான் நான் அதை வடிவமைத்தேன். நானாகவே என் கைகளால் அதன் மேற்கூரையை அமைத்தேன். மரத்தின் கிளைகளை வெட்டி, உருளைகளாக்கிப் பளபளப்பாக இழைத்திருக்கிறேன். அதை

ஆலிவ் மரத்துடன் இணைத்துத்தான் சட்டங்களைப் பொருத்தியிருக்கிறேன். அதன் மீது பலகைகள் போட்டு, தங்கம், வெள்ளி மற்றும் தந்தங்களால் பூவேலை செய்திருக்கிறேன். இதுதான் அந்தக் கட்டிலைப் பற்றிய ரகசியம்!"

பெனிலோப்பியா தோல்வியடைந்தாள். தனக்கும் தன் கணவருக்கும் மட்டுமே தெரிந்த அந்த ரகசியத்தை அவன் வெளியிட்ட போது, அவளால் தனது மனத்தின் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. கதறியழுதபடி ஒடிஸியஸை நோக்கிப் பாய்ந்து வந்து, இரண்டு கைகளாலும் அவனது கழுத்தைக் கட்டிக் கொண்டு, அவனது தலையில் இடைவிடாது முத்தமிட்டாள். பிறகு நெகிழ்ச்சியடைந்த குரலில் பேசத் தொடங்கினாள்:

"அன்பு நிறைந்தவரே... தயவுசெய்து என்னைக் கோபிக்காதீர்கள். நீங்கள் எப்போதும் அன்பும், கருணையும் நிறைந்தவர்தான். இளம்பருவத்தினரான நாம் பரஸ்பரம் அன்புடனும், செல்வச் செழிப்புடனும் வாழ்ந்ததைத் தேவர்களால் கூடத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதனால்தான் அவர்கள் நம்மை இத்தனை காலமாகப் பிரித்து வைத்து, வேதனைகளையும் துயரங்களையும் மட்டுமே வழங்கினார்கள். நீங்கள் என்மீது கோபப்படவோ, வெறுப்புக் கொள்ளவோ கூடாது. ஏதாவது ஒரு பாவி, கட்டுக்கதையுடன் வந்து என்னை ஏமாற்றி விடுவானோ என்று நான் எப்போதும் பயந்து கொண்டே இருந்தேன். அதனால் தான் நடந்தது எதையும் என்னால் நம்பமுடியவில்லை! ஆனால், நமது கட்டிலைப் பற்றிய ரகசியத்தை நீங்கள் வெளியிட்டபோது, என்னுடைய சந்தேகங்கள் எல்லாம் சுத்தமாக மறைந்துவிட்டன."

இந்த வார்த்தைகள் ஒடிஸியஸின் இதயத்தை நெகிழச் செய்தன. இந்த அளவுக்கு அன்பும், களங்கத்தைக் கண்டு பயப்படுபவளையும் மனம்நோக வைத்ததற்காக சுயமாக வருந்தினான். அவளை மார்புறத் தழுவிக்கொண்டு, முத்த மிட்டவாறே கண்ணீர் சிந்தினான். இந்தக் கட்டத்தில் பெனிலோப்பியா, மகிழ்ச்சியின் இன்பத் திளைப்பில் உலகையே மறந்துவிட்டிருந்தாள். அவள் தனது கணவனின் கழுத்தைச்

சுற்றிக் கைகளைப் போட்டுக் கொண்டு அவனை இறுக அணைத்தாள். இரக்கம் நிறைந்தவளான அதீனிதேவி, அவர்களுக்காக இரவுப் பொழுதை நீட்டித்துக் கொடுத்தாள்.

தனது சொந்த அரண்மனைக்குத் திரும்பி வந்து, எதிரிகளைக் கொன்று அடக்கிய பிறகு, தான் செய்ய வேண்டி உள்ள எதிர்காலச் செயல்கள் குறித்தும், *டிரீஸியாஸின்* ஆவி கூறிய ஆருடம் குறித்தும் பெனிலோப்பியாவிடம் கூறினான் ஒடிஸியஸ். புத்திசாலியான பெனிலோப்பியா எல்லாம் நல்லபடியாக நடக்கப் பிரார்த்தனை செய்ததுடன் அவனுக்கு உற்சாகமும் ஊட்டினாள்.

அதற்குள் யூரினோமியும், யூரிக்லியாவும் தீப்பந்தங்களின் வெளிச்சத்தில் ஒடிஸியஸும், பெனிலோப்பியாவும் படுத்துக் கொள்வதற்கான கட்டிலைச் சுத்தப்படுத்தி விரித்தனர். பிறகு அதே தீப்பந்தத்தை எடுத்துக் கொண்டுவந்து, அந்தத் தம்பதியை அழைத்துச் சென்று அவர்களது படுக்கை அறையில் விட்டுச் சென்றனர். தங்களது படுக்கையை அடைந்தபோது அந்தத் தம்பதியின் இதயங்கள் உணர்ச்சிகளால் முறுக்கேறி இருந்தன.

நடனம் ஆடிக்கொண்டிருந்த பெண்களையெல்லாம் அனுப்பிவிட்ட பிறகு டெலமாக்கஸ் தனது படுக்கை அறைக்குள் நுழைந்தான்.

அந்த அரண்மனை மொத்தமும் இருளில் மூழ்கியது. நீண்ட காலத் துயரங்களுக்குப் பிறகு ஒன்றிணைந்த ஒடிஸியஸும், பெனிலோப்பியாவும் மகிழ்ச்சியால் புளகாங்கிதம் அடைந்தனர். இருவரும் பரஸ்பரம் தங்களது கடந்தகாலக் கதைகளைப் பரிமாறிக் கொண்டனர். பிறகு சுகமான தூக்கத்தில் ஆழ்ந்தனர்.

அவர்களுக்காக இரவை நீட்டித்துத் தந்த அதீனிதேவி, பிறகு விடியற்காலைத் தேவதையான ஓஷியானஸை, கடலிலிருந்து வெளியேற அனுமதித்தாள்.

ஒடிஸியஸ் தனது மென்மையான படுக்கையில் எழுந்து உட்கார்ந்து, தனது மனைவியிடம் சொன்னான்: "அன்புக்குரிய பெனிலோப்பியா, நாம் மனிதர்கள் அனுபவிக்க வேண்டிய துயரங்களைக் காட்டிலும் அதிகமாகவே அனுபவித்துவிட்டோம். இதோ, இப்போது நாம் நீண்ட நாட்களாக விரும்பியபடி, இதே படுக்கையறையில் ஒன்றாக இணைய ஸியூஸ் தேவனும், ஆகாயத்திலுள்ள என்றென்றும் அழியாத தேவர்களும் நமக்கு அருள் புரிந்திருக்கிறார்கள். மேற்கொண்டு நீ செய்ய வேண்டியது என்னவென்றால், இந்த அரண்மனை மற்றும் சொத்துகளுக்குப் பொறுப்பேற்று நிர்வகிக்க வேண்டும். நமது எதிரிகளால் சூறையாடப்பட்ட சொத்துகளைத் திரும்பப்பெறும் கடுமையான பொறுப்பு எனக்காகக் காத்திருக்கிறது. ஆனால், இவை எல்லாவற்றையும்விட என்னைப் பிரிந்து, பிரிவுத் துயரில் வாடும் வயதான என் அப்பாவை நான் பார்க்க வேண்டும்.

நீ எல்லாக் காரியங்களிலும் மிகவும் கவனம் செலுத்துபவள் என்பதும், புத்திசாலி என்பதும் எனக்குத் தெரியும். இருப்பினும் இதுவரை நடந்து கொண்டது போலவே இனிமேலும் நீ எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும். பொழுது விடிந்த பிறகு நான் இந்த அரண்மனையில் நடத்திய கொடூரமான கொலைகள் பற்றிய செய்தி எல்லாக் குடிமக்களையும் எட்டிவிடும். அதனால் நீ, உன்னுடைய அறையிலேயே தோழிகளுடன் இருந்துகொள். யாரையும் பார்க்க வேண்டாம். எவரிடமும் எதைப்பற்றியும் கேட்காதே!"

விடிந்த பிறகு ஒடிஸியஸ், பெனிலோப்பியாவிடம் விடைபெற்றுத் தனது தந்தையைக் காணப் புறப்பட்டான். டெலமாக்கஸும், நம்பிக்கைக்கு உகந்த இரண்டு வீரர்களும் ஒடிஸியஸுடன் பயணம் செய்தனர். அதீனிதேவியோ, அவர்களை, மற்றவர்களின் கண்களுக்குத் தட்டுப்படாமல் பத்திரமாக நகரத்துக்கு வெளியே கொண்டுபோய் வழியனுப்பி வைத்தாள்.

# XXIV

ஒடிஸியஸின் அரண்மனையில் இறந்துபோன பிரபுக்களின் ஆத்மாக்களை அழைத்துச் செல்வதற்காக *ஸில்லீனியன் ஹெர்மிஸ்* வந்து சேர்ந்தார். ஆவிகளின் உலகில் அகமெம்னன் மன்னன், இதாக்காவில் தன்னை உபசரித்த ஆம்ஃபிமெடோனை அடையாளம் தெரிந்து கொண்டு சட்டென்று கேட்டார்:

"ஆம்ஃபிமெடோன், இளம் பருவத்துடனும், திடகாத்திரமான உடலும் கொண்ட நீங்கள் எல்லோரும் பயங்கரமான இந்த உலகத்துக்கு இவ்வளவு சீக்கிரம் வந்துசேர என்ன காரணம்?"

ஆம்ஃபிமெடோன் அதற்குப் பதில் அளிப்பதுபோல், ஒடிஸியஸின் வீட்டில் நடந்த சம்பவங்களை விவரித்தான். அதன் முடிவில் நேர்ந்த மரணத்தையும் ஒளிக்காமல் குறிப்பிட்டான்.

இதைக்கேட்ட அகமெம்னன் மன்னனின் ஆத்மா, பெனிலோப்பியாவுக்கு கணவர் மீதுள்ள அன்பையும், நம்பிக்கையையும், அவளது திடத்தையும், புத்திசாலித் தனத்தையும், தூய்மையான இதயத்தையும் வானளாவப் புகழ்ந்தார். ஒடிஸியஸின் அதிர்ஷ்டத்துக்காக மகிழ்ச்சியடைந்தார். உலகம் உள்ளவரையில் பெனிலோப்பியாவின் புகழ் நிலைத்திருக்கும் என்றும், அவளைப் பற்றிய பாடல்கள் காலங்களைக் கடந்து நிற்கும் என்றும் ஆசீர்வதித்தார்.

அப்போது ஒடிஸியஸ் தன் மகன் மற்றும் வேலைக்காரர் களுடன் நகர எல்லையைக் கடந்து லெயர்ட்டீஸ் வசிக்கும் கிராமத்தை அடைந்தான். அருகிலிருந்த அவரது வீட்டையும், அதையொட்டி இருந்த குடியானவர்கள் சிலரின் வீடுகளையும் பார்த்தான். எதிரில் தட்டுப்பட்ட குடியானவர்கள் மற்றும் டெலமாக்கஸிடம் சீக்கிரமாக மதிய உணவைச் சமைக்குமாறு

கூறிவிட்டுத் தனியாகத் தனது தந்தையைச் சந்திக்கச் சென்றான். டாலியோஸோ, அவரது மகன்களோ அந்தப் பகுதியிலேயே தட்டுப்படவில்லை. லெயர்ட்டீஸ் ஒரு திராட்சைக் கொடியின் அடிப்பகுதியில் இருந்த மண்ணைக் கிளறிவிட்டுக் கொண்டிருந்தார். அவர் கிழிந்துபோன பழைய உடைகளை அணிந்திருந்தார். தன் மனத்தில் உள்ள துக்கத்தை அழுத்தி அடக்கி வைப்பதற்காகவோ என்னவோ ஆட்டின் தோலால் ஆன கனமான தொப்பி ஒன்றைத் தலையில் போட்டிருந்தார்.

வயதின் முதுமையாலும், தீவிரமான சோகத்தின் தாக்குதலாலும் மிகவும் சோர்ந்து போயிருந்த தனது தந்தையைக் கண்டதும் ஒடிஸியஸின் கண்கள் நிறைந்தன. இருப்பினும் தான் யார் என்ற உண்மையை மறைத்துக் கொண்டு, தள்ளாத இந்த வயதிலும் சேறிலும் சகதியிலும் இப்படி உழன்று கொண்டு ஏன் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டும் என்று பெரியவரிடம் கேட்டான். பிறகு அந்தப் பெரியவர் யார் என்றும், இது இதாக்காவைச் சேர்ந்த பகுதிதானா என்றும் கேட்டான். அதற்குப் பின் இதாக்காவின் லெயர்ட்டீஸ் ஆர்ஸீஸியாடஸின் மகன் தனது விருந்தாளியாக வந்து, தனக்கு நெருங்கிய நண்பனான கதையை விவரித்தான்.

இதையெல்லாம் கேட்டதும் பெரியவரால் கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. உடனே அவர் தனது மகனின் துரதிர்ஷ்ட நிலையை எண்ணிப் புலம்பியழத் தொடங்கினார். இருப்பினும் ஒடிஸியஸிடம் பெரியவர் குசலம் விசாரித்தார். வழக்கம்போல் ஒடிஸியஸ் ஒரு கட்டுக்கதையைச் சொன்னான். அதே நேரம் தனது நண்பனான ஒடிஸியஸ் விலையுயர்ந்த பரிசுப் பொருள்களுடன் இதாவுக்காவுக்கு வந்து சேர்ந்திருப்பதையும் குறிப்பிட்டான்.

மகனைப் பற்றிய நினைவும் பிரிவாற்றாமையும் பெரியவரை மீண்டும் துயரத்தில் ஆழ்த்தின. தன் இரண்டு கைகளாலும் மண்ணை வாரித் தலையில் போட்டுக்கொண்டு அவர் அழத் தொடங்கினார். அப்போது ஒடிஸியஸால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

அப்பாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த ஒடிஸியஸின் பார்வைச் சக்தி குறைந்து கொண்டே வருவதாகவும், தலைசுற்றுவது போலவும் தெரிந்தது. சட்டென்று பாய்ந்த ஒடிஸியஸ், பெரியவரைக் கட்டிப் பிடித்துக் கொண்டு கண்மண் தெரியாமல் முத்தமிடத் 'தொடங்கினான். பிறகு சொன்னான்:

"அன்பான அப்பா, உங்களது மகன் ஒடிஸியஸ் இங்குதான் இருக்கிறான். நான்தான் நீங்கள் தேடும் ஒடிஸியஸ்! இருபது வருடங்களுக்குப் பிறகு நான் என் தாய்மண்ணை மிதித்திருக்கிறேன். இனிமேல் நீங்கள் ஒருபோதும் அழக்கூடாது. வருத்தப்படக்கூடாது! ஆச்சரியமான தகவல் ஒன்றையும் சொல்கிறேன். என்னுடைய அரண்மனைக்கு வந்து நமது சொத்துக்களைச் சூறையாடி, என் மனைவியை அவமானப்படுத்த முயன்றவர்களையெல்லாம் கொன்றுவிட்டுத்தான் இங்கு வந்திருக்கிறேன். அவர்களுக்கு உரிய தண்டனையை வழங்கிவிட்டேன்."

அவன் தனது மகன்தான் என்பதை உறுதிப்படுத்த ஏதாவது அடையாளம் உள்ளதா என்று லெயர்ட்டீஸ், ஒடிஸியஸிடம் கேட்டுக் கொண்டார்.

முதலில் தனது காலிலுள்ள காயவடுவைக் காட்டினான் ஒடிஸியஸ். தொடர்ந்து அப்பாவுக்கு நம்பிக்கை ஏற்படுவதற்காக, அவர் சிறுவயதில் பிரத்தியேகமாகப் பரிசளித்த மரங்களின் பெயர்களைக் குறிப்பிட்டான்: "பதின்மூன்று கொய்யாச் செடிகள், பத்து ஆப்பிள் செடிகள், நாற்பது அத்திமரங்கள், கொத்துக் கொத்தாகக் காய்த்துக் கொண்டிருந்த ஐம்பது முந்திரிக் கொடிகள்... நான் சொன்னதெல்லாம் சரிதானே" என்றான்.

அப்போதும் தனது நினைவில் பசுமையாக நிற்கும் அந்தச் செடிகளின் பெயர்களைச் சொந்த மகன் அவ்வளவு துல்லியமாகச் சொன்னதைக் கேட்டதுமே அவரது இதயம் உணர்ச்சி மிகுதியால் விம்மியது. அவர் தனது இரண்டு கைகளாலும் மகனைக்

கட்டிப்பிடித்து, அந்த வேகத்திலேயே மூர்ச்சையடைந்து கீழே விழவும் செய்தார். சுயநினைவுக்கு வந்தபோது, 'ஒடிஸியஸால் கொல்லப்பட்டவர்களின் உறவினர்கள் சும்மா இருக்க மாட்டார்களே?' என்ற நினைவு அவரைப் பயப்படுத்தியது. அதற்கு ஒடிஸியஸ் தைரியத்துடன் பதில் அளித்தான்:

"நீங்கள் தைரியமாக இருங்கள். இந்த நினைவு உங்களது நிம்மதியைக் குலைக்காமல் இருக்கட்டும். வாருங்கள் நமது வீட்டுக்குப்போய் விருந்து சாப்பிடலாம்!"

வீட்டை அடைந்தபோது டெலமாக்கஸும், ஊழியர்களும் சமையல் வேலைகளை முடித்திருந்தனர். வேலைக்காரர்கள் பெரியவரைக் குளிப்பாட்டி, வாசனைத் தைலங்கள் தடவி, புத்தாடை அணிவித்தனர். அதீனிதேவி அவருக்கு உடலில் தெம்பையும், முகத்துக்குப் புத்தொளியையும் வழங்கினாள்.

அவர்கள் சாப்பிடுவதற்கு அமர்ந்தபோது டாலியோஸும் அவரது மகன்களும் வந்துசேர்ந்தனர். டாலியோஸ் வியப்புடன் ஒடிஸியஸின் கையைப் பிடித்து முத்தமிட்டார். அவரது மகன்களும் ஒடிஸியஸுக்கு மரியாதை நிமித்தம் வணக்கம் செலுத்தினர். இறுதியில் எல்லோரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிடத் தொடங்கினர்.

ஒடிஸியஸின் வீட்டில் நடந்த கொடூரமான கொலை அதற்குள் ஊருக்குள் பரவிவிட்டது. இறந்து போனவர்களின் உறவினர்கள் வந்து அவர்களுக்காக ஈமக்கிரியைகள் நடத்தினர். அதற்குப் பிறகு அவர்கள் சந்தைக்கு அருகிலுள்ள மைதானத்தில் இரங்கல் கூட்டம் ஒன்றை நடத்தினர். ஆன்டினூஸின் அப்பாவான யூப்பித்திஸ்தான் முதலில் பேசினான். இந்தக் கொடூரத்துக்குப் பழிவாங்க வேண்டுமென்று அவன் இதாக்காவின் குடிமக்களிடம் கேட்டுக் கொண்டான். அவர்கள் அதை ஒப்புக்கொண்டு ஒட்டு மொத்தமாகத் திரண்டு ஒடிஸியஸிடம் வந்தனர்.

ஆனால், அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்ட மெடோனும், பாடகனும் மேடைக்கு வந்து, அங்கு நடந்த எல்லாவற்றையும் தாங்கள் கண்ணாரக் கண்டதாகக் கூறினர். ஏதோ ஒரு தேவனின்

கண்ணுக்குத் தெரியாத கரங்கள்தான் இதைச் செய்தது என்றும் குறிப்பிட்டனர். இந்த வார்த்தைகளை நம்பிய மக்கள் கடவுளின் கோபத்துக்கு ஆளாகக் கூடாதென்று உள்ளூரப் பயந்தனர்.

உடனேயே அந்தக் கூட்டத்திலிருந்த பெரியவரான *ஹாலி தெர்ஸிஸ்* எழுந்து நின்று பேசினார்: "மாற்றானின் வீட்டுக்குள் நுழைந்து, அவர்களது சொத்துக்களை எல்லாம் கண்டபடி வாரியிறைத்து நாசமாக்கியதுடன், ஒடிஸியஸின் மனைவியையும் அவமனப்படுத்த முயன்றது, இறந்து போனவர்கள் செய்த மிகப் பெரிய தவறு! அப்போதே அதையெல்லாம் தட்டிக்கேட்டுத் திருத்தாமல் விட்ட நீங்கள், அதற்காகத் தண்டிக்கப்பட்டவர்களுக்கு ஆதரவாக இப்போது குரல் கொடுப்பது அநீதி!"

இதைச் செவிமடுத்த மக்களில் பெரும்பாலோர் கூட்டத்திலிருந்து வெளியேறினர். மீதியுள்ளவர்கள் யூப்பித்திஸின் தலைமையில் ஒடிஸியஸின் வீட்டை நோக்கிக் கிளம்பினர்.

லெயர்ட்டீஸும், ஒடிஸியஸும், டெலமாக்கஸும் வலுவுடன் அவர்களை எதிர்த்துத் தாக்கினர். மென்டாரின் வடிவில் அதீனி தேவி அவர்களுக்குத் தைரியத்தையும் உற்சாகத்தையும் ஊட்டினாள். எதிரிகள் மொத்தப் பேரையும் அவர்கள் கொன்று குவித்தார்கள் என்ற நிலைமையை அடைந்தபோது, "போதும் சண்டையை நிறுத்துங்கள்!" என்று கட்டளையிட்டாள் அதீனிதேவி.

"போரையும், போட்டி பொறாமைகளையும் என்றென்றைக்கு மாக ஒரு முடிவுக்குக் கொண்டு வரவும், ஸியூஸ் தேவனின் கடுமையான கோபத்துக்கு ஆளாகக் கூடாது என்ற பயத்துடனும் அமைதியாக வாழுங்கள்!" என்று அங்கிருந்தவர்களிடம் கூறிவிட்டு, சர்வ வல்லமை பொருந்திய ஸியூஸின் மகளான அதீனிதேவி அங்கிருந்து மறைந்தாள்.

இப்படியாக இதாக்காவில் அமைதி நிலவத் தொடங்கியது.